உ

கடவுள் துணை.

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.



இதனால் சகலமான அச்சுக்கூடத் ததிபர்களுக்கும், புஸ்தக வியாபாரிகளுக்கும், இன்னும் மற்றுமுள்ள மகான்களுக்குந் தெரிவிப்பது யாதெனில்:—

இந்த யோக ஞான சாஸ்திரத்திரட்டு என்னு மிப்புஸ்தகத்தில் அச்சிட்டிருக்கிற சாஸ்திரங்களின் முடிவிற் கண்டிருக்கிற ஒவ்வொரு மகான்களிடத்திலும் ஓலையேட்டுப் பிரதிகளைச்சகல சுதந்தரத்துடன் பெற்று, என்முதாதைகள் கையாண்டுவந்த ஓலையேட்டுச் சாஸ்திரங் களையுஞ் சேர்த்து, இந்நூலுக்குப்போதுமான திரவியத்தைச்செலவு செய்து என்னால் (கெவர்மெண்ட் சட்டப்படி) ரிஜிஸ்தர் செய்திருப்பதால் இச்சாஸ்திரங்களைப் பிறர் எவ்விதத்திலும் அச்சிடக்கூடாதென்பதை இதன்மூலமாய்த் தெரிவித்துக்கொண்டேன்.

இப்படிக்கு,

இ. ராம. குருசாமிக்கோன்,

புஸ்தகஷாப் புதுமண்டபம் மதுரை.

கடவுள் துணை.

# முகவுரை,

உலகின்கண் சர்வேஸ்வரனால் உற்பத்தியாக்கப்பட்ட பலவுயிர்களிலும், சுவேதஜம்-அண்டஜம்-உற்பீஜம்-சராயுஜமாகிய நால்வகை யோனி, எழுவகைத் தோற்றம், எண்பத்துநான்கு லட்சம் ஜீவராசிகளிற் சிரேஷ்டமானது இம்மானிடப்பிறவியேயாம்; இதில் ஜெனிக்கும் சிசுக்கள்-பாலர்-குமாரர்-எவ்வனர்-விருத்தர்களாகிய ஆண்பெண்ணினங்களுக்குரிய சகலசுக துக்கங்களேயும், தர்மார்த்த காம மோக்ஷ மர்மங்களேயும், இகபர சாதனங்கட்குரிய இயல்பினேயும்,எண்ணிலாப் பிறவித் துன்பங்களேயும், இஷ்ட காமியார்த்த இன்ப ரசங்களேயும் எடுத்துக்கூறிய நூல்கள் பலவாயினும், அவற்றினே இனிது விளங்கக் கூறுவன: அகண்ட பரிபூரண சச்சிதானந்த வடிவாயுள்ள சின்மய சொரூப நிலேயைப் பெற்ற| தேவ, ரிஷி, முனி, சித்தர்கள் திருவாய் மலர்ந்தருளிய யோக ஞான சாஸ்திரங்களேயாம்.

இவ்வித சாஸ்திரங்களே வெளிவிடாது நமது முன்னோர்கள் தொன்றுதொட்டு ஓலே ஏடுகளிலெழுதி, வீடுகளில் காலே மாலே பூசையில் வைத்துப் பூசித்து வாசித்து வருவது யாவருக்குந் தெரிந்த விஷயமே. அப்படிப்பட்ட அரிய சாஸ்திரங்கள் நமது நண்பர் இ. ராம. குருசாமிக்கோனர் மூதாதைகள் கையாண்டுவந்த ஓலேயேட்டுப் பிரதிகள் பலவாம். அவற்றுட் சிலவற்றையும், கனம் ந. ராம. கணபதியாபிள்ளே யவர்களிடத்திலும், என்னிடத்திலும்; கைவசமா யிருந்த ஓலேச்சுவடிகளேயும் ஒருங்கே திரட்டிப்பார்க்கையில், பதினெண் சித்தர்கள் பாடல்களிற் சிலஇருந்தும் சில இல்லாதிருக்கவே அதையுஞ் சேர்த்து அச்சிடக்கருதி "சொல்லும் பொருளுஞ் சுவையுங் கனியும், எல்லும் ஒளியும் இருப்பதுபோல, என்பாற் பிரியா தெழில் நட்பதனே, அன்பாற் கொண்ட அருமை நண்பர்" இ. ராம. குருசாமிக்கோனரிடம் வெளியிட, அவரு மதற்கிணங்கி பலதேயங்களிற் சென்று சில ஏடுகளேச் சேகரித்துக் கொண்டு வந்தனர். அச்சமயம் தெய்வகடாக்ஷத்தால் திருப்பழனியின்கண் வசிக்கும் ஸ்ரீ கைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமி யவர்கள் ஆதீனஆச்சிரமம் மகாகைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீகைலாச தெண்டாயுதபாணிரிஷீஸ்வர சுவாமியவர்கள் தமது ஆச்சிரமத்திற் கையாண்டு வந்த பல சாஸ்

திரங்களடங்கிய ஏட்டுச் சுவடிகளை வரப்பிரசாதத்துடன் கொடுத்து, அச்சிடும்படி உதவி புரிந்தனர்கள்.

எல்லாச்சுவடிகளையும் காபிதத்தில் எடுத்தெழுதிப் பார்க்கையில் அதிற் சில சாஸ்திரங்களில் ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொருசெய்யுட்களில் இரண்டுவரியும் மூன்றுவரியுமாக இருந்ததுடன், சிலபாக்களில் எதுகை மோனை ஏதுமில்லா திருந்தன. அவைகளைப் பூர்த்தி செய்யவேண்டி, இப்புஸ்தகத்தில் அச்சிட்டிருக்கும் ஒவ்வொரு சாஸ்திரங்களின் முடிவிற் கண்டிருக்கிற நமது ஆத்மநண்பர்கள் ஒவ்வொருவரிடத்திலும் ஒருபிரதிக்கு நாலு ஓலையேட்டுப் பிரதிகளைப் பெற்று அவற்றுள் வரைந்துள்ள லிகிதப் பிரகாரம், அநேக மகான்களின் உதவியைக்கொண்டு என்சிற்றறிவுக் கெட்டியவாறு சீர்திருத்தஞ் செய்ததுமன்றி, இதற்கு தேவரிஷிமுனிசித்தர்கள் திருவாய்மலர்ந்தருளிய "யோகஞான சாஸ்திரத்திரட்டு" எனத் திருநாமஞ்சூட்டிப் பன்னிரண்டு பாகங்களாக அச்சிட்டிருக்கின்றனன்.

இச்சாஸ்திரங்களை யெல்லாந்திரட்டி ஒன்றுசேர்த்து அச்சிடுவதற்காகப் பொருட் செலவும், தேகப்பிரயாசையும் எடுத்துக்கொண்டு சதா துணைக்கருவியாயிருந்த மதுரை புதுமண்டபம் புஸ்தகவியாபாரியும், ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் பிரஸ் சொந்தக்காரருமாகிய நமது நேயர் இ. ராம. குருசாமிக் கோனாரவர்களது நன்றியும், தாலபத்திர சாஸ்திரச்சுவடிகளுதவிய ஏனையநண்பர்களது நன்றியும் யானென்றும் மறக்கத்தக்கனவன்று,

இவ்விதம் பன்னிரண்டு பாகமாய் அச்சிட்டிருக்கிற இவ்வரிய பெரிய சாஸ்திரங்கள் ஒருபுஸ்தகத்திலிருப்பது மற்றொரு புஸ்தகத்திலில்லாதிருப்பதால், பன்னிரண்டு வாலியத்தையும் பார்ப்ப தவசியம் ஆகையால் ஒவ்வொருவரும் இதனைவாங்கிக் கையாண்டு வருவீர்களென நம்புகின்றனன்.

இங்ஙனம்,

☞ த. குப்புசாமி நாயுடு,

மதுரை.



உ

குருவே துணை.

# தேவ, ரிஷி, முனி, சித்தர்கள்,

திருவாய் மலர்ந்தருளிய

# யோகஞான சாஸ்திரத் திரட்டின்

முதற் பாகத்தில் சொல்லி யிருக்கிற

# முக்கிய விஷயங்கள்.



ஐயா! இந்த முதற்பாகத்தில் திருமூலர், தெட்சணாமூர்த்தி, கணநாதர், சுப்பிரமணியர், போகர்முதலிய தேவரிஷிகள் திருவாய்மலர்ந்தருளிய நாற்பத்தொரு சாஸ்திரங்களின் உண்மையான விஷயங்களை இதனடியிற் காணலாம். அவையாவன:

முதலாவது: திருமூலர் ஞானம் எண்பத்து நான்கில், இடகலை பிங்கலை சுழிமுனையில் வாசியியங்கும் மர்மங்களையும், வசப்படுத்துங் கர்மங்களையும், வல்லப எந்திர சத்தி சித்தி மூலமந்திரங்களையும், கெவுனரசக் குளிகைகளையும்;

2-வது திருமூலர் ஞானோபதேசம் முப்பதில், அவயவங்களில் அமைந்துள்ள ஆறாதாரச் சக்கரத்தின் நிறம், இதழ் அட்சரங்களையும் சிவயோக சித்திகளையும்;

3-வது: திருமூலர் நடுவணை ஞானம் முப்பதில், நடுநாடிக்குரிய லட்சண மூல அட்சரங்களையும், நாசியிலோடும் வாசியினாற் சிவ யோக ஞான தீட்சைகளையும்;

4-வது: திருமூலர் ஞானக்குறி முப்பதில், நயனேத்திரத்தால் நாசி நுனி நாட்டமும், புருவநடுச் சோதி சொரூப நிலையும், அகக்கரணம் புறக்கரண சுத்தி விபரங்களையும்;

5-வது: திருமூலர் சோடசஞானம் பதினாறில், நந்தியடிக்கொடிகம்பத்தின் விபரங்களையும், கதிர்மதி பூரணப்பிரகாசக்காட்சிகளையும்;

6-வது: திருமூலர் ஞானம் பதினொன்றில், மூலாதாரத்தில்அடி நடுமுடி அண்டம் அகண்டமென்றதற்குரிய மூலஅட்சரங்களையும்;

7-வது: தெட்சணாமூர்த்தி ஞான சூஸ்திரம் எட்டில், சிவயோகத்தோடு பரவெளி சொரூபமும், சிவசக்தி சொரூபமும், திருவாசியாலே மேருகிரி தீபத்தி னொளியையும்:

8-வது: தெட்சணாமூர்த்தி ஞானசூஸ்திரம் பத்தில் நாசிவழி யீதேறிவாசிபார்க்கும் நாட்டத்தையும், மாசிலாச் சிலம்பொலி ஓசை கேட்கும் மார்க்கத்தையும், ஏகாந்தபூரண ஏகாட்சர விபரத்தையும்;

9-வது: தெட்சணாமூர்த்தி ஞானபஞ்சாட்சரம் ஆறில், சத்தி பஞ்சாட்சர தீட்சையும், முத்திக்கு வித்தான மூல ஏகாட்சர தச தீட்சையும், அதற்குரிய விபரங்களையும்;

10-வது: தெட்சணாமூர்த்தி பூஜாவிதி பத்தில் ரசமணி கட்டும் நவியத்தையும், செபமாலையால் வருஞ்சித்தியையும், வேதைசெய்யும் விபரத்தையும், சிவயோகத்துக்குரிய சிவபூஜாவிதி சித்திகளையும்;

11-வது: தெட்சணாமூர்த்தி சுத்தஞானம் பதிமூன்றில், கஞ்ச மலர்க்காலை மிஞ்சாது தூக்கித் திருநடன மாடிய அம்பலவாணன் அவையின்கண் திருவாசி நாடியும், பஞ்சபூத அட்சரங்கூடியும் ஆகா யம் நின்றநிலை யறியும் விபரங்களையும்;

12-வது: தெட்சணாமூர்த்தி ஞானச்சுருக்கம் அஞ்சில், ஆறு தலந்தாண்டி அறிவுடன் கூடுதற்கு ஆதாரமான அட்சரமும், அதற் குரிய மவுன தீட்சையும், வாலைசித்தி வல்லபங்களையும்;

13-வது: கணநாதர் ஞானோபதேசம் பதினாறில் கதிர்மதி சுழி முனையைக் கண்டகாட்சியும், களிப்புற்று அடிமுடி காணும் பிர்ம நிஷ்டை முதலியவைகளையும்;

14-வது: சுப்பிரமணியர் ஞானச்சுருக்கம் ஒன்றில் சேண்வரை மனஞ்செலுத்திச் சிறுவாசற்குள்ளே சென்று அசைபைப்பார்த்து, ஐம் புலனை யண்டமதிற் சேர்த்துச் சிலம்பொலியுங் கேட்கச் சிவசோதி முதலிய தெரிசன விபரங்களையும்;

15-வது: சுப்பிரமணியர் ஞானச்சுருக்கம் இரண்டில், யோக ஞான சாதனத்துக்குரிய மூலமந்திர மவுனாட்சரங்களையும், ரவிமதி சுழிமுனை நாடி யுதித்தொடுங்கும் விபரங்களையும்;

16-வது: சுப்பிரமணியர் ஞானானந்தம் அஞ்சில், நாவினாலடைக் காமல் நன்மனதை யுண்ணாக்குநேராய் அண்டவுச்சிதன்னில்மேவிப் பாயும் வாசியையும், அவ்வாசி பிடரிமார்க்கங் கசிந்துருகி யிரங்கும் விபரங்களையும்;

17-வது: சுப்பிரமணியர் சுத்தஞானம்எட்டில், பூரணகுண்டலி சத்தியின் சித்தியும், நந்திகொலுவிருப்பு ஆரணத் துட்பொருளாகிய அட்சரம் அதன் உயிரட்சரம் அஷ்டமாசித்தி விபரங்களையும்;

18-வது: சுப்பிரமணியர் ஞானம் பதினாறில், இச்சையாய்ச் சிறு வாசற்குள்ளேகி முச்சந்தி நடுவிற் பட்சமாய்ச் சென்று நிச்சயமாய் நின்றதையும், சுத்தகெங்கை செல்லுதற்குரிய வேதையின் சித்தி விபரங்களையும்;

19-வது: சுப்பிரமணியர் ஞானம் பன்னிரண்டில், பிரியாரவிமதி பிறக்கும் வாசியும், பிரணவ மூலமந்திரம், துரியந் துரியாதீதம் மூல கணபதி பூஜாவிதியும்;

20-வது: சுப்பிரமணியர் ஞானம் இருபதில், அஷ்டகர்மம் ஆகாசக் கெவுனகுளிகை, சிவயோகம், சத்திசிவபூசை, காயாதிகற்ப வாதமுறை முதலிய விபரங்களையும்;

21-வது: சுப்பிரமணியர் ஞானம் இருபத்தைந்தில், வேதவியாசர் விபரீதமும், மேலான திரிமூர்த்திகள்செயலும், பிரளயகாலத்தில் நிலைநிற்கும் வஸ்துமுதலிய விபரங்களையும்;

22-வது: சுப்பிரமணியர் ஞானம் முப்பத்திரண்டில் அஷ்டாங்க யோகமும், மூலமந்திரமும், பூஜாவிதியும், சாதனவிபரமும், பிராணயாம விபரமும், பராசத்தி சித்திவிபரமும், அதற்குரிய மூலமந்திர சித்தி விபரங்களையும்;

23-வது: சுப்பிரமணியர் ஞானவிஞ்சைமுப்பதில், அறுகோண திரிகோணமும், அதற்குரிய மூலமந்திரமும், அஷ்டகர்ம எந்திர மந்திரங்களும், அதன்பூசைக் கிரமங்களையும்;

24-வது: சுப்பிரமணியர் ஞானமந்திரம் ஆறில், சகலகாரியமும் சடாட்சர மூலமந்திரத்தாற் சித்தியும், சர்ப்ப விஷங்கள் எல்லாந் தானே விலகவும், அதற்குரிய பூஜாவிதி முதலிய விபரங்களையும்;

25-வது: சுப்பிரமணியர் தேவிஞான தெரிசனம் பத்தில், மவுன சத்தி, நாதசத்தி, மணிபூரணசத்தி, புவனம் அண்டம் பொருந்தி நின்ற விபரமும், வேதாந்த சித்தாந்த விபரங்களையும்,

26-வது: சுப்பிரமணியர் சிவயோகம் நாற்பதில், மனதை வசப்படுத்தி, வஸ்துவை யடையும்பொருட்டு யோகசாதனத்தால் ஜீவாத்மாவை பரமாத்மாவுடன் ஒன்று சேர்க்கும் விதியையும், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம் சமாதி என்ற அறுவகை யோகத்தின் விபரங்களையும்;

27-வது: சுப்பிரமணியர் ஞானம் முப்பத்துமூன்றில், கற்ப முறையும், அண்டவுச்சியில்அருணான்மதிசுடர்மூன்றுஞ்சேர்ந்து ஆடலும், சாகாக்கால் வேகாத்தலை போகாப்புனல் என்றவிபரங்களையும்;

28-வது: சுப்பிரமணியர் ஞானக்கக்கிஷம் ஐம்பத்தைந்தில்சத்தி, சக்கரம், அஷ்டகர்ம சக்கரம், அதற்குரிய மூலமந்திரத்தினால் சகல சித்தாடும் விபரங்களையும்;

29-வது: சுப்பிரமணியர் சுத்தஞானம் நூறில். ஆகாயப்பெருமையும், ஆதியந்த மிரண்டு மொன்ருய் அல்லும் பகலும் அற்றவிடத்திற்பூரண நிலைமையிற்பொருந்தியும், பிர்மா-விஷ்ணு-ருத்திரன்என்ற திரிமூர்த்திகள் தெரிசனமும், நாசிநுனி சுழிமுனை நாடியும், தச நாதம் மதியமுத முதலிய விபரங்களையும்;

30-வது: சுப்பிரமணியர் ஞானசைதன்யம் நூற்றெட்டில், ஞானசத்தி மூலமந்திரமும், தசதீட்சையும், இடைகலை பிங்கலை சுழிமுனைநாடியின் விபரமும், பிர்மலட்சணமும், நாசிநுனி நாட்டமும், பஞ்சபூத தேவதையும், அதற்குரிய அட்சரங்களும், சொரூப தெரிசன சித்தியும், குருவுபதேசமும், சரியை-கிரியை-யோக-ஞானமென்கிற விபரங்களையும்;

31-வது: போகமகாரிஷி ஞானசூஸ்திரம் ஒன்றில், நிஷ்டைக்குரிய அட்சரங்களும், அதன் சித்திவிபரங்களையும்;

32-வது: போகமகாரிஷி சமாதிநிலை பத்தில், சமாதிக்குரிய லெட்சணங்களையும், அதற்குரிய மூலமந்திர சாதனவிபரங்களையும்;

33-வது: போகமகாரிஷி ஞானசூஸ்திரம் எட்டில், சவுக்கார குருமுடிக்கும் பாகமும், வேதையின் விபரமும், சிவயோக சித்தி விபரங்களையும்;

34-வது: போகமகாரிஷி திருமந்திரஞானம் பத்தில், மூலாதார முதல் சுழிமுனைதுரியாதீத அவஸ்தைக்கு இருப்பிடமும், நந்திபீடம் அஷ்டசத்திவஸ்துயானம், மூலத்தினுண்மை சுழிமுனை நாட்டம்நிருவிகற்பசமாதி விபரங்களையும்;

35-வது: போகமகாரிஷி சிவயோகஞானம் பன்னிரண்டில், சுழிமுனை துரியம்துரியாதீதம் மணிபூரகம் பஞ்சதேவதை தெரிசனமும், இடகலைபிங்கலை சுழிமுனைமேல்வாசல் சமாதிநிஷ்டை தியானயோகமும், பூரணை அமாவாசி ரேசகபூரக கும்பக வாசிதாரணை அமுதருந்தும் விபரங்களையும்;

36-வது: போகமகாரிஷி ஞான பூஜாவிதி பதிமூன்றில் நவகோண சக்கரமும், அதற்குரிய மூலமந்திரமும், அச்சக்கரத்தைப் பூசித்தாலடையும் பலன்களையும்;

37-வது: போகமகாரிஷி அஷ்டாங்கயோகம் இருபத்திரண்டில் இடகலை பிங்கலை சுழிமுனை யிரேசக பூரக கும்பகம் பிராணயாடம், கலைகள்மாறியோடலும், மதியமுதமுண்ணலும், கெவுனமணி அந்தக்கரணசுத்தியும், காயகற்ப செந்தூர லேலைதயும், அஷ்டாங்க யோக சித்தியும், ஏகாட்சரப்பெருமையினை விபரங்களையும்;

38-வது; போகமகாரிஷி முப்பு சூஸ்திர ஞானம் ஐம்பத்தொன்றில், வாசியோடும் வழியும், வழலைமுப்பு குருமுடிக்கும் வகையும், மகத்தான முப்பூ விளையும் பூமி முதலிய விபரங்களையும்;

39-வது: போகமகாரிஷி ஞானகற்ப சூஸ்திரம் ஐம்பத்துநான்கில், காசினியோர் கொண்டாடுங் கறியுப்பு செயநீர், சுண்ணம், குருசுச்சுண்ணம், வேதை, சரக்குகள் கட்டு புளியுப்புக் காரசாரக் கருக்கள், உபசர சரக்குகளின் விபரங்களையும்

40-வது: போகமகாரிஷி ஞானசாராம்சம் நூறில், விந்துநாதகலையும் ரவிமதிமுப்பும், பூநீர் எடுக்குங்காலமும், வெடியுப்புசெயநீரினல் சரக்குக் கட்டுகளும், உருக்கினமும்கற்பமுறை, சிவயோகம் கெவுன மார்க்கம், இடகலை பிங்கலை சுழிமுனை வாசியால் ரேசகபூரக கும்பகம் உதிக்குமிடமும், ஒடுங்குமிடமும், அண்டம் அகண்டம் பஞ்சபூத தேவதை, அதற்குரிய மூலமந்திர விபரங்களையும்;

41-வது: போகமகாரிஷி மெய்ஞ்ஞான போதகம் இரண்டில், வாசியின் மூலத்தையும், மதியமுதமுண்ணும் வழியையும், நாசிமுனை நாட்டக்குறிப்பையும், ஆத்மசூக்ஷமலெட்சணங்களையும், தெளிவாய்த் தெரிவித்திருக்கின்றன.

இம் முதற்பாகத்திற் சிற்சில யிடங்களில் மறைவாயும் மனதுக்கெட்டாத வழிதுறையாயும், வாக்குவல்லபமாயும் வழுத்தியிருப்பதைக்காணவேண்டுமானல் இதனடுத்தஇரண்டாம்பாகத்தைப் பார்த்தால், அதனுண்மை நுட்பங்கள் ஒவ்வொன்றும் வெளிப்படையாய் நன்கு விளங்கும். ஆகையால் யாவரும்சந்தேகமற இரண்டாம் பாகத்தை அவசியம் வாங்கி வாசித்துப்பார்க்கும்படி கோருகிறேன்.

ராம. குருசாமிக்கோன், மதுரை.

உ

பரமபதிதுணை.

# தேவரிஷி முனி சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

யோக

# ஞான சாஸ்திரத் திரட்டு.

## திருமூலர் ஞானம் அ௪.

வெண்பா.

அருவுருவாம் ஞான மனந்தக் கருமானஞ்
சுருதிமுடி வான சுருக்கம்—பருதி
சுடர்மதியும் பாய்ந்து சொலவர் தமுதமுண்ட
கடகரியின் பாதமதே காப்பு.

ஞானம்.

அரிக்குமுத லெழுந்தசுழி முனையைப்பாரு
அதிலடங்கும் முனையடக்க முனையைப்பாரு
நரிக்குமதிற் சிங்கமடா வலுவைப்பாரு
நாலுமது பூரணத்தா யாட்டைப்பாரு
சுருக்கமதை விரித்துநன்றாய்த் தோன்றச்சொல்வேன்
சுழிமுனைக்கு ளதிதமுமாய்த் தோன்றுந்தோன்றும்
அரிக்குமுத லெழுந்தசுழி முனையாம்பிள்ளை
யாரதிலே யைம்பதுமா மொன்றுமாச்சே.

ஒன்றான நந்திகுரு வாசானென்னை
யுடனிருத்தி யுபதேசம் நன்றாய்ச்சொன்னார்
நன்றான போகருக்கு நாமுஞ்சொன்னோம்
ரகசியமாய்க் கொங்கணருக் கவர்தான்சொன்ன

குன்றான வுபநிடதக் குறிதான்கண்டாற்
கோடிவித்தை நவகோடி தொந்தமாகும்
அன்றாறு ருபநிடத முமைக்குச்சொன்னார்
அந்தரங்க முப்பத்தி ரண்டுநாலே. (2)

நாலெட்டுப் பூரணமே நாலாங்காலை
நாமுரைக்கச் சித்தியெல்லா மறிந்தாரையா
காலெட்டு ரண்டான காலைக்காணக்
கணபதிக்குக் கைமுறையாய்ப் பூசைபண்ணி
வேலெட்டு ரெண்டான முனையைக்கண்டு
மேலாறு கோணமடி மூலம்பாரு
சேலெட்டு மயில்வேலன் சத்திவேலைச்
செங்காத்திற் பிடித்திருந்த கையைப்பாரே. (3)

கையைப்பார் பன்னிரண்டு கையுமாச்சு
காணரிது காலிரண்டும் பதினாறாச்சு
மெய்யப்பா பூமியின்கீழ் காலையூணி
விசித்திவரை யஞ்சான வெழுத்தைக்காணச்
செய்யப்பா பூசையுமஞ் செழுத்தினாலே
தீர்க்கமடா யடிமூலம் பெலக்கக்காலை
வையப்பா யூணியுரைத் தெழுத்தையோது
வழிமுத்திப் பாதாதி கேசந்தானே. (4)

கேசாதி பாதமுத லடிதான்மூலங்
கெட்டியா யடிப்படையைப் பெலக்கப்போடு
தேசாதி தேசமைம்பத் தாறிற்பாரு
செப்புவார் பாஷைபதி னெட்டும்பாரு
நீசாதி பேதனங்கள் பண்ணவேண்டாம்
நீயேதான் தானவனாய் நிலைப்பா யப்பா
பூசாதி யுறவின்முறை யுனக்குமேது
உத்துப்பா ரொன்றுமிலை யுலகந்தானே. (5)

## திருமந்திரம்.

தானவ னாகித் தன்னுளே தானாய்
ஆனவன் நீயா மடிபிடி மூலம்

நாணவ ஞானி யென்று நடுவினை
தேனவன் மாறு திகட்டா தமுதமே. (6)

அமுதத்தை யீவா ளானந்தச் சோதி
அமுதத்தைக் கொள்ள யாருக்கு மேலாய்
அமுதத்தைக் கொள்ள யாரு மறியார்
அமுதத்தை விட்டா லாகாது சித்தியே. (7)

சித்திக்கு முத்தி யெட்டிட னிரண்டையும்
அத்திக்கு மென்று அமுதத்தை வாங்கிப்
பத்திக்கு ளஞ்சை மவுனத்துட் டாக்கி
யெத்திக்குஞ் சத்தி யிருந்ததைப் பாரே. (8)

பாரே சுருதி பராபர மாகும்
பாரே சுருதி முந்திட மாகும்
பாரே சுருதி பரையுமம் பரனும்
பாரே சுருதி பரநாடி மூலமே. (9)

மூலத்தைப் பத்தி முனிநாக் கோதி
மூலத்தைக் கண்டு கொண்டுமீண் டச்சர
மூலத்தி னுள்ளே முதலெழுத் தாதி
மூலத்தி லாதி முத்தியுஞ் சோதியே. (10)

சோதியடா நவரத்தினச் சோதியாகிச்
சோதித்துத் தள்ளுதள்ளு கிரிகையாகா
ஆதியடா சூட்சமது யோகம்பாரு
அனாதியடா சூட்சாதி ஞானமப்பா
நீதியடா வேதாந்தஞ் சித்தாந்தந்தான்
நிகழ்த்துகிறேன் கற்றறிந்தோர் கிரிகைசெய்யப்
பாதியடா பிறையணிந்தோன் றானுஞ்சித்தன்
பதினெட்டுச் சித்தாதி மூலந்தானே. (11)

மூலமென்றால் மும்மூல மேகமூலம்
முதலாதி மூலவர்க்கங் கைலாசவர்க்கம்
மேலுமடா சட்டைமுனி நம்மைக்கண்டு
மேன்மைபெறக் கைலாச வர்க்கமென்றார்

காலமடா அவர்க்குநல்ல காலமாகக்
கண்டதினால் வாதமுறை வெளியாய்ப்பாடி
ஞாலமதிற் போட்டதினுற் கிழித்துப்போட்டேன்
நான்சொன்னே னிந்தநூல் தன்னைப்பாரே. (12)

இந்தநூ லெண்ணூறு முதலேபாடி
யிருந்ததிலே தெரிந்தெடுத்துச் சுருக்கமாக
இந்தநூல் பத்தெட்டாம் நாலுங்கூட்டி
எண்பத்து நாலுக்கு எடக்கமாக
இந்தநூ லறிந்துகரு விடையம்பார்த்தால்
யெட்டிரண்டு மெய்தும்வே தாந்தப்போக்கு
அந்தமடா ஆதியந்தம் கருவைநன்றாய்
அறைபுகிறேன் வெட்டவெளி யாகத்தானே. (13)

வெளியிற்றான் போடாம லடக்கங்கொள்ள
வேதாந்த சித்தாந்தக் கருவைக்கேளு
வெளியிற்சொல் லாதேயுச் சிதமாய்ச்சொல்வேன்
வெண்பட்டுக் கதிர்பூசஞ் சேரும்நாளில்
வெளியிலே குளித்தரையி லிருக்கிக்கட்டி
வேளையடா மதியமதிற் சுனைநீர் தன்னில்
சுளியாமற் செல்லுமரை யளவாய்நீரிற்
றோன்றிநின்று சுழியெழுதி முங்கிடாயே. (14)

முங்கியபோ தங்குசிங்கு சிவாயவென்று
முழுகிவாய் மூச்சடங்கும் வரைக்குமோதி
முங்கியபோ தெட்டுவிசை யிதுதான்சொல்லி
முங்கியபின் கரையேறும் மூலஞ்சொல்வேன்
அங்கனையே நின்றுஅய்யுங் கிலியுஞ்சவ்வும்
ஆதியென்ற மூலமது மூக்கால்மூலந்
தங்கியது மூலமரைச் சணத்திற்சித்தி
தான்ஜலத்தை விட்டுகரை யேறுவாயே. (15)

## திருமந்திரம்.

ஏறிடு மூன்ஐயுங் கிலியும் ஓது
மூறிடு சவ்வை மூன்று தாமதைக்

கூறிடு பின்கரை யேறி யிருந்திடு
நேருகீழ் முகந்திரு நீற்றையுங் கேளே. (16)

கேள்திரு நீற்றைக் கெட்டியா யிடது
வாழ்கையில் வைத்து வரைவாய்ப் பிரணவம்
வேள்கையி லாறு கோணமு முன்னிடு
தாழ்கையு மில்லை சண்முக மாமே. (17)

சண்முக மாறு சடாட்சரம் போடு
வுண்மையா யதினுள் ளுமைதிரி கோணம்
நன்மையா யதினுள் நாட்டிடு விந்து
கண்மையா யதினுட் கணபதி சுழியே. (18)

சுழிசுழி யேகாச் சுழிமுனை யாகும்
வழிவழி யிதுவே வழிதுறை யாகும்
மொழிமொழி சடல மொழிதிரு மொழியான்
தெளிதெளி திருவெண் ணீற்றையுந் தெளியே. (19)

ஏக நிராமய மேகவெண் ணீறு
பாகமு மிடமது கரத்தில்வெண் ணீற்றை
யாகம மெனவே யணிவிரா லாலே
தேகமுஞ் சித்தி பணவிடை சேரே. (20)

சேர்ப்பதுதா னுபநிடதஞ் சேர்த்துக்கொள்ளாத்
தியானமது சடாட்சரமே தியானம்பண்ணி
நாற்பதுநா ளிப்படிமண் டலந்தான்கொள்ள
நரைதிரையு மில்லையடா நமனுமில்லை
சேர்ப்பதுதான் பிங்கலையிற் சேருசேரு
ஜெயமாகுங் கிரிகையிது விடையிற்சேரு
சேர்ப்பதிலே யிடைசமனுய்ச் சேர்த்துக்கொண்டாற்
சிவசிவா சொல்லரிது செயலைத்தானே. (21)

செயலான செயலிதுவே மைந்தாமைந்தா
சேர்ந்திருப்பா ருமைபாகர் தேகஞ்சித்தி
மயமான சிவமயமே வசியமெட்டும்
வலுத்தசித்தி யெட்டெட்டு மாடும்பாரு

பயமேது மில்லையுப திடத்தைச்சோதி
பருவமடா பக்குவமாங் காலமானால்
நயமாக விந்நூல் பார்த்துக்கொள்வாய்
நாலெட்டும் பொருந்துமிதை நவின்றிட்டேனே. (22)

இட்டசுழி விட்டகுறை யெழுத்துமேது
இடம்வலமாய் விட்டகுறை யெட்டிரெண்டாய்க்
கட்டிவைத்த சுருக்கமடா விந்நூல்தான்
காரணமாய் நந்திகுரு சொன்னார்சொன்னார்
பட்டமரம் பாலூறும் பாவிமக்கள்
பாதகரே வீணலைந்து திரிந்தாலேது
கிட்டுமடா வுங்களுக்குங் கிரிகையாமே
கெடுபுத்தி நினையாதே நூலைப்பாரே. (23)

நூல்பார்த்தாற் கருவிடையம் நிறுத்திப்பாரு
நுணுக்கமாய் மனதிணங்கி வணங்கிப்பாரு
கால்பார்த்துப் பிழைப்பதற்கு விந்நூல்காலாய்
கண்டறிவா ருலகத்திற் காணேமப்பா
நூல்பார்த்துக் காலறிந்தோ ருலகமீதில்
நுவலுகிறேன் கோடியிலே யொருவனுண்டு
மேல்பார்த்து அடிபார்த்து முடியைப்பார்த்து
விட்டகுறை தனையறிந்து கொள்வான்றானே. (24)

கொள்ளுமனங் கொள்ளாம லலைந்துபோனாற்
கூடழிந்து போகுமது மண்ணாய்ப்போச்சு
கள்ளமனந் துள்ளாமற் கவரிமான்போற்
கட்டுண்டு மனமாண்டா வினத்திற்சேரு
உள்ளமது கவரியென்ற மானைக்காண
உத்துப்பா ரஞ்சுமொரு பெண்ணாய்ரூபம்
எள்ளளவுந் தப்பாது கருமானந்தான்
இந்தநூல் வேதாந்தச் சுருதியாமே. (25)

## திருமந்திரம்.

சுருதி முடிந்திடஞ் சொல்லா ரொருவரும்
பருதி யசதி மவுனத்துட் பாரு.

கருதி யிருந்திடங் காரண குருவாம்
உறுதி யிதுவென் றுரைத்தனர் நந்தியே. (26)

நந்தி குருவா யிருந்திட நாமும்
முந்தி யிருந்தோ மூலரு மெனவே
யெந்தி யெழுந்து யேகமுந் தானாய்
அந்தியுஞ் சந்தியு மனேகமு நாமே. (27)

நாமே நந்தி நாமே யவனாய்த்
தாமேக மாகச் சங்கற்ப மாக
வோமே யாமென் றுனது தானா
யாமே பதினெட் டாகமு மாமே. (28)

ஆகமும் பதினெட் டாகமு மானோந்
தாகம தாகச் சாத்திரஞ் சொன்னோம்
பாகம தாகப் பார்த்திடிற் சுருக்கந்
தேகமு மாகப் பார்க்கவுஞ் சித்தியே. (29)

சித்திக்கும் ஞானமும் போகமும் சித்தி
சித்திக்கும் வாதமுங் காயமுஞ் சித்தி
சித்திக்கு மந்திரம் தியானமுஞ் சித்தி
சித்திக்கும் நினைந்த கருமமுஞ் சித்தியே. (30)

சித்திக்குங் கருமானஞ் சொல்லக்கேளு
திருவான லெட்சுமிப்பெண் ணறிந்தமூலஞ்
சத்திக்கு முன்னுதித்த சத்திமூலந்
தன்குலத்திற் சாதிரெண்டாய்த் தழைத்தமூலம்
புத்திக்கு எறிந்துவிந்த மூலமூன்றும்
புதுமையுள்ள கருவேம்பின் சாத்தாலாட்டி
பத்திக்குங் காடையெருப் புடத்திற்போடப்
பரமசிவ னவுழ்தமென்ற பற்பந்தானே. (31)

பற்பமென்று விதற்குநிக ரொன்றுமில்லை
பாங்கான ரசபற்ப மிதற்குமீடோ
கற்பமென்றுற் சங்கற்பம் விகற்பமாருங்
காந்தரச செந்தூர மிதற்குமீடோ

உற்பனமாம் பூபதிக ளிதற்குமீடோ
உச்சிதமாம் மாத்திரைக ளிதற்குமீடோ
பற்பமென்றால் மகாபற்ப மவுனபற்பம்
பருதிமதி சுடர்மூன்றும் பற்பமாமே. (32)

ஆமப்பா பணவிடைதான் பற்பங்கேளு
அனுப்பானந் தேனிலிதைக் கொண்டாயானால்
நாமப்பா ஒழிக்கறியோம் வாதபித்தம்
நசியாத ஐயத்தா லெழுந்தநோய்கள்
போமப்பா முக்காத மோடிப்போகும்
புதுமைபற்ப மிதனைதிரி கடுகிற்கொள்ள
வோமப்பா வாண்டொன்று கடிகையாக
உன்வயது நூறுகுந் துகையைப்பாரே. (33)

துகையென்று லொருநாளிற் பூரணத்தோட்டங்குஞ்
சுவாசமடா துகைபார்த்தாற் பத்தும்பாரு
மிகையொருநா ளில்லையடா வயதைப்பாரு
வெற்றியடா சொன்னேநான் சூட்சங்கொள்ளு
பகையேது மில்லையடா காலன்மாண்டான்
பதனம்வெகு சூதானம் முறியேடாகுஞ்
செகமாயை யாடுகிற ஆத்தாள்பாதந்
தினசரியும் பூசித்துச் சூட்சம்பாரே. (34)

சூட்சமாய்ச் சொல்லுகிறே மாத்தாள்பூசை
சுருக்கமடா முன்சொன்ன நீறுதன்னை
சூட்சமாய்ப் பற்பத்தோ டிதையுஞ்சேர்த்துச்
சொல்லுவோம் மூன்றெழுத்தை மவுனமோது
ஆச்சரியந் தாயினது தியானந்தன்னில்
அருமையடா வெண்ணீற்றின் பற்பமீவாள்
தாட்சியொன்று மில்லையடா சொல்லக்கேளு
தாய்தந்தை பற்பநீர் தன்னைவாங்கே. (35)

திருமந்திரம்.

வாங்கிடும் போது வாவென வாங்கி
நாங்கதி யெனவே ரகசிய மவுனம்

பாங்கிது பாரு பற்பவெண் ணீற்றை
யாங்கது கூட்டி யரைத்திடக் கேளே. (36)

கேள்கெடி காரங் கிரிகைக்குங் கெட்டி
பாள்குளிஞ் சிமிளைப் பணவிடை சேரு
நாள்பதி னஞ்சு நன்று யுரைத்து
கேள்நவ குளிகை கெட்டியாம் பாரே. (37)

கெட்டியாங் குளிகை கெவுனமு மாகும்
ரெட்டையிற் றம்பனங் குளிகையாம் வசியம்
மட்டிய வில்லை யழைப்பு மோகனந்
திட்டமுச் சாடனம் தீர்க்கமு மாமே. (38)

ஆமிது பேதன மாரண மாகும்
ஆமிது வித்து வேசன மெட்டுந்
தாமித மில்லை தவறுது சொன்னோம்
நேமித மிதுவே நினைவறி வோர்க்கே. (39)

அறிவோர்க் கிதுவே யெட்டெட்டு மாடும்
அறிவோர்க் கிதுவே அடிமூல மாகும்
அறிவோர்க் கிதுவே ஆதியு மந்தமும்
அறிவோர்க் கிதுவே யாகுங் குளிகையே. (40)

ஆகுமது குளிகையதி சயந்தான்கேளு
அமுக்கிரா தம்பனத்துக் காகுமாகும்
எகுகவு தும்பைபுச்சா டனமேசெய்ய
எட்டியுமா ரணத்துக்குச் சிதமேயாகும்
மோகனஞ்சீ தாதேவி வசியஞ்செய்ய
முக்கியமா மழைப்புக்குத் தகுந்தைவேளை
வேகமடா தோகைமயில்பே தனமா விந்து
வேடணத்துக் காணபழம் பாசிதானே. (41)

தானென்ற தெட்டுவகைச் சாத்திறலே
தவறுது குளிகைதனைத் திலதம்போட
வானென்ற தேவரொடு பிரமன்மாலும்
மயங்கிடுவார் தப்பாது மைந்தாகேளு

நானன்றாய்ச் சோதித்துப் பார்த்தேனிந்த
நவகுளிகை வெகுசுருக்கு மூலஞ்சொன்னேம்
ஊனென்ற வுபதிடதப் போக்கினாலே
உற்றமொழி நந்தியுப தேசித்தாரே. (42)

உபதேசம் நந்திசொன்ன குளிகையப்பா
உலகத்தி லுத்தமர்கள் பார்த்துக்கொள்ள
உபதேச மாகவுந்தான் நூலிற்பாட
உற்பனமாய்ச் சொன்னேம்நாம் பொய்யோயில்லை
சபதமடா பேசியிந்த வுலகத்தோரைத்
தம்பனத்தால் மயங்கிடவே கட்டுமப்பா
நியமொருநாள் வராதுவுப நிடத்திற்சோதி
நினைத்தபடி கருமமெட்டு மாடுந்தானே. (43)

ஆடுதற்கு இப்படியே குளிகைசெய்து
ஆடினாற் பாவகன்ம மாகாதப்பா
தேடுதற்கு யிதைவிட்டுக் குளிகைசெய்யச்
சேர்க்கையெட்டுத் தொழிலில்நன்று யாடாதையா
நாடுதற்கு வணங்குமடா வுலகத்தாட்டு
நம்புதலாய் நீசொன்ன படியேயாடும்
பாடுதற்குச் சலிப்பாமென் றெண்ணவேண்டாம்
பத்தியுடன் மனம்பூண்டு நூலைப்பாரே. (44)

நூல்பார்த்தாற் றண்டக்க முனிநூல்பாரு
நூற்றெட்டுக் கொங்கணர்பட் சணியைப்பாரு
நூல்பார்த்துக் கரையேறப் பூரணநூல்பாரு
நொடிக்குளேகண் சுழித்துகடித் திடத்திற்பாரு
கால்பார்த்துக் காலடங்கும் கருத்தைப்பாரு
கவனம்வைத்து நவமூல மொன்றாய்ச்சேரு
நால்பார்த்தவ் வாறுபோல் தூங்குதூங்கு
நவமூல மப்பவல்லோ தோணும்பாரே. (45)

திருமந்திரம்.

தோணும்மூம் மூலந் துலங்குஞ் சுழிமுனை
தோணும் பருதி சுருதி முடிந்திடந்

தோணும் பருதியிற் சொக்கிடுந் துன்மதி
யாணுவ மத்திமே லதீதமு மாமே. (46)

ஆமிது சித்தி முத்தியு மாகும்
ஆமிது கடைசி முதல்நடு வாகும்
ஆமிது நம்பா லோமெனு நவமாய்
ஆமெனு முபாய மமர்ந்திட மூலமே. (47)

மூலத்தி லைம்புனல் முச்சுடர் காலாய்
மூலத்திற் பின்னொளி முத்தியு மாகும்
மூலத்திற் றிலதமுக் கோணந் தோன்றிடும்
மூலத்தி லப்பா மூன்னூ லு மானதே. (48)

மூன்னூற் குருவாய் முடிந்தது நந்தி
யென்னூ லெனவே யியம்பிடச் சொன்னோம்
நன்னூ லென்பது நாலுடன் சுருக்கம்
இன்னூ லறிந்தபேர்க் கிடறது மில்லையே. (49)

இல்லை யிருவினைத் தொடர்ச்சியு மில்லை
இல்லை யுலகங் கபடங்க ளில்லை
புல்லை முறித்துப் பொருத்திக் கருத்துள்
சொல்லை யறுத்துச் சோதித்துப் பாரே. (50)

சோதிநவ குளிகையப்பா சோதிசூட்சம்
சொல்லிவிட்ட குறையறிந்து குளிகைசேர்த்துப்
பாதியிரு கூரறிந்து காலைப்பாரு
பருதியொளி முதுகுபுறம் பாய்ந்துவீசும்
சோதியிதை யுள்ளபடி யுனக்குச்சொன்னோம்
சோதித்துப் பார்த்தவர்க்கு அதிதந்தோணும்
ஆதிதிரு மூலர்நூ லறிந்துகொண்டால்
அவன்சித்தன் அவன்ஞானி யவனேயாமே. (51)

அவனேதான் ஞானவனுய்ச் சூட்சதேகம்
அறிந்துகொண்டு வேடத்தை நிறுத்திச்சூட்சம்
அவனேதான் சூட்சாதி தூலமூலம்
அவன்மூல மாகவுமே மூலஞ்சேர்வோம்

அவனேதான் நமதுடைய வர்க்கமாகி
ஆதிதிரு நடுமூலங் கிழங்கின்மூலம்
அவனேதான் கயிலாசத் தேகங்கொண்டு
அவனிருப்பா னுலகத்தி லறிந்திடாரே. (52)

அறியாத மூடர்மட்டிச் சாதிலோபர்
ஆதாரப் போக்கறியார் மூலங்காணார்
பிறியாத தோலாசை வலையிற்சிக்கிப்
பின்னாசை கொண்டிரண்டு ஆசைபூண்டு
குறியான குருவிட்ட குறையைக்கண்டு
கொள்ளாமல் மாண்டுவிட்ட குறையேயானால்
அறியாதா ராவர்களோ ஆத்தாள்போக்கை
அறிந்தவர்க்கு விட்டகுறை யறிவான்பாரே. (53)

பாரப்பா பெலத்தபுத்திக் காரனென்றாற்
பகருகிற சூட்சநிலை யறிவைப்பத்திப்
பாரப்பா பசுமரத்தி லாணிபோலே
பாய்ந்துலர்த்தி யறிவோடே பழுவிலேறிப்
பாரப்பா யறிவென்ற ஏணியேணி
பகாரிது அறிவேற்றி யேறயேறப்
பாரப்பா திகாந்தவரை யுகாந்தகாலம்
பத்தறிவை முத்திபெறப் பண்ணுந்தானே. (54)

பண்ணறிந்த பெண்ணாசி புவனைதீட்சை
பகருகிறேன் முத்தமர்க்குப் பண்பாய்க்கேளு
ஒண்ணறிந்து வொண்ணுமுத லெட்டுமொன்றாய்
ஒன்பதுமே துருவநவக் கிரகமாச்சு
எண்ணறிந்த கிரகமடா வெண்ணிப்பாரு
எண்ணுமிவள் புவனைபதி ஞானமானாள்
ஒண்ணுமுத லாறுமொரு மூன்றுகோணம்
ஒன்பதடா கருமமெட்டு மாடுமாடே. (55)

## திருமந்திரம்.

ஆடுமொன் றெட்டு மழைப்பு மோகனம்
ஆடுமிரண் டேழு வசியமாந் தம்பனம்

ஆடுநா லஞ்சுச் சாடன பேதனம்
ஆடுமா ரணவே வஷணமறு மூன்றே. (56)

மூன்றாறு மொன்றாய் முடிந்தது பிரணவம்
நான்றாள நின்று நாலாய்மூன் றாகத்
தோன்றாகப் பார்ப்போர் தோணுமே சூட்சம்
மூன்றாகச் சத்தத்தில் மூச்சத்த வாறே. (57)

மூச்சத்த விடமே முத்தியு மாச்சு
பேச்சத்துச் சித்தர் புவனையைப் பேசார்
பேச்சிட்ட மென்றே யிருந்தாள் புவனைப்
பேச்சிட்டுப் பேசி நாலையும் பேசே. (58)

பேசி யழைப்பு வெழுத்தஞ்சு பிரணவம்
ஆசிது வெட்டொன் றாகம மோது
வாசரி கேட்க வருவாள் புவனை
யோசரி சொல்லி மோகன மோதே. (59)

மோகன மோத முத்திலும் புவனை
யாகம மெனவே யாகரா பசனைத்
தேகமு மாகிச் சிவசிவா வெட்டும்
பாகம தாகப் பயில்வது சித்தியே. (60)

சித்தித்த புவனையடா கருமமெட்டும்
செப்புவாள் கசடறவே தீட்சையெல்லாம்
சத்திக்குள் நவசத்தி சத்தியாவள்
சகலசித்தும் ஜெகஜால மிவளுக்குள்ளே
முத்திக்கும் வழிசொல்வேன் பலியாதென்பாள்
மூலமெல்லா மவளாலே முடிவுமாச்சு
புத்திக்குள் ளிதையறிந்தாற் புவனைவித்தை
பூமியெல்லா மொருகுடையி லாளலாமே. (61)

ஆமப்பா புவனையுட சூட்சமெல்லாம்
அடைப்பெல்லாந் துறந்துவிட்டேன் கண்டுபாரு
நாமப்பா சொன்னதிந்தக் கிரிகைசத்தி
நாடுமெச்சும் உலகமெச்சும் வசியமாகும்

ஓமப்பா யுலகிற்றே வதைகளெல்லாம்
உன்னேவற் படிகேட்டு நடக்கும்பாரு
தாமப்பா கருமவித்தை தன்னைநீக்கித்
தன்னைப்பா ருன்னைப்பா ரென்னைப்பாரே. (62)

என்னைப்பா ரென்றகுறி யேதுநாமும்
ஏகமொரு சமூலமுமாய்ச் சுருக்கமாகத்
தன்னைப்போ லுன்னையுமே தன்னைக்கண்டு
தன்னுட்டங் கண்டுமன மாண்டுபோக
என்னைப்பா ரென்றுசொன்ன வியல்பைமைந்தா
யேகமென ஞானியென்ற பேருமாச்சு
உன்னைப்பார் யோகம்பார் ஞானம்பார்நீ
உண்மையுடன் நிதானித்து உலகம்பாரே. (63)

உலகமது பேய்க்கூத்து மைந்தாமைந்தா
உரையாதே விள்ளாதே யையாவையா
கலகமிடு வாய்வீணர் மெத்தவுண்டு
கண்டறிந்து அகன்றுவிடு தர்க்கம்வேண்டாம்
விலகிவிடும் போதுமவன் திரும்பிவந்து
விகற்பமுடன் திரமறிய வேணுமென்று
பலகலைகள் மொழிந்துறவு வினையங்கொண்டே
பழிகொள்ளுஞ் சண்டாளர் தனக்குக்கேளே. (64)

கேளப்பா வறுமூன்று மாரணவேடணத்தை
கீழ்முகமாய்க் கன்னிமுதற் சூட்சம்நாலாய்க்
கேளப்பா பாழ்மூலை நிறுத்திமூன்று
கெட்டியாய் மாரணத்தை மாறியோது
காளப்பா நாழிகைதான் செல்லாதப்பா
நவிலுகிறேன் நாவடங்கிப் பாவிதேகஞ்
சூளப்பா அக்கினிபோ லெறிவுமாகிச்
சொல்லுதற்குப் பேச்சுமற்று விருப்பான்பாரே. (65)

## திருமந்திரம்.

இருப்பா னிருப்பிட மிடம்வல மசையான்
இருப்பான் பிணம்போ லேறிட்டும் பாரான்

நெருப்பா முடலும் நினைவு மயங்கிடுஞ்
சிரிப்பார்க் குடம்பு தேகமு மாமே. (66)

தேக மெடுக்குந் தேகத்தை யறியார்
தேகத்தின் சூட்சந் தெரியா தெவற்கும்
வேகத்தி னாலே வெகுளிகள் பேசி
நாகத்தின் விஷம்போல் நஞ்சவன் வாயிலே. (67)

வாயினில் நஞ்சு வாக்கினிற் கெடுதி
வாயினி லுண்டு வருங்குறி யறியான்
தீயினில் வெந்த தேகமு மானார்
தாயவள் கடைசி தந்தை யாதியே. (68)

ஆதியிற் காலாங்கி யாண்பிள்ளை சமத்தன்
சோதனை பார்க்கத் துணிந்தார் நமதிடம்
நீதியாய்ப் பன்னிரண் டாண்டுமே காத்தார்
போதியா தெவர்க்கும் போதித்தோம் பாரே. (69)

போதித்தோம் போகர் புனல்கரு வாதி
நீதிக்குட் சாகாக் கால்நிச மாகச்
சாதிக்குள் வேகாத் தலையையு மவனுய்ப்
போதிக்கக் கண்டாற் பொருளறி வாமே. (70)

ஆமப்பா காலாங்கி சகலபேர்க்கும்
ஆதியடா நமதுபிள்ளை யானதாலே
காமப்பா லூட்டிகடுங் கானலேகிக்
கமலமென்ற ஆயிரத்தெண் ணுச்சிமீதிற்
சோமப்பா லுண்டதற்குச் சொன்னேஞ்சூட்சம்
சொல்லறிந்த சூட்சநிலை பத்திக்கொண்டு
தாமப்பா மதிப்பால்கால் தலையாய்க்கொண்டு
தனையறிந்து சித்தனென்று இருந்தான்பாரே. (71)

இருந்தநே ரறிந்துசிவன் பேச்சுக்கொண்டு
இருவினையு மெய்யறிந்த சித்தனென்று
வருந்தியிவர் நிறையறியா தொருவரில்லை
மதியமுதங் கொள்ளுதற்கு வழியுங்காணர்

கருந்தலையி லெழுத்துமுறை விதியைக்காணக்
காலாங்கிக் குரைத்தகரு மானமப்பா
திருந்திமன துறைந்திந்த நூலைப்பாரு
சிவசிவா கருமவினை திருந்தானே. (72)

தீருமது செனனமறு பிறவியில்லை
தீர்க்கமடா மெய்யறிந்த சித்தன்சித்தன்
கூறுமொழி கருமானச் சுருக்கம்நன்றாய்க்
கூறினோம் வேதாந்த சித்தாந்தம்ரண்டும்
வேறுமொரு கருமான மில்லையில்லை
வெத்தியடா சத்தியமாய்ச் சொன்னோங்கேளு
ஆறுமிரு கூறறிந்து மூலங்கண்டு
அடிதொடுத்து வரையாறு மறிவான்பாரே. (73)

அறிவான தீதமடா மூலம்பார்த்தால்
அகாரமுத உகாரம்வரை பார்த்துநாலாய்
அறிவான படநாலாய் நாகமொன்று
ஆகமஞ்சு தலைவிரித்து ஆடுமாடுங்
குறியான படமெடுத்து ஆடும்போது
குறிபாரு வால்கூளை நாவுகூளை
வெறியேறும் போதரவு சீறியாடும்
வேளையறிந் தோரடியிற் றியானம்பண்ணே. (74)

பண்ணுவது வங்குசிங்கு சிரசின்மீதிற்
பதித்துவால் பிடித்துவிழுந் தாட்டுஆட்டு
எண்ணுமிது பாம்புன்னை வசமேயாகும்
எழும்பாது படமற்றி யாடும்பாரு
இண்ணமது வங்குசிங்கு சிரசின்மீதில்
தீர்க்கமாய்ப் பதித்துநன்றாய் மவுனமோது
அண்ணுமின்னு மொருநாளும் விஷமோயில்லை
ஆடுகிற அரவுபடம் நாளும்பாரே. (75)

## திருமந்திரம்,

நாலு படத்தில் நஞ்சு நசிநசி
மேலு மூடாயம் விருப்பத்தி மூன்றையும்

காலுந் தலையுங் கருத்தொற்று வோதிடும்
பாலும் பழமும் பஞ்சா வமுதமே. (76)

அமுதமே நாலு மாகுமே பூரணம்
அமுதமே லாகிரி யானந்த மாகிடும்
அமுதமே கொண்டிடி லாருக்குமேலாம்
அமுதமே சித்தி யாகுமிந் நூலே. (77)

இந்நூற் கருவா யிருத்திக் கருத்துள்
இந்நூற் பொருளா யிருத்தும் பரனெறி
இந்நூல் வருத்திக் கொடுத்தா ரிசைப்பர்
இந்நூ லிசைக்கி லென்நந்தி பாதமே. (78)

பாத மடிமுடி பஞ்சாட் சரத்தடி
பூத மயக்கடி பூரண நாலடி
வேதங்க ளுள்ளடி வெத்தியாஞ் சித்தடி
நாதங்கள் பத்தடி நாற்பத்தி மூன்றே. (79)

மூன்றெழுத் தஞ்சு முத்தியாங் கண்டிடு
நான்று வெழுத்துடன் நாலையுங் கண்டிடு
ஊன்றி யுரைத்திடு முற்பனங் கொண்டிடு
மூன்றெழுத் தஞ்சு முப்பூவுங் கண்டிடே. (80)

ஆனகுறி முப்பூவுக் கைம்பதுமேபாடல்
ஆச்சரிய மகத்தீசர் நூலும்பாரு
ஆனகுறி மார்க்கமிது யாருங்காணார்
அதிசயந்தான் கருமானச் சுருக்கமாக
ஆனகுறி சொன்னோநா மதீதம்பாரு
ஆகட்டுந் திட்டாந்திரம் முப்பேரோது
ஆனகுறி நம்பேரை யழைக்கநாமும்
அப்போது நாம்வருவோம் வாவாவென்னே. (81)

என்னவே நீயழைக்க வெனக்குமுன்னே
எதிரேறி முன்வருவா ளாத்தாள்வாலை
சொன்னபே ரறிந்துநன்று யழைத்துப்பாரு
சூட்சமிதை யுனக்காகச் சொன்னேனப்பா

இன்னமே யின்னகுறி யெண்ணவேண்டாம்
ஏகமா யறிந்திருப்போ மப்போநாளும்
முன்னமே யழைக்கையிலே மூழுமென்றால்
முத்திதரு வாலைபதஞ் சித்தியாமே. (82)

## திருமந்திரம்.

சித்தித்தாள் வாலை புவனை திரிபுரை
சத்திக்குள் மூன்று புவனையுச் சாடினம்
புத்திக்கு ளோதி யிருவினை போக்கிடு
வத்திக்கும் வாலை வழிமுத்தி சித்தியே. (83)

முத்தியடா வேதாந்தஞ் சித்தாஞ்சித்தி
முத்தபரி பூரணமாய்க் கண்டார்சித்தி
புத்தியுட னிதுபாரு கருத்தான்தோணும்
பூரணமா யின்னூலாய்ப் பொருந்தியாடுஞ்
சத்தியடா சத்தியமாய் வருவாளாத்தாள்
தானெட்டு மிரண்டுமடா யெய்தும்பாரு
வெத்தியடா வேதாந்தம் பார்த்துக்கொள்ள
வெகுசுருக்குக் கருமானச் சுருக்கமுற்றே. (84)

## மூலமந்திரம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தம்பனம் | — | நமசிவய | மோகனம் | — | நயவசிம |
| வசியம் | — | வசிமநய | பேதனம் | — | மநயவசி |
| உச்சாடனம் | — | சிவயநம | வித்துவேசனம் | — | வயநமசி |
| அழைப்புக்கு | — | யசிமநவ | மாரணம் | — | மசிவயந |

திருமூலர் ஞானம் ௮௪ முற்றிற்று.



சத்திகிரி சிவகிரி திருவாவினன்குடி யெனத் தழைத்தோங்கும் திருப்பழனிமலையிலெழுந்தருளிய ஸ்ரீ கைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் ஆதீன மகாகைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீ தேண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.

உ

கடவுள் துணை.

இரண்டாவது:

திருமூலர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானோபதேசம் ௩௰.



குருவென வந்து குணமாய் வணங்கி
திருநீறு சாற்றிச் செவியருள் செப்பி
யெருகுட னறுகும் என்கபின் நீரால்
உருவுடன் கொண்டா னுடல்பொரு ளாவியே. 1)

உடல்பொரு ளாவி வுதகத்தால் வாங்கி
படர்வினை பற்றறப் பார்த்துகை வைத்து
நொடியி லருள்வைத்து நண்ணுற வாக்கிக்
கடிய பிறப்பறக் காட்டினன் நந்தியே. (2)

நந்தி வினைத்த நல்லவெண் ணீற்றினிற்
சந்தேகந் தீரத் தலத்தே பரப்பி
யிந்தபா ரென்று எழுதின னேர்மையி
லுந்தா ளளித்தா னுடற்சக் கரத்தே. (3)

சக்கர மூலஞ் சதுர்மண் ணீர்புறை
அக்கினிமுக் கோணம் வாயுவறு கோணம்
புக்குவான் வட்டம் பூத வடிவுமேல்
நிற்குந் திருவடி நிறமது பொன்னே. (4)

பொன்னது பூமி புனல்பளிங் குநிறம்
வன்னிசெம் புநிறம் வாயுக் கருநிறம்
மின்னிய வான்புகை மேகநிறமென
உன்னியே நந்தி யுரைத்தனன் கடினதே. (5)

கடினமண் ணீர்புறை களித்தே பதங்காட்டுஞ்
சுடுமெனத் தால்நெஞ் சுட்டுணர் வித்திடு
திடரவி சரிந்து திரட்டுங் கால்வான்
மடமாய் நிறந்தர மென்றுரைத் தானே. (6)

உரைத்தபார் நவ்வு முதகத்தில் வவ்வும்
வரைத்ததீ சியும் வாயுவ காரமும்
உரைத்த வான்யவ்வு மெழுதியோங் காரம்
நிரைத்தெழுத் தவ்வுடன் நின்றன நாடியே. (7)

நாடிட பிங்கலை நடுநின்று மாறிக்
கூடியே யவ்விற் கொழுந்தாகி நின்றது
ஊடயன் மாலு முருத்திர னீசனும்
நீடுஞ் சதாசிவம் நின்றெழுத் தஞ்சுமே. (8)

அஞ்சில் நகார மதிலிரு காலுமாய்
வஞ்சக மான வயிறும காரமாய்
நெஞ்சிற் சிகாரமாய் நேர்கழுத் தின்முகம்
வஞ்சொல் வகாரமாய் வலது நெற்றியே. (9)

நெற்றி வெளிசெவி நின்றது சத்தமுந்
தெற்றிய வாயு உடம்பு பரிசத்திற்
பற்றிய கண்ணுரு அப்பு ரசமென
உத்தம நாசி உயிர்க்குமக் கெந்தமே. (10)

உயிர்க்குணர் வாய்நின் றுரைசெயுங் காற்று
நயப்புறு கண்ணே நடத்திசை கொண்டிடும்
செயிற்கு மலம்விடுஞ் சேர்ந்துநீர்ப் பாயும்
வியப்பரி லிங்கம் விடுஞ்சலம் வித்தே. (11)

வித்து மனம்புவி மேவிடும் நீரினிற்
புத்தியி னின்றல் பொருந்துமாங் காரஞ்
சித்தநி று வாயுத் தெளிவுள்ள வானில்
இத்திசை யைந்து மிசைந்திடுங் காலே. (12)

கால்மண் ணீர்புறை கலையன லென்னுங்
கால்வித்தை ராக மதுவெளி யாகும்
மேலும் புருடனு மாய்கையும் போலவே
சாலவே வித்தியா தத்துவ மேழுமே. (13)

தத்துவ மோர்சிவ தத்துவ மாகுஞ்
சுத்தவித் தையோ டீசுரன் மேவுஞ்

சத்தி சிவமது தானந் தெழுந்ததே
வுற்றங் குணமர்ந்த வெழுருப்ப தாறுமே. (14)

ஆறு ஞானமாம் பதமேல் சடாதாரம்
மீறு மிருக்கு மெரிசாக் கரவனாய்
கூறுந் தியானங் குறிப்பைத் தெழுந்ததே
மாறிலா ஞான விளக்கம் வருகுமே. (15)

மருவு தகழிசெய் வன்னி திரியொளி
உருவமாய் நின்ற ஓரைந் தெழுந்ததுமே
திருவடி வுள்ளே சிவாய நமவென
இருவினை நீங்கிடு மென்றானந் தியே. [16)

எண்ணென மூலத் தியங்கிய மண்டலம்
அண்ணு மருதியா மாதிக்க மண்டலக்
துண்ணுங் கபாலஞ் சோமனார் மண்டலம்
நிண்ணது மொக்து நினைவா லுணருமே. (17)

உணர்ந்தமூ லத்துபத் தஞ்சுவா திட்டம்
மணிபூ ரகமூந்தி மார்பினி லனுகதம்
அணிகள் விசுத்தி யாக்கினை நெற்றி
குணமுடன் நந்தி கூர்வறு தாரமே. (18)

ஆதார மூலத் தடிபிற் கணபதி
வேதாந்த பூமி விஷ்ணு கிரினில்
ஏதான ருத்திர னீசனார் காற்றுவின்
மீதே சதாசிவ மெய்க்குமப் பாதமே. (19)

பாதம் பராசத்தி பகர்வின் மனோன்மணி
வாத மயேஸ்பரி வன்னிபி லுருத்திரி
யோதுமா லெட்சுமி யென்பான் சரஸ்வதி
மாதிப மூலத்தில் வல்லபை சத்தியே. (20)

சத்தியா லேஅயன் றானே படைப்பன்மா
லொத்தை யளிப்பன் றுடைப்ப னுருத்திரன்
இத்தைத் திரோபவஞ் செய்யு மயேசுரன்
அத்தைச் சிவனார் அனுக்கிரகஞ் செய்யுமே. (21)

செய்யுஞ் சரியை கிரிகை சிவயோகம்
உய்யுமெய்ஞ் ஞானமு மோரைந் தெழுத்துளே
துய்யமேற் றாலமுஞ் சூட்சமுஞ் சொல்லியே
ஐய மறுத்தா னருளொன்றி னாலே. (22)

நாலு மிருமூன்று மீரைந்து மீராறுங்
கோலியே நின்ற குறிகள் பதினாறும்
மூலங்கொண் டங்கே முடிந்த முதலிரண்டுங்
காலங்கண் டானடி காணலு மாமே. (23)

காணுநவ் வுங்கா லுங்கதிற் பெவ்வாறும்
பூணிடப் பத்தும் பொருந்தித ழீராலும்
மேணியீ ரெட்டும் ரெண்டிட வுன்னதாய்
ஆணுவ மானதா மைம்பத் தொன்றுமோ. (24)

ஒன்றிடு பொறிபோ லுத்த கரணமும்
நின்றிடு மீரேழு நேத்திரச் சாக்கிரமம்
கண்டுநற் காரணங் கண்டாற் சொற்பனந்
துன்றுஞ் சாணஞ் சுழித்தியா மார்பே. (25)

மார்புகீ ழுந்தி மனமொன்றி நின்றிடும்
சாருந் துரியஞ் சுவாதிஷ்டந் தன்னிலே
சேரவின் னின்றிடுஞ் சுத்தமுந் தீதுமாய்
சீர்புனை யானவாச் சேர்ந்திடு மண்ணிலே. (26)

மண்ணுடன் நீரு மருவி யுடலதாய்
விண்ணொடு வாயு விரும்பி யுயிரதாய்
திண்டழல் தன்னொடு சேர்ந்து கலந்துநின்
றண்டழ லாக வமருஞ் சிகாரமே. (27)

சிகார வகாரஞ் சிவனோடு சத்தி
யகாரம துள்ளே யர்த்துமா வாகிடும்
நகார மதுவே நந்தி திரோபவம்
மகார மதுவே மலமாகு மண்ணுமே. (28)

மண்ணு மலமைந்தும் மாத்திரையோ ரைந்துந்
துன்னிய கன்மாதி தோற்றந் தொழிலுங்காண்

இன்னிய பொய்யல்ல பிறப்பிறப் பஞ்ஞான்
தன்னின வால்வினை சற்குரு வாமே. (29)

ஆசானுக் கென்று அளித்தபொரு ளாவி
மாசாய திவ்வுடல் வலதெலா மீந்து
கூசாமற் பாதங் குறைவறப் பூசித்துப்
பேசா திருப்பார் பிறப்பொழிந் தோரே. (30)

திருமூலர் ஞானோபதேசம் ௩௰ முற்றிற்று.





சத்திகிரி சிவகிரி திருவாவினன்குடி யெனத் தழைக்தோங்கும் திருப் பழனிமலையிலெழுந்தருளிய ஸ்ரீகைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமி யவர்களா ஆதீன ஆச்சிரமம் ஆதீன மகாகைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீ தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமி யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன் றுணை.

மூலன் குருவருள் :

திருமூலர் திருவாய் மலர்ந்தருளிய

# நடுவணை ஞானம் நடு.

சிகார வகார யகார முடனே
வகார யகார சிகார நடுவாய்
நகார மகார மிரண்டு மறவே
சிகார வகார சிவனவ ளாமே. (1)

நடுவிசைந் தானெங் கனற்சுடர் சித்தியாம்
நடுவிசைந் தேசிவன் நசிச்சிவ வாகியாம்
நடுவிரு வாசியை நாட்டவல் லார்க்கு
நடுவிரு வாசி நடுவணை தானே. (2)

வாசிவா வென்ற வாசியை வைத்து
வாசியோ டொன்ற வகையறி வாரில்லை
வாசியோ டொன்ற வகையறி வாளர்க்கு
வாசியோ டீசன் மகிழ்ந்திருந் தானே. (3)

சிவவாசி வாசியைச் சீருடன் கூட்டி
வவவாசி வாவென வாவென வாங்கி
யொவவாசி வாவென் றுருக்கா லுரைக்கிற்
சிவவாசி வாவெனச் சிறந்துநின் றானே. (4)

அகார உகார சிகார நடுவாய்
வகார யகார வாசிவா வென்று
நகார மகார மிரண்டு மறுத்துச்
சிகாரமோ டீசன் சிறந்திருந் தானே. (5)

அருவுரு வாகிய ஆதிப்பி ரானை
அருவுரு வாகியை யாருமறிந் திலார்
அருவுரு வாகிய தாருமறிந் தபின்
அருவுரு வான தடிமுடி யாமே. (6)

சிவாய சிவாவெனச் சீவனிற் கூட்டிச்
சிவாய சிவாவெனச் சிந்தித் திருக்க
சிவாய சிவமான சீவன் சிவமாய்ச்
சிவாய சிவத்துடன் சிவனிருந் தானே. (7)

நடுவது தன்னால் நந்தியி ருப்பது
நடுவது தன்னால் நாதமி ருப்பது
நடுவது தன்னால் நாட்டமி ருப்பது
நடுவது வாசியிற் சீவனொ டுங்குமே. (8)

நடுநின்ற வாசியை நாதத்திற் கூட்டி
நடுநின்ற சீயைச் சிவனாற் கூட்டி
நடுநின்ற சீயுடன் நாட்டவல் லார்க்கு
நடுநின்ற சீயுடன் சீவனொ டுங்குமே. (9)

சீவன் சிவனாய்ச் சிவத்துடன் கூட்டினாற்
சீவனுஞ் சித்துஞ் சிவத்துட னொன்றினாற்
சீவனுஞ் சித்துந் தெளியவல் லார்க்குச்
சீவனுஞ் சித்துஞ் சிவத்திலொ டுங்குமே. (10)

நடுவணை யாவது நந்தியி ருப்பது
நடுவணை யாவது நற்சுழி யுந்தியாம்
நடுவணை யாவது நவவாதி யுந்திடம்
நடுவணை யாவது நந்திபொற் பாதமே. (11)

சிந்திப்ப தெல்லாந் திருவடி தன்னிலே
சிந்திப்ப தெல்லாந் திருவடிப் போதமாம்
சிந்திப்ப தெல்லாந் திருச்சிலம் போசைச்
சிந்திப்ப தெல்லாந் திருவடி தானே. (12).

சிவசிவா வென்றாற் றிருநட[illegible]ாகும்
சிவசிவா வென்றாற் சீவனுப் முத்தியாம்
சிவசிவா வென்றாற் சீவனுஞ் சித்தியாம்
சிவசிவா வாசி சிவசிவந் தானே. (13)

அறிந்தேன் காய மறிவு தனைக்கொண்
டறிந்தே னுள்ளத் தாடுந் திருக்கூத்

தறிந்தா ரறிந்தா ரறிவறி வாலே
அறிந்தாய் திருக்குஞ் சிவமென லாமே.

அறிவுதன் னுள்ளே ஆடுங் திருக்கூத்
தறிவு சிவமா மறிந்தவர்க் கெல்லாம்
அறிவு மறிவு மறிவுட னென்றினால்
அறிபவ ரர்ச்சியு மானந்த மாமே.

அறிவுதன் னுள்ளே அறிவு தனைக்கண்
டறிவது சத்தி யதனுளே சிவன்
அறிவது சிவமா யறியவல் லார்க்கு
அறிவுதன் னுள்ளே ஆனந்த மாமே.

அறிவும் வெளியு மொன்றாய் நிலத்தே
விறியுங் குவியும் வெறும்பாழி னுற்றே
அறிவு மறிவு மறிவுடன் கூட்டினால்
அறிவு சிவமா யமர்ந்திருந் தானே.

நகாரம் நடுவே நற்சுடர் கொண்டு
மகார மலமாய் மறைந்திடுஞ் சத்தியைச்
சிகாரஞ் சிவமாய் வகார மருளாய்
யகார முயிரென் றறியலு மாமே.

சீயெனச் சீவனை வாவென்று வாங்கி
யாவென்ற சத்தியி னசவையில் வைத்தால்
ஆமென்ற மவ்வுடன் அவ்வாகி யுந்திடம்
நாமென்று நந்தி நடுவிசைத் தானே.

நெற்றிக்கு நேரே நீள்புரு வத்தில்
உற்றுற்றுப் பார்க்க வொளிதரு மானந்தம்
பற்றற்று நின்ப பரவெளி தன்னிற்
பெற்றற்று நின்றிடம் பேசப் பெருமையே.

அகார உகார சிகார நடுவாய்
வகார யகாரம் வானுடன் கூடினால்
உகார முடனே யொருக்கா லுரைக்கச்
சிகார முதல்வன் சிறந்துநின் றானே

சத்தமுத வந்து தங்கும் நடுவணை
கந்த னிருந்து கலந்து வுணர்ந்திடு
அத்தன் றிருநட மாடிய வம்பலம்
சித்தம் பலமெனச் சேர்ந்தனன் நந்தியே. (22)

ஓசை யொலிபட் டொடுங்கும் நடுவணை
யாசை பசுபாச மறுத்த பதியது
பூசைப் பொருப்பிலே போற்றுஞ் சிவாவய
நேசத்தி னன்பிலே நேர்பட்ட நெற்றியே. (23)

நெற்றியின் வைப்பிலே நேர்பட் டொளியது
உற்ற நடுவணை யோங்கெழுந் தீபம்
பெற்றவர் கண்டாற் பிறவா நெறியது
அத்தன்றன் வைப்பென் றருள்செய்தா னந்தியே. (24)

வானுந்து நந்தி வடிவுதன் வைப்பிலே
ஊனந்தம் பெற்று உருகுதா னந்தம்
தேனந்த முண்டு தெவிட்டாத் திருவடி
ஆனந்த மூல னறிந்துபெற் றனே. (25)

முத்துப் பவளம் பச்சையிம் மூன்றும்
கொத்துப் பசும்பொனுற் கூறுமா ணிக்கம்
ஒத்தெழு சோதியி னுள்ளெழு மட்சரம்
அத்த னிருப்பிடம் அவ்விடந் தானே. (26)

முத்தி நடுவணை முத்தி தரித்திடம்
பத்தி நடுவென்று பார்ப்பா ரறிவுளோர்
சத்திய மேயிது சற்குரு பாதமே
அத்த னிருப்பிட மவ்விடந் தானே. (27)

நந்தி யிருப்பது நடுவுட் டெருவிலே
சந்தி சமாது தளங்கே சமைந்தது
உந்திக்குங் கீழே யுகந்தவி டத்திலே
நந்தியி ருப்பிடம் நாதற்பொற் பாதமே. (28)

ஆணிப்பொன் முத்தி யறியும் பதியையும்
பாணித்துப் பார்த்துப் பரம குருநந்தி

மாலிங்க மந்திரம் வாசித்துக் காட்டி
ஆணிப்பொன் முத்தி யளித்தின னன்பிலே. (29)

விண்ணுக்குள் நிற்கும் வெளிகொள் ளடியது
கண்ணிற்குள் நிற்குங் கலைபதி னாறு
ஒன்றுக்கு ளொன்று வோங்கும் நடுவணை
யெண்ணிக்கொ டெண்ணி யிருந்தன னந்தியே. (30)

திருமூலர் நவேணை ஞானம் ௩௰

முற்றிற்று.

---



சத்திகிரி சிவகிரி திருவாவினன்குடி யெனத் தழைத் தோங்கும் திருப்பழனிமலையி லெழுந்தருளிய ஸ்ரீ கைலாச போகமகாரிஷீஸ்வர ர் ஆ[illegible]னா ஆச்சிரமம் மஹாகைலாச பரம்பரை 225-வது [illegible]து தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமி யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

நான்காவது:

திருமூலர் திருவாய் மலர்ந்தருளிய

# ஞானக்குறி நடம.



நயன மிரண்டும் நாசி நுனி வைத்தங்
குயருள்ள வாயுவை யுள்ளே அடக்கித்
துயரற நாட்டியே தூங்கவல் லார்க்கு
நயனிது காயக் கம்பநிலை நாட்டே. (1)

நாட்ட மிரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமு மில்லை மனைக்கு மழிவில்லை
ஓட்டமு மில்லை யுணர்வில்லை தானில்லை
தேட்டமு மில்லை சிவனவன் தாமே. (2)

தாமே யிருகண் நுனிநாசி வைத்துத்
தாமே யறிவைப் புருவமையந் தாபித்துத்
தாமே யிருக்க வுலகெலாந் தன்னுள்
தாமே சிவமலாற் றனிச்சிவ மில்லையே. (3)

இல்லை பிறப்பற் றிருகண்ணை நாசிமேல்
மல்லொக்கக் குத்தி மனம்புரு வத்திடை
சொல்லொக்க நாட்டிச் சுடரொளிச் சோதியாய்
நல்லவர் நின்று நடுக்கமுற் றாரே. (4)

அத்தாற் பிறவி யவரிரு கண்களை
வைத்தார் நுனிமூக் கின்புரு வத்திடை
நித்தார மங்கே நினைக்கவல் லார்க்கு
எத்தாலுஞ் சாவில்லை இறையவ னாமே. (5)

நாமேகண் ரெண்டும் நாசி நுனி வைத்துத்
தாமே யறிவைப் புருவமையந் தாபித்துங்
கூமே யிருந்தாப் போலுளே வுறவெய்திற்
சர்மே மனசங் கெதமெட்டுஞ் சித்தியே, (6)

சித்திக ளெட்டுந் திறமாகக் கைவரும்
மத்திப் புருவம் நடுமனம் வாழ்வித்துப்
பத்தி யிருகணுற் பாங்காய் நுனிமூக்கில்
குத்தி யிருத்தக் குறைவொன்று மில்லையே. (7)

இல்லையே சாவு மிருகண் நுனிமூக்கில்
வல்லவர் வைத்த மனம்புரு வத்திடை
செல்ல நிறுத்திச் சிவனும் வெளிப்படும்
சொல்லவுங் கொண்ணுச் சுகானந்த ராவரே. (8)

ஆனந்த ராவ ரிருகண் கலையுந்
தானந்த மூக்கி னுனியிற் றாபித்து
வானந்த நெற்றி நடுமனம் வாழ்வித்து
மோனந்த முன்னி முசியா திருந்திடே. (9)

இஷ்டமாய் மூக்கி னிருகண்ணைத் தாபித்துத்
துஷ்ட மனதைச் சொருகிப் புருவநடு
வட்டத்தை யூணி வாசிக் குதிரைமேல்
ஒட்டியங் கேறக் கொண்டாடுஞ் சிவத்துள்ளே. (10)

சிவத்துட்கொண் டோடும் பிர்மத் தெருவிதி
தவத்திற்கொண் டோடுந் தானே சிவமாகும்
அவத்தில்மனஞ் செல்லா தக்கண்ணுல் மூக்கைப்பார்த்
துவத்தால் மனத்தைப் புருவமையந் தாவிடே. (11)

தாவிப் புருவமையஞ் சங்கென்று தாநெட்டி
ஆவி யடக்கி அக்கண்ணுல் மூக்கைப்பார்
மேவியுன் மூக்கில் விளங்கும் பராசத்தி
கூவி யிருக்குங் குறிப்பது வாமே. (12)

குறிப்பது வாகுங் குருவருட் கூடச்
சிறப்புறு சிந்தையைச் சேருநடு மத்தி
மறப்பது கண்ணை நுனிமூக்கில் வைத்திடு
சிறப்புருவ சங்கென்று சேர்ந்ததி னுலே. (13)

நாலா யிரத்தி நானூத்தி நாற்பத்தெட்டு
மாலாம் வியாதியு மாக மடிந்திடும்

பாலாங் குழந்தையாம் பார்புருவ மையத்தின்
மூலா மனத்தை மூட்டுகண் மூக்கிலே. (14)

மூக்குநுனி யிற்கண் மூடாமற் றுநோக்கிக்
காக்கு மனது கலங்காமல் நெற்றியை
ஆக்கு மனத்தை யசையாமற் றுணாணித்
தீர்க்கமாய் நெற்றிக் கண்ணுந் திறந்திடே. (15)

திறந்துள் ளேவெளி சேருமுன் சிவன்
நிறைந்தங்கு நெற்றி நேர்நின்றங் குண்ணச்
சிறந்தே யிருமுன் தெரிசனை யாகும்
உறைந்தங் கிருளை யுத்துத்துப் பார்க்கவே. (16)

உத்துத்துப் பார்க்க வொளிதரு மானந்தம்
பத்துத்துப் பார்க்கப் பரிதி யுதயமாம்
நெத்திக்கண் சோதி நிலைபெரு முன்மனை
முத்துப்பார் போமேலங் குத்தார் படிகமே. (17)

படிகத்தை யுத்துப் பார்பா ரகன்வொளி
வடிவத்தை யுத்துநீ பாருவள மாக
விடிவுத்த காலங் குமரி விளங்குவாள்
வடிவொத்த காரெள்ளின் மையெண்ணெய் போலவே. (18)

மையெண்ணெய் நெற்றிக்கண் வைத்தஞ் சாம்பவி
செய்கின்ற யீரே ழுலகுந் தெரிவர்போல்
உய்கின்ற நெற்றி யுன்கண்ணை றுண்ணக்
கையொன் றறிவாற் கருத்துத்துப் பாரே. (19)

பார்த்திட வுத்துப் பாழாம் வெளியாம்
மாத்திட் டிருட்டெலாம் மாசற்ற சோதியாய்க்
கோத்திட்ட தீக்கிக் கொடுங்காத் துறவுமேல்
ஏத்திட்ட லோக மீரொளி மண்டுமே. (20)

மண்டிய தீயால் மாடெரி லோகங்கள்
ஒண்டி யறிய வொருவர்க் கிடமில்லை
மண்டியெரி தீய்க்கு வாய்த்தவிற கொக்குங்
கொண்டவர் கருத்துக் குடிகெட்டுக் கூடுமே. (21)

கூடிய தீய்க்குக் கொடுங்காற் றுறவுபோல்
தேடிய சாம்பவி லென்றோர் பெருஞ்செல்வத்
தாடிய பாத மதுவிரண் டொத்துத்
தேடிட மில்லாச் செங்கண் கானதே. (22)

செங்கணக் கென்றசொல் சேரப் பெருவெளி
யெங்குஞ் சிவமறைப் பெல்லா முடிந்திடந்
தங்கொணுப் பேரொளி யெங்குமண் ணீரொளி
எங்குத்துப் பார்க்கவங் கேரொளி யானதே. (23)

ஏரொளி பேரொளி யெங்குமண் ணீரொளி
சீரொளி வன்னி சிறந்த வொளியாய்க்
காரொளி யெங்குங் கடுவெளி யேகப்
பாரொளி யாதியாய்ப் பாழ்வெளி யானதே. (24)

பாழ்வெளி தானுய்ப் பதையா திருந்திடம்
ஊழ்வெளி பாழ்வெளி யொக்க மடிந்திட
மாழ்வெளி மாண்டென்ன மனம்வாக் கிறந்ததை
யூரொடு சொல்வே னறிவழிந் தேனே. (25)

அறியு மிடமன் றறியாத தன்று
குறைநிறை வன்றிக் கொத்தது நின்றது
தெரியு மிடமன்றிச் சோர்ந்தார்க்கொன் றீயாது
பிரியமில் லாததைப் பெற்றொழிந் தேனே. (26)

ஒழிந்தேன் பிறவியென் னுள்ளமு மங்கே
கழிந்தேன் கடுவெளி காணுது கண்டு
தெளிந்தேன் பதிபசு பாசத் தெளிவைப்
பிழிந்தேன் கண்பட ஈம்பிறு மில்லையே. (27)

இல்லை படன மிருவினை மாண்டிது
சொல்லொத்த சோதி சுடர்க்கொழுந் தாகினேன்
வல்லக் குருபதம் வைத்தென் றுச்சிமேல்
நில்லென்றென் னுள்ளம் நிறையவைத் தானே. (28)

வைத்த குருவடி வாழுமென் றுச்சிமேல்
நித்தமு மங்கே நினைவைக் கொழுக்கிடச்

சித்தந் தெளிந்து சிவமய மாய்நின்
றத்தன் நடங்கண் டாங்கார மாண்டதே. (29)

ஆங்கார மாண்டது புத்திமன மொன்றாய்ச்
சாங்காலம் நாய்வீட்டிற் சடைய நெருப்போல
ஓங்கார மூலம்விட் டுச்சி யிடங்கொண்டு
றீங்கார மலங்கொன்றில் நிற்கும் நயனமே. (30)

திருமூலர் ஞானக்குறி ௩௰

முற்றிற்று.





சத்திகிரி சிவகிரி திருவாவினன்குடி யெனத் தழைத்தோங்கும் திருப்பழனிமலையிலெழுந்தருளிய ஸ்ரீ கைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் ஆதீன மகாகைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீ தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

பராசத்தி துணை.

ஐந்திரவது:

திருமூலர் திருவாய் மலர்ந்தருளிய

# சோடச ஞானம் ௰௬.



ஆதியென்ற மூலகுரு வுபதேசித்தார்
அப்பவல்லோ காலாங்கி வசமேயானார்
சாதியென்ற நாலுவகை தன்னைக்கண்டு
தானிருந்த வூரறிந்தேன் தலைமைபெற்றேன்
வீதியென்ற ஆறுதெரு தன்னைக்கண்டேன்
வீற்றிருந்தேன் நந்தியடிக் கொடிக்கம்பத்திற்
பாதியென்ற மதிசூடி யிருந்தவாமி
பாதமலர் தனையறிந்து பணிந்திட்டேனே. (1)

பணிந்திட்டே னவ்வூரில் வீற்றிருந்தேன்
பார்த்தவர்க ளெனையறிந்து சீசீயென்றார்
அணிந்திட்டே னவ்வூரி லொருவனாக
அமர்ந்ததினா லெனைவோரும் மெச்சினார்கள்
துணிந்திட்ட படியதனா லெந்தனையன்
துலங்கவே பூரணத்தைத் தோணச்சொன்னார்
கணிந்திட்ட கதிர்மதியுங் காட்டியென்னைக்
கடாக்ஷித்தா ரென்றனக்கு மூலர்தானே. (2)

தானென்ற மூலருட கடாக்ஷத்தாலே
சார்வான யேழுவரை கடந்து நானும்
ஊனென்ற மாபாதி பீசந்தன்னி
லோங்கிநின்ற பூரணத்தி னொளியுங்கண்டு
வானென்ற வெளியதிலே புக்கிநின்று
வாழ்வான நடனவொளி தன்னைக்கண்டு
தேனென்ற வமுதத்தை யள்ளியுண்டு
தெளிவான சிலம்பொலியைத் தெரிசித்தேனே. (3)

தெரிசித்தேன் காலாங்கி வசத்திலேலே
 தேனான வமுதகலை தன்னைக்கண்டு
வரிசித்தேன் மூலகுரு பதத்திலேலே
 வாழ்ந்திருந்தே னவ்வூரில் வரிசைபெற்றேன்
குருசித்தி யானதனாற் குறைவொன்றில்லை
 கொண்டேறி அண்டவரை கூத்தைக்கண்டேன்
புரிசித்தி யாவதற்கு மூலரல்லால்
 புகட்டுவகை யானறியேன் புவியின்மீதே. (4)

புவியான மூலரைத்தான் காண்பதற்குப்
 புகட்டுகிறேன் யானறிந்த மட்டுந்தானும்
குவியான குண்டலியை யிடைபின்னாகக்
 கூர்மையுட னூட்டிமிக நடுவேயேத்தக்
கவியானை வசமாகுங் களங்கந்தீரும்
 கண்டபடி யானுரைத்தேன் கருத்துள்ளோர்க்கு
அவியான முகஸ்தானங் கண்டபோது
 அப்பவல்லோ மூலரடி யறியலாமே. (5)

அறியலாங் கணேசனடி கண்டுயேத்த
 அவருரைப்பார் மூலருட விபரமெல்லாந்
தெரியலாந் தினம்போக்குத் தெரியாதெல்லாந்
 தெளிவாகக் கண்டுமிகத் தெரிசிப்பாய் நீ
புரியலா மிடையோடு பின்னுமாகப்
 புகட்டியே மேல்முகடு தன்னிலேறி
வறியலாம் பன்னிருவர் வசமேயாவர்
 வாலையவள் சிறுபெண்ணாய் வருவாள்பாரே. (6)

பாரென்றால் வாலையைத்தான் பார்க்கப்போமோ
 பாருலகிற் காண்பவர்க ளுண்டோசொல்லு
ஊரென்று லவளுரே பேருராகும்
 உற்றுணர்ந்த பேர்களுக்கே வுறுதியாகும்
வேறென்றாற் புருவநடு மையத்துள்ளே
 வீற்றிருந்தாள் வெகுகோடி ரூபாரூபி
பேரென்று லவள் பேரோ மௌனியென்பார்
 பேசாத மந்திரமென் றுரைப்பார்தானே. (7)

தானென்ற வாலையவள் சிறுபெண்ணாத்தாள்
சதானந்தி யாயிருந்தாள் சாதித்தோர்க்கு
ஊனென்ற வுயிராகி யொளிவுமாகி
ஓங்கிநின்ற பூரணத்தின் வடிவுமானாள்
வானென்ற அண்டமெல்லாம் படைத்தழித்தாள்
வளர்மதியும் கதிரானாள் நடுவுமானாள்
தேனென்ற மொழியுடையாள் திசைநா[illegible]ந்தாள்
திகட்டாத பூரணியைத் தெளிந்துபாரே. (8

பாரேநீ மூக்காலே நாக்காற்கொண்டு
பார்த்திடவே கண்ணாடி அசைவேதோணும்
ஊரேநீ காலாலே மடக்கிக்கொள்ள
ஒளிபெருகி மதியமுத வூரல்காணும்
வேரேநீ பிடித்தேறத் தலையைக்காண்பாய்
வெகுகோடி ரவிமதியாம் வன்னிகாந்தி
பேரேநீ காண்பதற்குப் பெருமைமெத்தப்
பெற்றுணர்ந்த பேர்களுக்கும் புகழுண்டாமே. (9)

உண்டாகு மிருகால்கொண் டேத்திக்கொள்ள
ஒளிபெருகி மதியமுதம் உண்ணலாகும்
அன்றாகும் இன்றாகு மென்றிருந்தால்
ஆதியடி வழலையைத்தான் காண்பதில்லை
பண்டாகும் பழம்பொருளைப் பாராவிட்டாற்
பார்நந்தி யுன்றனக்குக் காண்பதில்லை
குண்டாகும் வேலவர்க்கு மூத்தோனான
குஞ்சரமே வுன்சரண மென்றுமேத்தே. (10)

எத்துவது காலறிந்து யேத்திக்கொள்ளு
யிடையான பிங்கலையும் ரெண்டுமொக்க
மாத்துவது யிவ்வகையே மாத்திக்கொள்ளு
மவுனமென்ற மூன்றெழுத்தை மாறாமற்றான்
கோத்துமிக வொருதூக்காய்த் தூக்கியேதான்
குண்டலிக்குள் ளேயெழுப்பிக் குறிதப்பாமற்
சாத்துமிக நவவாசல் தனையிருக்கிச்
சதானந்தி யிருந்தவிடஞ் சார்ந்துபாரே. (11)

சார்ந்திடவே யீரெழுத்து மொன்றாய்ப்போகுஞ்
சலியாதே சிலம்பொலியின் சத்தங்காணும்
ஆய்ந்திடவே ஐம்பூத மொடுக்கந்தோணும்
ஆராய்ந்து மிதழ்ரெண்டும் விரிந்துகாணும்
சேர்ந்திடவே பண்ணிவிப்பார் மூலநாயன்
திரவறிந்து வுறவெனவே சேர்ந்துகூடும்
பூர்ந்திடவே புருவநடு மையத்துள்ளே
புகட்டிடுவாய் மனமொட்டிப் புகட்டுவாயே. (12)

புகட்டுவா யிப்படியே பொறிகள்விட்டுப்
பொன்னுலகில் மறுப்படைத்த புதுமைதன்னை
அகட்டுவா யிருகாலால் வாசல்தோண
அப்பவல்லோ ஆதியந்தம் ரெண்டுந்தோணும்
திகட்டுவா யமுதத்தை யள்ளியுண்டு
திருநேத்திர காலகண்டர் செயலுண்டாகும்
உகட்டுவா யோங்காரக் கம்பமீதில்
ஒங்கிநின்று பூரணத்தி னொளியைக்காணே. (13)

காணவே கனல்கோடி காந்திவீசும்
கண்கொள்ளாப் பிரபையொளி கண்ணிற்காணும்
ஊணவே ஊரல்சுனை நீருண்டாகும்
உன்னிநின்று பரவெளியை உத்துப்பார்க்கப்
பானுவாஞ் சந்திரனும் ரெண்டுமொன்றாய்ப்
பாங்கான அசபையிலே பார்த்துநீயும்
தானுவாம் பராபரமுந் தானேதானாய்த்
தானிருந்து பதியிருந்து தாக்குவாயே. (14)

தாக்குவா யென்றுசொன்னா ரந்தநாயன்
தானிருந்த ஆறறிந்தேன் தலைமையானேன்
தூக்குவாய் காலறிந்து மடக்கச்சொன்னார்
துவாதசாந் தவ்வெளியிற் றேணச்சொன்னார்
தேக்குவா யமுதகலை தன்னைக்கண்டு
தெளிவாக அனுதினமுந் தெளியச்சொன்னார்
நோக்குவாய் பதினாறு கலையாமென்று
நுண்மையாய்ப் பூரணத்தை நொடித்திட்டாரே. (15)

நொடித்திட்டா ரென்றனக்கு மூலநாயன்
நுண்மையாய் நானறிந்து நுணுக்கங்கண்டு
அடித்திட்ட மிவ்வளவே யாதிமூலம்
ஆனாலும் பதினாறு சோடசந்தான்
படித்திட்டே னெந்தனுட மூலனாயன்
பாலித்த விபரமெல்லாம் பாடினாலும்
பிடித்திட்டேன் பதினாறு மொன்றாமொன்று
புகட்டினா ரிப்பாட லாதிமுற்றே. (16)

திருமூலர் சோடசஞானம் ௧௬

முற்றிற்று.





சத்திகிரி சிவகிரி திருவாவினன்குடி யெனத் தழைத்தோங்கும் திருப்பழனிமலையிலெழுந்தருளிய ஸ்ரீகைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் ஆதீன மகாகைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீ தேண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

ஆருவது:

திருமூலர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானம் ௰௧.



அடியாகி யண்டரண்டத் தப்பாலாகி
அகாரமெனு மெழுத்ததுவே பாதமாகி
முடிவாகி நடுவாகி மூலந்தன்னில்
முப்பொருளுந் தானாகி முதலுமாகிப்
படியாமுப் பாழற்று படிக்குமப்பாற்
படிகடந்த பரஞ்சோதி பதியுமாகி
அடியாகு மூலமதே அகாரமாகி
அவனவளாய் நின்றநிலை யதுவதாமே. (1)

அணுவாகி யவனவளா யல்லாமாகி
அடிநடுவு முடியாகி யகண்டமாகிப்
பொதுவாகிப் பல்லுயிர்க ளனைத்துக்கெல்லாம்
புகலிடமா யெப்பொருட்கு மூலமாகி
மதுவாகி வண்டாகிச் சுவையுமாகி
மலராகி மணமாகி மதிக்கவொண்ணா
ததுவாகும் அகாரமதே மூலமாகி
அண்டமெல்லாந் தாங்கிநின்ற பரமூலம்மே. (2)

மூலமெனு மாதார வட்டந்தானே
முச்சுடரு முக்கோண மூன்றுநாடி
சீலமெனும் சிவலிங்க பாததீர்த்தம்
திருவடியுந் திருமேனி நடனமாகும்
கோலமுட னண்டமெல்லாந் தாங்கிக்கொண்டு
கொழுந்துவிட்ட கம்பமதாய் மேலேநோக்கி
ஆலமுண்ட ரண்டமெல்லாந் தானாய்நின்ற
அகாரமுத லவ்வெழுத்தை யறிந்துபாரே. (3)

அறிந்ததுவுந் தற்பரமே அகாரமாகும்
அறிவுடைய உகாரஞ்சிற் பரமதாகும்
செறிந்திடுமெ காரமதே மாயையாகும்
சிந்தித்த மூலமதே சிகாரமென்பர்
பிறிந்தளவு முலகமெல்லாஞ் சமையந்தானும்
பேதமெனுங் கருவிவகை யெல்லாமாகும்
அறிந்ததுவும் அகாரமெனும் பாதந்தன்னை
அடிமுடியென் றனுதினமும் அறிந்துநோக்கே. (4)

நோக்கமுடன் மூலமெனும் பாதந்தன்னை
நுட்பொருளாம் சிற்பரத்தி னூடேநோக்குந்
தீர்க்கமுட னாதார வகையுந்தாண்டி
திருநயனம் நாசிநெற்றி நடுவேபார்த்துப்
போக்கறிந்து யிந்தநிலை நோக்கவல்லார்
புரிசடையோன் றன்னுடைய புதல்வராவர்
ஆக்கமுட னருட்சுடர்போற் குருவைத்தானே
அனுதினமும் நோக்கிநிற்பா ராசானுமே. (5)

ஆசானு மீசானு மொன்றேயாகும்
அவனவனு மொன்றாகும் அதுதானாகும்
பேசாத மந்திரமு மிதுவேயாகும்
பேரொளியின் வடிவாகும் பேருமாகும்
நேசாருங் கலைகளெல்லாந் தானேயாகும்
நிலையான ஓங்கார பீடமாகும்
ஈசானை யாசானைக் காணும்பேர்க்கு
பின்பமுடன் கைலாச மெய்தலாமே. (6)

எய்தரிய பரசிவத்தை மூலந்தன்னில்
இருசுடரு முதித்தொடுங்கு மிடமேயென்று
உய்வழியீ தென்றுமன துட்கொண்டேநீ
உண்மையா யெண்ணுவதே உறுதியாகும்
மெய்தொழியுஞ் சுழிமுனையே கம்பமாகி
மெய்ப்பொருளாஞ் சோதியென மேவிநிற்கும்
இவ்வகையே மூலமெனும் பாதந்தன்னை
யிருநேர மற்றிடத்தே யிறைஞ்சிக்காணே. (7)

காண்பதுதான் பேரொளியின் காட்சியாகும்
காணரிய பொருளாகுங் காட்டும்போது
ஆண்பெண்ணாய் அலியாகி அடியுமாகி
அப்பாலைக் கப்பாலா யமர்ந்தசோதி
விண்பயிலும் வேதமெல்லாந் தேடிக்காணு
வெறும்பாழ தாகியே மேவிநின்றார்
சேண்பயிலுஞ் செகசோதி மூலந்தன்னை
தேடரிய பாதமென்றே தெளிந்துநோக்கே. (8)

தெளிவரிய பாதமது அகாரமாகி
சிற்பரமுந் தற்பரமுந் தானேயாகி
அளிவரிய சோதியது தானேயாகி
அடிநடுவு முடியாகி யமர்ந்துநின்று
மொழியரிய முதலாகி மூலமாகி
முச்சுடருந் தானாகி முடிந்தசோதி
சுழியினிலே முனையாகிக் கோபமாகிச்
சொல்லரிய வெழுத்தென்றே தொகுத்துப்பாரீர். (9)

தொகுப்பதுதான் மந்திரங்கள் கருவிநூல்கள்
சொல்லரிய தத்துவங்கள் தன்னையெல்லாம்
வகுப்புடனே யித்தையெல்லாங் கண்டுநீங்கி
வாகான உடலுயிரை வகையாற்கண்டு
பகுப்புடனே சேராமற் பாதந்தன்னைப்
பரகதிக்கு வழியெனவே பற்றிக்கொண்டு
விகர்ப்பமில்லா மூலமதில் நின்றசோதி
மேலான பாதமென்றே மேவிநில்லே. (10)

மேவியதோர் சற்குருவின் பாதந்தன்னை
மெய்ஞ்ஞான மென்றதனை மேவிக்கொண்டு
ஆவியுடல் காயமெல்லா மறிந்துபார்த்து
அத்தனார் வடிவென்றே அறிந்துகொண்டு
பாவினையு ளானதெல்லாம் விட்டுநீங்கிப்
பகலிரவு மற்றிடத்தே கருத்தைவைத்து
சீவனையுஞ் சிவந்தனையு மொன்றாய்த்தானே
திருமூலர் பாதமென்றே திடமாய்க்காணே. (11)

திருமூலர் ஞானம் டுக முற்றிற்று.



உ

குருவே துணை.

ஏ ழா வ து:

தெட்சணாமூர்த்தி திருவாய் மலர்ந்தருளிய

# ஞான சூத்திரம் ௮.



வாசிவா ஓமெனவே மனக்கண்கொண்டு
மகத்தான கேசரியில் மணிநாவுன்னி
ரேசிவா வென்றந்தத் தமரீற்செல்ல
நின்றிலங்கும் ரவிமதியு மொன்றாய்க்கூட்டும்
நாசிவா வென்றுசுழி மேலேநின்றால்
நாதாந்தக் கண்திறந்து அமுதம்பாயும்
வாசிவா வசிவசியென் றமுதங்கொண்டால்
மகத்தான மௌனசிவ யோகங்காணே. (1)

காணவே சிவயோகந் தீர்ந்துகொண்டு
கருணைபெறச் சுழிமுனையில் மணிநாவுன்னி
தோணவே மந்திரங்கள் செபித்தாயாகிற்
சொல்நிறைந்த வட்சரங்க ளெல்லாஞ்சித்தி
பேணவே யாதாரம் பிலமாய்நிற்கும்
பெருகின்ற வாசிநிதம் பிறழாதையா
பூணவே மனம்நிறுத்தி மவுனம்பூட்டப்
பொருந்திமனங் கனிந்தமுதம் பொழியும்பாரே. (2)

பாரப்பா கனிந்தமுதந் தன்னைமைந்தா
பத்தியுடன் மவுனமதா யிருந்துகொண்டு
சீரப்பா சிவசத்தி சொரூபங்கண்டு
சிறப்புடனே மூலவுருத் தெரிந்துகொண்டு
சாரப்பா சதாகாலம் பூசித்தாக்கால்
சரமான வாசிதிரு வாசியாச்சு
மேரப்பா மேருகிரி தீபம்போலே
விளங்குமடா சுழினையடி முடியைப்பாரே. (3)

பாரடா வடிமுடியைப் பார்க்கும்போது
பதிவான சரமேகாட் சரத்தில் மைந்தா
நேரடா சவுமயமாய் நிலைக்கச்சொல்வேன்
நிசமான புலத்தியனே நினைவாய்க்கேளு
மேரடா வலஞ்சுழிக்கீத் தடியின்கீழே
மெய்ஞ்ஞான யிடஞ்சுழிமேற் சூலஞ்சாத்திச்
சேரடா சூலயிடை தீயுங்காலுந்
தீர்க்கமுடன் யிறுத்திமேல் விந்துபோடே. (4)

போட்டதொரு விந்துவட்டக் கோட்டைக்குள்ளே
பூரணமே காட்சரத்தைப் பார்க்கும்போது
நாட்டமுட னைந்தெழுத்து மங்கேகண்டேன்
நன்மையுள வெட்டிரண்டு மங்கேகண்டேன்
ஆட்டமென்ற முக்கோண மேருங்கண்டேன்
அதிலிருந்து சிதம்பரசக் கரமுங்கண்டேன்
தேட்டமென்ற தேட்டமெல்லா மங்கேகண்டேன்
சேர்ந்தொன்றாய்ச் செயல்கண்டே னறிவினாலே. (5)

அறிவாலே காணுவது யென்னவென்றால்
அந்தரங்க மானதுகே சரியின்மூலம்
குறியான மூலமதில் மனக்கண்வைத்துக்
கூர்மையுடன் காண்பதுவே காட்சியாகும்
நெறியான காட்சியிலே நின்றால்மைந்தா
நீடூழி காலமெல்லாம் நிலைக்குஞ்சித்து
விரிவான பரவெளியே மோட்சவீடு
வேதாந்த மோட்சமடா ஞானத்தியே. (6)

பாரப்பா பரவெளியின் றன்னிலேதான்
பராபரமாய் நின்றவெளி தன்னைப்பார்க்க
ஆரப்பா அறிவார்கள் சொல்லக்கேளு
அருள்ஞான புலத்தியனே ஐயாஐயா
நேரப்பா நின்றமதி தன்னைப்பார்த்து
நீமகனே ரவிமதியு மொன்றாய்க்கூட்டிச்
சேரப்பா சுழினையென்ற நந்திகண்ணில்
சேர்ந்துமிக வறிவான கண்ணாற்பாரே. (7)

கண்ணாலே அறிவுகொண்டு பார்க்கும்போது
 கருணைவளர் சக்கரந்தான் வட்டமாக
முன்னாலே தோணுமடா முதுகண்பாரு
 முத்தியுள்ள சக்கரத்தின் சத்தந்தன்னை
என்னாலே சொல்லவென்றால் நாவோயில்லை
 இருகதிரு மொன்றான சூட்சந்தன்னை
தன்னாலே தானறிய வேணுமல்லால்
 தாமொருவன் சொன்னதினால் தன்மையாமோ. (8)

தேட்சணாமூர்த்தி ஞான சூஸ்திரம் ௯

முற்றிற்று.



இராமநாதபுரம் சோதிடர் கோவிந்தசாமி நாயுடு அவர்களிட மிருந்து வாங்கியஏட்டுப்பிரதியின்படி இந்தசாஸ்திரம்அச்சிடலானது.

உ

குமரன்றுணை.

எட்டாவது:

தெட்சணாமூர்த்தி திருவாய்மலர்ந்தருளிய

# ஞான சூத்திரம் ௰.



பூசிக்க வொட்டாது மனந்தானப்பா
போதங்கள் மீதேறிச் செல்லொட்டாது
பூசிக்கவொட்டாது அஞ்சிலொன்று
புகழான பூரணத்தை நாடொட்டாது
காசிக்குப் போனாலுந் தீர்க்கொட்டாது
கர்மவினை தன்னைவிட்டுப் போமோமைந்தா
தேசிகன்றன் திருவருளை நாடொட்டாது
செப்பரிய ரெண்டெழுத்தின் சோதிதானே. (1)

தானென்ற பொருளறிய வகையைக்கேளு
சாதகமாய் மூலமதாய்த் தாண்டிப்பார்த்து
வானென்றுந் தீயென்றும் மண்தானென்றும்
வண்மையுள்ள தத்துவத்தை வருந்திப்பார்த்துக்
கோனென்ற கருவறியக் கருவைச்சொல்லும்
குறிப்பாக மனதொத்து யீந்தாரானால்
ஏனென்றும் பேசுமது தெய்வந்தானும்
இயல்பாக உன்மனதிற் றெளிந்துபாரே. [2)

பாரடா வென்மகனே மனத்தைத்தோய்ந்து
பண்பான சடலத்தைத் தெளிந்துகொண்டு
ஊரடா அங்கேதா னிருக்குமப்பா
உத்தமனே தொத்தியல்லோ அதுவைக்கட்டு
காரடா நமக்கந்த வூருந்தானும்
கருவிகா ணாதிகளைக் கட்டிக்கொண்டு
சேரடா யிருக்குமப்பா வறிந்துநீயும்
செயலான மனோன்மணியைச் சென்றுபாரே. (3)

சென்றுதான் பார்த்தாக்கால் மோட்சமுண்டு
செயலான வோரெழுத்திற் றெளியலாகும்
பண்டுதான் பெரியோர்கள் சொன்னநூலைப்
பத்தியுடன் பார்த்தல்லோ கேசரியோரானார்
திண்டிமுண்டு பண்ணும லறிவைநோக்கிச்
செங்கண்மால் தன்னுடைய பாதந்தன்னை
நன்றெனவே மனதையங்கே யொட்டிக்கொண்டு
நலமாக மேலவழி நடுவைப்பாரே. (4)

நடுவிருந்த சிறீமகுட வெளியைக்கண்டு
நலமான சிலம்பொலியி லோசைகண்டு
நடுவிருந்த பரவெளியைத் தேடிப்பார்த்து
நாயகனார் பாதமதை நவின்றுபோற்றி
நடுவிருந்த செம்மதியைத் தோன்றித்தோன்றி
நாதனரு ளருளாலே நவின்றுநோக்கி
நடுவிருந்த முக்கோண வெளியைப்பார்த்து
நாசிவழி மீதேறி வாசிபாரே. (5)

வாசிவழி தேடினால் மோட்சமுண்டு
வம்பான பேய்ப்பயல்க ளஞ்சுமுண்டு
நேசத்திற் கட்டியல்லோ யோகம்பார்த்து
நினைவாக வோரெழுத்தை நிறுத்திமூட்டி
மாசியிருள் கண்டிருப்பார் பெரியோரப்பா
மகாதவத்தைத் தேடிவோர் மனதைத்தோய்ந்து
பூசிப்பார் தவநெறியை மனதில்வைத்து
போக்கோடே பூரணத்தைப் பூரிப்பாரே. (6)

பாரப்பா பதஞ்சலியே சொல்லக்கேளாய்
பாங்கான முப்பூவை யறியவேணும்
சேரப்பா சுழிமுனையில் மனக்கண்நாட்டிச்
செயலான அம்பரத்தைக் காணவேணும்
நாரப்பா நரம்புதசைத் தோலாம்வீட்டை
நம்பாதே யென்மகனே நடுவைப்பாரு
காரப்பா திரிகோண ஆட்சிவீட்டைக்
கைமுறையாய்ச் சிலேட்டுமத்தைக் களத்திப்பாரே. (7)

களத்தியே பார்த்தாக்கா லொளிவுதோன்றும்
சருமமெல்லாந் தான்பறக்கும் கருத்தையூட்டு
வளத்தியே யுண்டாகும் பதினாறப்பா
வாய்ப்பான வாயுவைத்தான் வருத்தியேத்து
தளத்தியில்லை யெமவாதை தேகத்துக்குச்
சாகிறதோர் வாதையில்லை சடலத்துக்கு
இளத்தியாய் வயதாகுஞ் சடலமப்பா
ஏகாந்த பூரணத்தி லிருந்துபாரே. (8)

இருந்துதான் பார்த்தாக்கா லெல்லாந்தோணும்
என்னத்தை யறிந்தென்ன வெமவாதைக்கு
வருந்துவது ஞானமொன்று அறிவினாலே
வம்பான சிலேட்டுமத்தை வழலைபோக்கி
அருந்துவது அக்கினியை மேலேயோட்டி
அம்பரத்தின் வீடணுகி அந்தமாகி
திருந்துவது யேகாந்த ரூபமாகி
செப்பரிய ரெண்டெழுத்திற் றெளிந்துநோக்கே. (9)

நோக்கடா மேல்வழியை நோக்கிப்பார்த்து
நுண்மையாய்க் கண்ணொளியில் ரேசகம்பூட்டு
தாக்கடா அங்கனேதா னிருக்குந்தெய்வம்
சரணமென்று ரெண்டையுமே பூசைபண்ணு
வாக்கடா வழிசொல்லி வந்து நிற்பன்
வண்மையுள்ள ரெண்டெழுத்து வந்துபேசும்
ஆக்கடா வாழ்வதற்கு மூலவீட்டில்
அடுப்புவைத்துச் சோறுகறி ஆக்குஆக்கே. (10)

தெட்சணாமூர்த்தி ஞானசூத்திரம் ௰

முற்றிற்று.



இராமநாதபுரம் சோதிடர் கோவிந்தசாமி நாயுடு அவர்களிட மிருந்துவாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.



௨

கடவுள் துணை.

ஒன்பதாவது:

தேட்சணாமூர்த்தி திருவாய்மலர்ந்தருளிய

# ஞான பஞ்சாட்சரம் ௬௩.



மூலவிந்து நாதவிந்து எழுத்திலுலே
முன்னகர மெழுத்தாறு மகாரம்பத்தாய்
மேலான சிகாரமே பனிரண்டாகி
மெய்யான வகாரமது பதினாறாகி
ஆலவிட மமுதான அகாரம்ரெண்டாய்
அப்பாலும் நின்றபொரு ளறிவேயொன்றாய்
பாலமது மயிற்பாலம் நெருப்பாறான
பஞ்சாட்ச ரத்தினடி முடிகாப்பாமே. (1)

பதினெட்டும் பதினாலே மூன்றேயாகிப்
பவமகற்றும் நவமான வகாரமாறாய்
பதினெட்டி லேழாகி மூன்றேயாகிப்
பதினெட்டும் இம்மூன்றும் பொருளுண்டான
பதினெட்டும் விபூதியடா திருநீறாகும்
பார்மகளுந் திருமகளும் மனோமணித்தாய்
பதினெட்டுந் தியானத்துட் கொண்டுநீயும்
பதித்திடுவாய் புருவமையம் பதிவாய்த்தானே. (2)

பதிவான புருவமைய மணித்தாய்வீடு
பகாரிது அடிமூல மாறுதாரம்
பதிவான தாறுக்கும் பதியாம்வீடு
பத்தியுட னறிவோமென் றஞ்சுஞ்சேர்த்துப்
பதிவான உகாரமப்பா வோதிக்கொள்வாய்
பகரைந்து மைந்துமொரு பத்துமோது
பதிவான மனோமணித்தாய் தானேதானாய்ப்
பந்துடைய சித்தனெனப் பகருவாளே. (3)

பகாரிது பகர்ந்தபின்பு உன்னைத்தானே
பாரென்னைப் பாருன்னைப் பார்நீதானே
பகாரிது அவர்சொல்லு முன்னைத்தானே
பதிந்துபார் விபூதியது வுறுதியாச்சு
பகாரிது உறுதியல்லோ உலகமாளுள்
பத்துவய தானதிவள் சித்தியானாள்
பகாரிது இப்படியே பகர்ந்தசொல்லைப்
பத்திப்பார் பிறவிபிணி யத்துப்போச்சே. (4)

பிணியான பலநோய்க ளத்துப்போச்சு
பிரணவத்தோ டாறுதலம் பதிமேலாச்சு
பணியான சரப்பளியு மணியலாச்சு
பார்மகளோ டஞ்சுமொரு சத்திதீட்சை
அணியாத ஆபரண மணிந்தேகொண்டாள்
அரகரா ஏகதசம் தீட்சைபூதி
தணியாமற் றணிதணியும் விபூதியாலே
சாபமெலாம் நிவர்த்தியது முத்தியாச்சே. (5)

முத்தியென்ற சச்சிதா னந்தநந்தி
மூலமதோ விர்த்தியதாய் நின்றமூர்த்தி
அத்திமுகன் மும்மதத்தோன் கந்தன்முன்னோன்
ஐந்துகரத் தொந்திவயி றுடையபெம்மான்
சித்திபெறத் திருக்கையாற் றிருநீறள்ளித்
தீர்க்கமுட னுனக்களித்த களிப்பினாலே
முத்திபெற வந்ததிந்த மூலந்தன்னில்
முன்னின்ற பஞ்சாட்சரச் சுருக்கமுற்றே. (6)

தெட்சணாமூர்த்தி ஞான பஞ்சாட்சரம் சு

முற்றிற்று.



சாத்தூர்தாலூகா நடுவிற்பட்டி காசிவாசி மௌன குமாருசுவாமி
ள் கொடுத்த ஏட்டுப்பிரதியின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருதேவ துணை.

பத்தாவது:

தெட்சணாமூர்த்தி திருவாய்மலர்ந்தருளிய

# ஞான பூஜாவிதி.



கேளப்பா புலத்தியனே ரசத்தில்போதம்
கெடிபடா சிவனைப்போல் வார்த்துக்கொண்டு
தாளப்பா பூசைசெய்யக் கைலாசபோதம்
தப்பாமற் சதகோடி காலமாகும்
தேளப்பா கொட்டினதோர் விஷத்தைப்போல
தேடரிது ரசத்தினுட குளிகையோகம்
வாளப்பா புலத்தியனே நாவினுள்ளே
வாயடக்கஞ் செய்துகொள்ள யோகமாச்சே. (1)

ஆச்சப்பா புலத்தியனே சூதங்கட்ட
ஆராலும் முடியாது அறிவான்சித்தன்
பேச்சப்பா அக்கினியிற் செயித்துதானாற்
பேரண்டங் கிழிந்தாடும் வேதையாகும்
நீச்சப்பா இதைக்கட்ட வகையைக்கேளு
நீதியெவர் களுங்கூட வரிதாமப்பா
ஏச்சப்பா யிதனுடைய வர்மம்சொல்வேன்
யெந்தனுக்குப் பரையீசன் இதைத்தந்தானே. (2)

தானென்ற புலத்தியனே வகையைக்கேளு
தயங்காமற் சொல்லுகிறேன் வகைதானப்பா
கோனென்ற அழலாடி யெனக்குச்சொன்னார்
குறிப்பாக மனந்தேறிக் கூறிச்சென்றேன்
ஏனென்றால் புலத்தியனே உனக்குயானும்
இன்பமுடன் சொல்லிவிட்டேன் கருத்தானப்பா
வூனென்ற சூதமொன்று வெள்ளியொன்று
உத்தமணிச் சாரதனை விதனையாட்டே. (3)

ஆட்டப்பா கருவினுட மத்தஞ்சாத்தில்
அதுவிரண்டு கடிகைபட ஆட்டிக்கொண்டு
நீட்டப்பா ரவியினுட கிண்ணிதானும்
நிலைக்கவே நாலுவிர லங்குலத்தால்
மூட்டப்பா ஓட்டிவிட்டுச் சீலைசெய்து
மூதண்டக் குக்குடத்திற் புடத்தைப்போடு
கோட்டப்பா மேலேறிப் பதங்கங்காணும்
குமுறவழி காரமிட்டு வுருக்கிக்கொள்ளே. (4)

கொள்ளப்பா மணியதுபோ லுருகியாடும்
குருமுகம்போ லொளிவுமிடுங் கறுப்பதாகும்
மெள்ளப்பா அதினுடைய வேதைமார்க்கம்
வெட்டவெளி குருடனுக்கு மெய்க்கோலப்பா
உள்ளப்பா கொண்டுஜீவ னங்கள் செய்வர்
உலகத்துள் நரகத்தே கிடந்துமாய்வர்
தள்ளப்பா யிதுவல்ல காயசித்தி
தாண்டவமே புரிவதற்குப் பூசைபண்ணே. (5)

பண்ணப்பா வோராண்டு செய்தாயானால்
பராபரமே வுனக்குவந்து யேவல்செய்யும்
விண்ணப்பா வொருவருக்கும் மணிசொல்லாதே
வேதாந்த நரகத்தே கிடந்துமாய்வார்
கண்ணப்பா உனக்கேத்த பிள்ளையானால்
கைமுறையாய்ச் செய்துஅவன் குணத்தைப்பாரு
நண்ணப்பா கருவைத்தா னொளிக்கவில்லை
உற்றுணர்ந்து மனந்தேறிப் பாருபாரே (6)

பாரப்பா யிதற்குக்கை லாசமுண்டாம்
பாரார்கள் சித்தரிதை மறைத்துப்போட்டார்
ஆரப்பா யென்னைப்போலே திறந்துசொல்வார்
ஆச்சரிய மிதனுடைய வேகமப்பா
ஓரப்பா யிதனாலே யோகசித்தி
உத்தமனே சிவபூசை பண்ணநன்று
காரப்பா யிதுதனக்குப் பூசைசெய்துக்
கருவாக அர்ச்சனைசெய் பதங்கஞ்செய்யே, (7)

செய்யப்பா யிப்படியே பூசைகொண்டு
திறமாகச் செய்யவல்லோ பலத்தைக்கேளு
மெய்யப்பா! அவனுடைய பிதுர்க்களெல்லாம்
மிகக்கோடி நரஜென்ம மல்லவல்ல
பொய்யப்பா சொல்லவில்லை தேர்ந்துபாரு
புலத்தியனே உன்றனக்குக் கருவைச்சொன்னேன்
வையப்பா பூசையிலே யென்னைவைத்து
மவுனமாய்ச் சிவனைவைத்து நோக்குநீயே. (8)

நீயென்றும் நானென்றும் வேறுமில்லை
நிராகாரம் போலவுந்த னுக்குத்தோணும்
நாயென்றும் சென்மத்தால் தாண்டியேத்தும்
நற்சென்ம மல்லவப்பா சித்தன்சித்தன்
பாயென்றார் கூடுவிட்டுக் கூடுகொள்ளும்
பதருமவிருந்துகொள்ளக் கெவுனம்சாடும்
நோயென்ற வறுமையெல்லா மகன்றுபோகும்
நுண்ணிமையாய்ச் சிவலிங்க போதந்தானே. (9)

தானென்ற குளிகைசெப மாலைசெய்து
தாக்கப்பா பதினாறு நடத்தானென்று
மானென்ற மதியாளை வட்டஞ்செய்ய
மகம்மேரு போலவுமே வொளியுங்காணும்
கோனென்ற அவள்ரூபஞ் சொல்லப்போகா
கோடிரவி ரூபமவள் சொல்லக்கேளு
தேனென்ற மனோன்மணியாள் சிவனுமங்கே
சிந்தித்த போதமெல்லாந் தெளியுந்தானே. (10)

தெட்சணாமூர்த்தி ஞான பூஜாவிதி

முற்றிற்று.



சாதனூர் தாலூகா நடுவிற்பட்டி காசிவாசி மௌன குமாருசுவாமிகள் கொடுத்த ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.





குருவே துணை.

பதினோராவது:

தெட்சணாமூர்த்தி திருவாய்மலர்ந்தருளிய

# சுத்தஞானம் ௱.



பன்னிரண்டு காலான புரவியப்பா
பாங்கான மூலவெளி தன்னில்நிற்கும்
நன்னயமாய் வாசிதனி லேறிக்கொண்டு
நாடியந்த நடுவீடு தன்னிற்சென்றால்
முன்னின்ற முப்பாழுக் கப்பாலேறி
முகப்புண்டு முற்சந்தி வந்துகூடுஞ்
சின்னசிறு வாசல்கடந் தப்பாற்சென்றால்
சிதம்பரமுங் காணமுத்தி சித்தியாமே. (1)

பதினொன்று பேரான ருத்திரர்க்குப்
பதியாக நின்றபொருள் பகரக்கேளு
விதிமுறையாற் சுழிநடுவே முளைத்தெழுந்து
விளங்கிநின்ற ஓங்காரக் கம்பத்துச்சி
அதிவிதங்கா ணாகாயம் அகாரபீடம்
அமர்ந்தபரா பரத்தினிலை யறியவேண்டி
திதியான திருச்சிற்றம் பலத்தைக்கண்டு
தெரிசிக்க அவர்க்குமுத்தி சித்தியாமே. (2)

பத்துதிக்கப் பதினாறு கோணந்தானும்
பாங்கான பலகோடி யண்டமெல்லாம்
சுத்திநிற்குங் கருவிகர ணாதியான
சொல்லரிய தத்துவத்தின் தொகுதிமுற்றும்
அத்திமுத லெறும்புகடை தானாய்நின்ற
அதீதபொரு ளிதனையறிந் துண்பாராகிற்
சித்தமதிற் றிருச்சிற்றம் பலத்தைக்கண்டு
தெரிசிக்க அவர்க்குமுத்தி சித்தியாமே. (3)

ஒன்பதுள வாசலது வுலகந்தனில்
உற்றவர்க ளெல்லோரு முகந்துகாண்பார்
அன்புடைய தொருவாச லாருங்காணார்
அறுத்தடைத்த வாசல்கடந் தப்பால்தாண்டி
வன்புடைய மயிர்ப்பால மீதிலேறி
மனதுகனிந் துருகிநித்தம் மகிழ்விஞேடும்
தென்பாகத் திருச்சிற்றம் பலத்தைக்கண்டு
தெரிசிக்க அவர்க்குமுத்தி சித்தியாமே. (4)

எட்டெழுத்தா யிரண்டெழுத்தா யேகமாகி
யியங்கிநிற்கும் பெருமைதனை யெவருங்காணார்
நெட்டெழுத்தும் வட்டெழுத்தின் மேலேநிற்கும்
நிலையறிந்து வுரைத்திடுவார் குருவுமாகும்
விட்டிடமுந் தொட்டிடமும் அறிந்தாயானல்
விளங்கிநின்ற அகாரமுதல் தோற்றங்காணும்
திட்டமிது திருச்சிற்றம் பலத்துளப்பா
தெரிசிக்க அவர்க்குமுத்தி சித்தியாமே. (5)

ஏழான வுபாதியென்று லெளிதேயல்ல
யிதுகடக்கும் வாறதுதா னியம்பக்கேளு
வேளான மன்மதனைக் காலால்நீக்கி
விளங்கிநின்ற வங்கிதனை மேலேயேத்து
கோளான கருவியெல்லாம் வீரிட்டோடும்
கூறுவது மேலான குறிப்புங்காணுந்
தேளான பசியடங்க அமுதமுண்டு
திருநடனங் காணமுத்தி சித்தியாமே. (6)

ஆறான கோட்டைக்குள் மூலவட்டம்
அதில்நாலு கொத்தளமே சுவாதிஷ்டானம்
கூறான கோணமறு கொத்தளங்கள்
கூறுபிறைக் கோட்டைகொத் தளமேபத்து
வீறான வனுகதங்கொத் தளமீராறு
விசுத்தியறு கோணங்கொத் தளமீரெட்டு
தேறாத வட்டவாக் கினைமேலேறிச்
சிதம்பரமுங் காணமுத்தி சித்தியாமே. (7)

ஐந்தான வெழுத்துத்தான் விபரங்கேளு
அப்பனே பிருதிவிக்கு நங்கென்றோர்சொல்
சந்தையதா யப்புவுக்கு மங்கென்றோர்சொல்
சாதகமாய் தேயுவிலே சிங்கென்றோர்சொல்
விந்தையதாய் வாயுவுக்கு வங்கென்றோர்சொல்
விளங்கிநின்ற வாகாயம் யங்கென்றோர்சொல்
சிந்தையிலிவ் வகைதெளிந்து சென்றாயானால்
சிதம்பரமுங் காணமுத்தி சித்தியாமே. (8)

நாலதாம் வேதத்தின் முடிவில்நிற்கும்
நாதாந்தப் பேரொளியைக் காணவேண்டி
மூறதளம் முளைத்தெழுந்த வகாரமேலே
முட்டிநின்ற ரம்பத்தின் முடிவிலேறிக்
காலகால மிருப்பவர்க்கு மேலேநோக்கு
காரணமும் பூரணமுங் கலந்துதோணும்
சீலமதாய்த் திருச்சிற்றம் பலத்தைக்கண்டு
தெரிசிக்க அவர்க்குமுத்தி சித்தியாமே. (9)

மூவெழுத்து மீரெழுத்து மாகிநின்ற
மூலமதை யறிந்துரைப்போர் குருவுமாகும்
ஊவெழுத்துக் குள்ளேதா னிருக்குதப்பா
உண்மையிதைக் கண்டறிந்தோ னவனேயாசான்
யாவருக்குந் தெரியாது அறிந்தோமென்று
அவரவர்கள் சொல்வார்க ளறியாமூடர்
தேவரோடு மாலயனுந் தேடிக்காணாத்
திருநடனங் காணமுத்தி சித்தியாமே (10)

ஈரெழுத்து மோரெழுத் தாகியங்கே
இயங்கிநிற்கு மசைவையப்பா மூலத்துள்ளே
வேரெழுத்தும் வித்தெழுத்து மிரண்டுங்கண்டு
வித்திலே முளைத்தெழுந்து விளங்கிநிற்கும்
சீரெழுத்தை யுன்னிநல்ல வாசியேறித்
தெருவீதி கடந்துமன மண்டபத்துள்
தாரகத்துக் குடைபொருளாம் பரத்தைக்கண்டு
சார்ந்தவர்க்குச் சித்திமுத்தி தருகுந்தானே. (11)

ஏகமென்னு மோரெழுத்தின் பயனைப்பார்த்து
    யெடுத்துரைக்க யிவ்வுலகி லெவருமில்லை
ஆகமங்கள் நூல்கள்பல கற்றுக்கொண்டு
    அறிந்தோமென் பார்மவுனம் அவனைநீயும்
வேகாததலைசாகாக் காலைக்கேளு
    விபரமது யெடுத்துரைப்போ னுசாஞகும்
தேகமதை வோரெழுத்தாய்க் காண்போன்ஞானி
    திருநடனங் காணமுத்தி சித்தியாமே. (12)

குருவான வுமைபாக ரெனக்குச்சொன்ன
    கூறிய ஞானமது பன்னிரண்டும்
பொருளாகச் சொல்லிவிட்டே னப்பாநீங்கள்
    பொருளறிந்தாற் பூரணமும் பொருந்திக்காணும்
பிரிவாக யிந்நூலைப் பழித்தபேர்கள்
    பேருலகிற் பசாசரெனப் பிறப்பிப்பாரே
அருளாக ஆராய்ந்து நோக்கும்போது
    ஆகாயம் நின்றநிலை யறியலாமே. (13)

தேட்சணாமூர்த்தி சுத்தஞானம் ௰௩.

முற்றிற்று.



மதுரை திண்டுக்கல் ரோட் ஜடாமுனி கோவிலுக்குமேல்புறம் வீட்டிலிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சிவராஜயோகி சாமியார் பங்காருசாமி அவர்களிடமிருந்த ஏட்டுப்பிரதியின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது



குருவே துணை.

பன்னிரண்டாவது:

தெட்சணாமூர்த்தி திருவாய்மலர்ந்தருளிய

# ஞானச் சருக்கம் ௩.



பூரணமாய் நின்றதொரு ஐயர்பாதம்
போற்றியே யெந்நாளும் புவியின்மீது
காரணமாய் நின்றதொரு ஆயிதன்னைக்
கண்மூக்கு மத்தியிலே கருதிப்பார்த்து
ஆரணமாம் ஆகாசம் பூமிலோகம்
அடுக்கடுக்காய் நின்றதொரு அரையைக்காண
வாரணத்தின் முகத்தோன்றன் பாதம்போற்றி
மனதுள்வைத்து யெந்நாளும் மகிழ்ந்திட்டேனே. (1)

மகிழ்ந்திட்டேன் மக்களுக்குப் புத்திசொன்னேன்
மாயையொடு பொய்கோபம் மூன்றுந்தள்ளி
இகழ்ந்திட்ட மனிதரொடு வாய்பேசாமல்
எப்போதும் வேதாந்தத் துறையில்நின்று
பகர்ந்திட்ட பூரணத்தை நோக்கிக்கொண்டு
பராபரியைப் பூசித்துப் பானம்பண்ணி
அகந்திட்ட ஆறுவரை யூதியேறி
யானந்த மானதொரு அறிவிற்கூடே. (2)

கூடியிருந் தாடலென்றுக் குறியைக்கேளு
கோர்வையுள்ள மூன்றெழுத்தின் குணத்தைப்பாரு
ஆடியிட வேண்டாங்காண் அங்கென்றாணி
அமட்டியுள்ளே கொண்டிடவே அடங்கும்வாசி
தேடியே அலையாதே சிங்கென்றேதான்
சிரத்திலங்குஞ் சிவசூட்சந் தெரிந்துபோகும்
மாடியே மங்கென்ற வெழுத்தைச்சேர்க்க
மகாயோக சித்தியடா மனதுள்ளோர்க்கே. (3)

மனமான மகாரத்தை விடுதலாகும்
　　மருவியதோர் சிகாரத்தை வாங்கலாகும்
இனமான யிங்கதுவே யிதுக்கடுக்காய்
　　எல்லாமுஞ் சொல்லிவிட்டே னிகத்துள்ளோர்க்குத்
தினமான தீட்சையுடன் மனவாலை
　　சிறுபிள்ளை செய்தாலுஞ் சித்தியாகும்
தனமான குமரியடா ஆத்தாள்சொன்னாள்
　　சாபங்கள் நிவர்த்தியிது கண்டபேர்க்கே. (4)

இனிதான வோரெழுத்து மிதனுக்குள்ளே
　　இன்பமுள்ள மூன்றெழுத்து மிதனுக்குள்ளே
கனிவான அஞ்செழுத்து மிதனுக்குள்ளே
　　காயசித்தி யோகசித்தி யிதனுக்குள்ளே
முனிதான முப்பத்தி ரண்டுதீட்சை
　　மோகனமுந் தம்பனமு மிதனுக்குள்ளே
பனிதான சாபங்க ளிதனுக்குள்ளே
　　பராபரையின் சிவனுமையின் பாதங்காணே. (5)

தேட்சணாமூர்த்தி ஞானச்சுருக்கம் ரு

முற்றிற்று.

———



சாத்தூர்தாலூகா நடுவிற்பட்டி காசிவாசி மௌன குமாருசுவாமிகள் கொடுத்த ஏட்டுப்பிரதிப்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.



உ

கணநாதர் துணை.

பதின்மூன்றாவது:

கணநாதர் திருவாய் மலர்ந்தருளிய

# ஞானோபதேசம் ௱.



காப்பு.

சிவபெருமான் திருவருளே சிறந்தகாப்பு
ஜெகத்திலுள்ளோர் போற்றுகின்ற தேவிகாப்பு
தவவுருவாய் நிறைந்துநின்ற சத்திகாப்பு
தாயான மனோன்மணிதன் பாதங்காப்பு
பவமகல வெனைப்பெற்ற மாதாகாப்பு
பக்குவமா யெனைவளர்த்த சிவமேகாப்பு
நவகோணத் துள்ளிருக்கும் வெளியேகாப்பு
நாதாந்தந் தெரிந்தருளும் நாதன்காப்பே.

இரவிதனை மதியோடே சேர்த்தால்யோகம்
எட்டாண்டு பார்த்துவா ஞானமுண்டாம்
உறவுடனே வல்லபையுங் கணேசனாகி
உறுதியுடன் சத்திசிவ பூசைசெய்து
பறவிநிதந் தாபரத்தின் சலிப்பில்லாமற்
பரவெளியே கெதியென்று பணிந்துநிற்கத்
திறவுகோல் சுழினையடா சித்திமுத்தி
திங்கள்பதி னாறுசென்றால் திட்டம்பாரே.

பாரப்பா ரவிமதியை யார்தான்காண்பார்
பாடுபட்டு மனங்கசிந்த பண்போன்காண்பான்
நேரப்பா சுழிமுனையோ னொற்றைக்கொம்பன்
நினைவான வல்லபையோ யெண்ணக்காரி
ஆரப்பா அறிவார்க ளிருவர்கூத்தை
அடிமுடியுங் கண்டவனே அதிஷ்டஞானி
காரப்பா நிர்மலத்தை யொடுக்கியப்பா
களிப்புற்று ஆசையற்றுக் காணுகாணே

காணப்பா விதமென்ன மனமாதித்தன்
　　கையிலாச்சு அறிவுநந்தி விந்துமாச்சு
பூணப்பா யிதிரண்டுஞ் சேருங்காலம்
　　பூரணமாம் வாசியிது அம்மாவாசி
தோணப்பா யிடகலையிங் கலையுமாகி
　　சுழிமுனையு மொன்றான சூட்சங்கண்டால்
வீணப்பா பெண்மாயை வீறுபோச்சு
　　விருதுபெற்ற ஆங்காரம் விழலாய்ப்போச்சே. (3)

போச்சப்பா அகாரத்தில் உகாரஞ்சேர்ந்த
　　போதத்தால் மகாரமது புருவமையம்
ஆச்சப்பா யிருவிழியும் நடுவிற்கூட்ட
　　ஆச்சரியஞ் சிவசோதி யண்ணல்ரூபம்
காச்சமாம் பழுத்ததுபோ லுனக்குயோகம்
　　கைவந்து நேர்ந்ததடா களங்கமில்லை
வாச்சுதப்பா கும்பகமும் மவுனந்தானும்
　　வாயாத அஷ்டசித்தும் மருவுந்தானே. (4)

தானான லோபமுதற் கோபம்போக்கு
　　சண்டாள ஆணவமாம் மாயைபோக்கு
வேனான மண்ணாசை பொன்னினாசை
　　வெரும்பிணுக்காம் வல்லமையின் வீரத்தாசை
மானான வுடலாசை தீனியாசை
　　மக்கள்சுற்ற முறவின்முறை மயக்கத்தாசை
கோனான விவையெல்லாந் தள்ளிப்பார்த்தாற்
　　கூடுமடா மெய்ஞ்ஞான யோகந்தானே. (5)

யோகமது வருமுன்னே சரிதைமார்க்கம்
　　உறுநட்ப கிரிகைவிதம் வாமபூசை
பாகமது சிவபூசை தருமதானம்
　　பகருகிற விரதமந் திரங்களோமம்
ஏகமது குருபத்தி சாந்தஞ்சுத்தம்
　　ஈஸ்பரனே கர்த்தாவே யெனச்சித்தித்தல்.
மோகமது பொய்களவு கொலையும்நீக்கி
　　மோசமிலா தேயிருந்தால் முத்தியாமே. (6)

முத்தியென்றால் சிவயோகஞ் செய்யவேண்டும்
　　முதன்மையுள்ள பெரியோரைப் பணியவேண்டும்
பத்தியுடன் மூலமென்ற பொருளைக்கண்டு
　　பணிந்துபி னக்கரத்தைப் பார்க்கவேண்டும்
சித்தியுள ஐந்தெழுத்தின் பிரணவத்தைச்
　　சிறப்புடனே தியானிக்கத் தெரியவேண்டும்
எத்திசைக்கும் யோகமென்ற பொருளைக்கண்டு
　　இனிதாகச் செய்துவந்தால் யோகமாச்சே. (7)

ஆச்சென்ற நிஷ்டையது தெரியவேண்டும்
　　அப்பனே பிர்மநிஷ்டை திருமால்நிஷ்டை
பேச்சென்ற கும்பகத்தி லிருந்துகொண்டு
　　பிரியமதாய் மூலமதி லிருந்துபாரு
ஏச்சென்ற மலர்க்கமல மீதிலேதான்
　　இருந்துகொண்டாற் பிர்மத்தைக் கண்ணிற்காண்பாய்
மூச்சென்ற குண்டலியின் மூலமப்பா
　　முடிவாக வம்மூலந் தெரியும்பாரே. (8)

தெரியுமப்பா நதிதீர்த்த மாடிவந்து
　　திறமாக ஏகாந்த மானபூசை
அரியவே சுழினையடா ஊற்றுக்கண்வாய்
　　அனேவோர்க்குந் தெரியவே பெருகியோடும்
உரியதொரு உதகமது காயாதப்பா
　　உலராத மலர்விருக்ஷ மதனிற்பூவைப்
பிரியமுடன் மனதால்நீ கொய்துகொண்டு
　　பிரணவத்தின் பூசைதனை யறிந்துபாரே. (9)

பாரப்பா வுலகத்தி லனேகசித்தர்
　　பாங்காகப் பூசைதெரி யாமற்போனார்
பேரப்பா அறிவார்கள் மவுனபூசை
　　பிண்டாண்டங் கண்டுகொண்ட சித்தர்காண்பார்
வேரப்பா முதலான மூலம்பாரு
　　வெட்டவெளி யானமணி பீடம்பாரு
ஆரப்பா அந்தயிடமிருந்துகொண்டு
　　அங்கென்று மலர்பறித்து அர்ச்சித்தோதே. (10)

ஓதியே அதிலிருந்து பூசைசெய்தால்
ஒருநாளு மழியாது தேகமப்பா
சாதனையா யடிக்கடிமூ லத்தைத்தொட்டுச்
சதாசிவனார் மூலத்தைத் தியானஞ்செய்தால்
மாதுசிவ காமியுட னீசன்றானும்
வந்துனக்கு வேணதெல்லாம் வழுத்துவார்கள்
தேசியென்ற வாசிதனைப் பிடித்துக்கட்டத்
திகட்டாத அமுதங்கே புகட்டுவாரே. (11)

புகட்டுவா ரெட்டெட்டுச் சித்துமாடப்
போதிப்பா ருபதேச முனக்குமப்பா
அகட்டுவா ரிருவினைகள் துன்பமெல்லாம்
அப்போதே உந்தனுக்குச் சொரூபந்தோற்றும்
பகட்டுதலென் றெண்ணாதே பணிந்துகொள்ளு
பார்மீதிற் சிவயோகம் சித்தியாகும்
திகட்டாத உயிரெழுத்தை யின்னதென்று
தெரியாம லலையாதே செகத்திற்றானே. (12)

தானென்ற பூசையது செய்தாயானாற்
சடலமது அழியாது கெவுனம்பாயும்
ஊனென்ற உயர்நிலையைத் தெரியவேணும்
ஊனுவது அங்கென்று உரைக்கவேணும்
கானென்ற கைமுறைதா னறியவேணும்
கண்சிவக்க மனமுவந்து கருதவேணும்
ஏனென்று இடிமுழங்கி மூலத்தாய்தான்
எழுந்துசிலம் பொலிமுழங்க நடனங்காண்பாய். (13)

நடனமது கண்டத்திற் காணுங்காணும்
நந்தியெழிற் பிரகாசங் கண்ணேகூடும்
கடினமா மென்றெண்ணி மேலேபார்த்தாற்
காலனவன் பலிகொள்ளக் கருதிநிற்பான்
துடினமதாய் காலனுக்கு இடங்கொடாதே
சுழிமுனையில் நின்றுகொண்டு அங்கென்றேதான்
படபடெனக் காலனைநீ விரட்டிவிட்டுப்
பட்டணத்தி லேயிருந்து பதியையாளே. (14)

பதியான பதியுமேது வெனவேயெண்ணிப்
பலநினைவு கொண்டுநின்று பதறிடாதே
விதியான விதியினுட மனையைத்திட்டி
மேலான மணிமவுன வீட்டைநந்தி
மதியான முச்சுழியின் காலைப்பத்தி
மவுனமுடன் நின்றுசிங் கென்றுகும்பி
அதிபதியாய் நீயிருந்து வங்கும்சிங்கும்
அப்பனே மூலமந் திரமாம்பாரே. (15)

பாரப்பா மூலமதைப் பகர்ந்துவிட்டேன்
பார்தனிலே சித்தர்கட்குத் தெரியவேண்டி
நேரப்பா யென்தாயார் கிருபையாலே
நேர்மையுடன் சிவயோகஞ் சித்தியாச்சு
சீரப்பா யிதுபோல யெவருஞ்சொல்லார்
செகமதனிற் கண்டறிந்தோர் சித்தராவார்
ஆரப்பா யிதன்மகிமை தெரிந்துகொள்ளு
அகமகிழ்வாய் பதினாறு சொல்லினேனே. (16)

கணநாதர் ஞானோபதேசம் ௱௬

முற்றிற்று.

1692/2



மதுரை திண்டுக்கல் ரோட் ஜடாமுனி கோவிலுக்கு மேல்புறம் வீட்டிலிருக்கும் ஸ்ரீலஸ்ரீசிவராஜயோகி சாமியார்பங்காருசுவாமி அவர்களிடமிருந்த ஏட்டுப்பிரதியின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன் றுணை.

பதினைன்காவது

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானச்சுருக்கம் க.



செந்திருவாம் அண்டவரை மனதைத்தானும்
செலுத்தியே சிறுவாசற் குள்ளேசென்று
அந்தரமாய் நின்றதொரு சபையைப்பார்த்து
ஐம்புலனை யண்டமதிற் சேர்க்கும்போது
சுந்தரம்போற் சிலம்பொலியுங் காதிற்கேட்கும்
சுப்ரமண்ய னென்றுசொல்லப் பேரும்கொண்டேன்
மந்திரம் போற் கும்பமுனி மகனே ஐயா
மவுனமுட னென்றிதுவே வாகாய்முற்றே. (1)

# 15-வது ஷையார் ஞானச் சுருக்கம் உ.



கேளப்பா உகாரமது விந்துவாகும்
கிருபையுள்ள மகாரமது சத்தியாகும்
ஆளப்பா அகாரமது மூலமாகும்
அப்பனே சிகாரமது வன்னியாகும்
நாளப்பா வகாரமது வாசியாகும்
நல்லதொரு ஓங்காரம் நடுவிலாகும்
வாளப்பா ஊமையென்ற வெழுத்தைக்கண்டு
வளமாகத் தெரிந்துகொண்டால் ஞானந்தானே. (1)

ஞானமென்று வங்கென்றே இடையேமூட்டு
நலமாகச் சிங்கென்றே நடுவேமூட்டு
மோனமென்ற சுழிமுனையில் அங்கென்றானு
முதலென்ற பிரணவத்தைத் தெரிந்துகொண்டு
தானமென்ற ஓங்காரங் கொண்டபோது
சரியான ஞானமது சித்தியாகும்
கானமுட னுந்தனுக்குச் சொல்லிவிட்டேன்
கருத்துடனே இரண்டையும்நீ கண்டுதேறே. (2)

சுப்பிரமணியர் ஞானச்சுருக்கம் க, உ முற்றிற்று.



உ

கடவுள் துணை.

பதினாறுவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானானந்தம் ௬.



சீர்மேவும் நாவினா லடைத்திடாமற்
செலுத்தடா மனந்தனையுன் னாக்குநேராய்ப்
பார்மேவும் அண்டவுச்சி தன்னிலேதான்
பாயுமடா வாசியுந்தான் பரத்தினூடே
தார்மேவும் மூலமடா தன்னிலிங்கம்
தானிருக்கும் மண்டலத்துட் டமர்தான்நிற்கும்
கார்மேவும் விந்துவடா பிடரிமார்க்கம்
கசிந்துருகி யிரங்குமடா கண்டபாரே. (1)

பாரடா மனந்தனையுன் னாக்கின்நேராய்ப்
பத்தியே அண்டமதைப் பார்க்கும்போது
ஆரடா வாசியுந்தான் பிடரிமார்க்கம்
ஆகாசப் பிரமத்தி லடங்கிப்போகும்
நேரடா நிருவிகற்ப சமாதியாச்சு
நித்யபிர்மச் சாரியென்று பேருண்டாச்சு
வீரடா சிலம்பொலியுங் காதிற்கேட்கும்
வேலெடுத்து வீதிசுத்தி வருகலாச்சே. (2)

வருகலாம் அக்ஷரத்தை நினைக்கும்போது
மைந்தனே மனம்பிரண்டாற் பிரிந்துபோகும்
உருகவே அக்ஷரத்தைத் தள்ளியேதான்
உன்மனமே அக்ஷரமாய் அண்டமேவிக்
குருபரன்போல் உன்மனதைச் செலுத்தும்போது
கோடிரவி மதியுடைய காந்திமீறும்
திருவருளால் லாகிரியும் உயரத்தூக்கும்
சிவனோடே சேர்ந்துவிளை யாடலாமே, (3)

ஆடலாம் ரவிமதியும் சுடர்தான்மூன்று
அண்டவுச்சி தன்னிலேதா னடங்கிப்போகும்
பாடலாம் பச்சையடா அண்டம்வாங்கிப்
பாச்சடா உப்பையுந்தா னண்டத்துள்ளே
தேடலாம் திருகுகள்ளிப் பாலுங்கூட்டித்
தில்லைப்பால் விட்டரைத்து அண்டவாயைக்
கூடலாம் உப்பையுந்தான் குவித்துமூடிக்
கொண்டுமும் மண்டலந்தான் புதைத்தெடுத்தே. (4)

எடுத்திடவே மெழுகுபோற் றிரண்டுநிற்கும்
எந்தெந்தச் சரக்கெல்லாம் இதமாய்நீறும்
அடுத்துமிகத் தாம்புரத்தில் நீரேவாங்கும்
அடங்காத வியாதியெலா மருண்டேவோடும்
தடுத்துமிகப் போகாமல் அண்டமேவித்
தன்மனமே சாட்சியதாய்த் தவமேசெய்து
கடுத்துமிகத் திரியாதே அகத்தியோனே
கந்தர்நூல் கருத்தறிவா யைந்தும்முற்றே. (5)

சுப்பிரமணியர் ஞானைந்தும் ரு

முற்றிற்று.

—————



மதுரை திண்டுக்கல் ரோட் ஜடாமுனி கோவிலுக்கு மேல்புறம் வீட்டிலிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சிவராஜயோகிசாமியார் பங்காருசுவாமி அவர்களிடமிருந்த ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது



உ

குருவே துணை.

பதினேழாவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# சுத்தஞானம் அ

பூரணத்திற் றனடங்கிப் பொறிகளைந்தும்
போதமய மாய்நிறுத்திப் புருவமேவிக்
காரணத்தின் குண்டலியாங் கதிருக்குள்ளே
கலந்தெழுந்த கேசரியைக் கடந்தப்பாலே
மாரணத்தில் நெருப்பாறும் மயிர்ப்பாலத்தில்
மனதடங்கித் தான்கடந்து மவுனம்பெற்று
வாரணத்தின் முகத்தானை வணங்கியேதான்
வடிவுடனே நிராமயத்தை வழுத்துவோமே. (1)

ஓமென்ற பிரணவமுங் கடந்தப்பாலே
யுகமுடிந்த பட்டணத்திற் கப்பாற்சென்று
ஆமென்ற அச்சரங்கள் கீழ்மேலாக
அடங்கியே பதினறை யெட்டதாக்கி
நாமென்ற சொல்லற்று வெளியாய்ப்பாடி
நந்தியுட கொலுவிருப்பை நன்றாய்ச்சொல்வேன்
காமென்ற பீடமடா சென்மசென்மம்
கடந்தெழுந்தாற் பிர்மநிலை காட்டுவோமே. (2)

காட்டுகிறேன் அகத்தியமா முனியேகேளு
கருத்தொன்றாய்த் தானிறுத்திக் கபடமற்று
நாட்டுகிறேன் மௌனத்தால் தினமுமாக
நந்திகொலுச் சிங்கார நடனங்கண்டு
பூட்டுகிறேன் பிர்மத்திற் செல்லும்போது
பொறிகளைந்துங் கருவிதொண்ணூற் றாறும்போகும்
வீட்டிலையும் அதிகமடா காந்திகண்டேன்
வேல்முருக னென்றுபேர் விளம்புவாரே. (3)

வாரான பிரமத்திற் செல்லும்போது
வஸ்துடனே மதுவுண்டு பசியுந்தீர்ந்தேன்
ஈரான கமலவிம லமணிதன்னைக்
குறிப்பறிந்து விந்துவிலே கூட்டியொன்றாய்
நேரான கேசரத்திற் றாக்கிமைந்தா
நெடுந்தூரம் சுத்திநெருப் பாறுதாண்டி
வீரான ஆறுபடை வீடுதன்னில்
வெட்டவெளி நிராமயமாய் நின்றேன்பாரே. (4)

பாரப்பா கலைமாறி அமிர்தமுண்ணும்
பன்னிரண்டு முகத்தினுட வன்னியாலே
ஆரப்பா அஷ்டகர்மம் வசியப்போக்கு
அறுபத்து நாலுசித்து மாட்டிவைக்கும்
கூறப்பா உப்பினுட நிலையுந்தோணும்
கூராத யந்திரத்தின் கொடுமையாலே
வீரப்பா வாதமெல்லாம் கைக்குள்ளாகும்
விந்துமணி திரண்டிடவே வேதைதானே. (5)

தானென்ற ஆறுவளமு மடங்கிப்போகும்
தந்திரடு வட்டமதிற் றானேசெல்லக்
கோனென்ற வைத்தியமுஞ் சித்தியாகும்
கும்பிடுநற் சிப்பியுட கூர்மையாலே
தேனென்ற அகாரமுடன் உகாரந்தானும்
சிறந்தெழுந்த சிகாரமடா மூன்றினாலே
ஊனென்ற திரிகோணந் தன்னிற்சென்று
உண்மையென்ற மௌனத்தைக் கண்டுபாரே. (6)

பாரேநீ சாக்கிரமே யீசன்விந்து
பஞ்சேந்தி ரியத்தாலே மாயையாச்சு
ஆரேநீ யணுப்போலே தந்தைவிந்து
அப்பனே நாதமதில் அடங்கும்போது
சீரியே விடயமெட்டுங் கூடிச்சேர்ந்து
ஜெனிக்கையிலே பஞ்சேந் திரியமாச்சு
வீரியமாய்க் கருவிதொண்ணூற் றாறுமாக
விசைகொண்டு ஜென்மமுந்தா னெடுத்தவாறே. (7)

எடுத்தநிறை லாவதென்ன மௌனம்பாரு
எட்டாத சுழிமுனையி லிருந்துகொண்டு
அடுத்துமிக மனந்தனையும் போக்கிடாமல்
அஷ்டாச்ச ரத்தினுட அருமைபெற்றுத்
தொடுத்துமிகக் கருமமெல்லா மறிந்துகொண்டு
சுத்தசலந் தன்னிலேதான் சுகிர்தமாகத்
தடுத்துமிக மூழ்கிடவே காந்திமீறும்
சார்ந்தவருக் கென்றூனு மெட்டுமுற்றே. (8)

சுப்பிரமணியர் சுத்தஞானம் ஷ.

முற்றிற்று.





சுந்தரபாண்டியம் சாலிமகாரிஷி கோத்திரம் வை. சிவகுருநாத மூப்பனார் அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன் துணை.

பதினெட்டாவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானம் ௰௬.



முந்தியே உகாரசுடர் மூன்றிலே
        முனைதாண்டி முச்சந்தி நடுவேசென்று
செந்தியே சிறுவாசற் குள்ளேநின்று
        ஜீவாத்மா பரமாத்மா யிரண்டுமொன்றாய்
நந்தியினாற் பத்தியேமுக் கோணமேறில்
        நடுவிருக்குங் குண்டலியின் நடனம்பெற்றுச்
சந்தியிலே முப்பழமு மமிர்தமுண்ட
        தந்தியையும் பணிந்துமிகச் சாத்துவோமே. (1)

சாத்துவோம் சராசரங்கள் யோகந்தானும்
        தன்மையுள அகஸ்தியமா முனியேகேளு
மாத்திரையும் அதிகம்நா லெட்டதாகும்
        மவுனமெலாம் வெளியாகும் பதினாறுக்குத்
தூத்துகிறேன் சுழினையடா மூலவீட்டில்
        துருவமா மெனத்துரியா தீதந்தன்னிற்
கூத்திலேயும் மிச்சமடா நடனங்காணும்
        கோடிவரை யிருந்தாலும் மவுனம்பாரே. (2)

பாரேநீ சாகரத்தின் விந்துக்குள்ளே
        பன்னிரண்டு முகத்துடைய வன்னியாலே
கூரேநீ ரவிமதிகுண் டலியிற்பாயும்
        குளிகைகண்ட மாத்திரையின் கூர்மையாலே
வீரேநீ மனந்தீ யும் அனுவதாக்கி
        விட்டகுறை தொட்டகுறை விதியைப்பார்த்துச்
சூரேநீ அசுரர்தமை வதைத்ததாலே
        சுப்ரமண்ய னென்றெமக்குப் பேரிட்டாரே. (3)

பேரிட்டே யென்னையழைத்தா ளென்தனுத்தாள்
　　பிரணவத்தோ டாதாரந் தன்னைக்காட்டிச்
சீரிட்டே யென்னையெடுத்து முத்தமிட்டாள்
　　தித்திப்புப் பாலமிர்தம் செலுத்திவைத்தாள்
வீரிட்ட ஆங்காரம் போகச்செய்தாள்
　　விந்துவிலே வீற்றிருந்து வாழச்செய்தாள்
பாரிட்ட நால்வேத மார்க்கஞ்சொன்னாள்
　　பஞ்சவர்ணப் பதிதனிலே பாய்ந்தேன்பாரே. (4)

பாரப்பா அறுபத்து நாலுயோகம்
　　பார்தனிலே பாராம லிறந்துபோனார்
ஆரப்பா அறுபத்து நாலுயோகம்
　　அறைகிறேன் அகஸ்தியமா முனியேகேளு
வீரப்பா அண்டவுச்சி தன்னுக்குள்ளே
　　வீரமுடன் யெட்டிலேயும் நாலைச்சேர்த்துக்
கூரப்பா தூமணியாந் தன்னைப்பார்த்துக்
　　கூற்றுவனை யிருப்பிடத்தைக் கூர்ந்துகாணே. (5)

காணப்பா கார்மேகம் யிடியிடித்துக்
　　கருணையுடன் பொன்மாரி பெய்தாற்போலத்
தோணப்பா தோணுமடா துருவமேவச்
　　சுத்தசிவ கெங்கையுந்தான் தோணுமைந்தா
நாணப்பா கெங்கையிலே அமிர்தமுண்டு
　　நாற்பத்து முக்கோண மேருபுக்கி
வீணப்பா கருவியெலாம் வேரறுத்து
　　வேதாந்தந் தன்னில்விளை யாடினேனே. (6)

விளையாடிப் பார்க்கையிலே சத்தமேகம்
　　மின்னுமடா யிடியிடித்து வேகமாக
நிலையாக வருஷித்து யெங்குந்தானாய்
　　நிறைந்ததினால் நிலத்தினிலும் உப்புண்டாச்சு
மலையாமற் றலமறிந்து வுப்பெடுத்து
　　மார்க்கமுடன் சுத்தசலந் தன்னைவிட்டு
அலையாமற் கரைத்ததையும் யிறுத்துமைந்தா
　　அப்பனே அடுப்பேத்திக் காச்சுகாச்சே. (7)

காச்சியடா இறக்கிநீ பார்க்கும்போது
கருணையுள்ள வுப்பதுவே வெளுப்பதாகும்
தாச்சியினி வையாமற் சாகாமூலி
தன்னுடைய சாரையுந்தான் உப்பிற்சேரு
பாச்சியினி பதினாறு தரமேமைந்தா
பாலகனே குகையில்வைத்து வுருக்கிச்சாய்க்க
வாச்சுதடா மணிபோலே திரண்டுபோகும்
மௌனமென்ற மணியினுட வளமைதானே. (8)

தானென்ற தாம்பரத்தை யுருக்கிமைந்தா
சத்தியமாய் மணிதனையுங் கொடுக்கும்போது
வானென்ற தாம்பரத்தின் நீரைவாங்கி
வலுத்தமணி குதித்துயினிக் கீழேவீழும்
கோனென்ற மணிதனையும் பதனம்பண்ணு
கூறுகிறேன் மாத்ததுவும் பதினாறுகும்
தேனென்ற தங்கமதை யென்னசொல்வேன்
சிவசிவா தெரியாமற் பதனம்பண்ணே. (9)

பதனமென்றால் ரவிமதியும் சுடர்மூன்றாலே
பார்தனிலே ரசவாதம் பலிதமாகும்
அதனமென்று வைத்தியமும் வசியந்தானும்
அஷ்டகர்ம மனேகமுந்தான் சித்தியாகும்
நிதனமுடன் மௌனமதை யறியாவிட்டால்
நீணிலத்தி லெடுத்ததுறை விபத்தாய்ப்போகும்
விதனமினி வையாமல் விந்துநாதம்
வெளிதனிலே வைத்துவினை யாடுவாயே. (10)

ஆடுவா யங்கென்று கண்டந்தன்னில்
அழுத்தியடா யம்மென்று மதியிற்றாக்கு
நாடுவாய் உம்மென்று ரவியில்வாங்கு
நலமுடனே உங்கென்று கண்டத்தேகிக்
கூடுவாய் உம்மென்று ரவியில்தாக்கிக்
கூறுகிறேன் அம்மென்று மதியிற்றாக்கித்
தேடுவாய் சிங்கென்று அண்டமேவித்
திடப்படவே மவுனமுந்தான் தீர்க்கமாமே. (11)

தீர்க்கமுடன் மௌனமதை யறிவாருண்டோ
செப்புகிறே னிம்மென்றுற் றிடமதாகும்
பார்க்கையிலே அனுதினமும் மறந்திடாமற்
பலபேத மார்க்கமாய்த் திரிந்திடாமல்
கார்க்கையிலே சமுசாரத் துக்கந்தள்ளிக்
கடுங்கோபம் விட்டகன்று கருணைமேவி
ஏர்க்கையிலே குருவினுட பாதம்போற்றி
யெட்டாத முக்கனியை யெடுத்துவுண்ணே. (12)

எடுத்தெடுத்துக் கற்பமறிந் துண்டுதேறி
யேகாந்த மானதொரு புருவமீதில்
அடுத்தடுத்துச் சவ்வாரி செய்யும்போது
ஆகாச வீதிவழி யருகேசெல்லும்
கொடுத்தெடுத்து ஆறுவரை தாண்டிநிற்கும்
கோடிரவி போலவுந்தான் வெளிச்சமாகும்
கடுத்தலைந்து திரியாமற் கமலபீடம்
கண்டவனே கைலாசத் தேகம்பாரே. (13)

பாரேநீ சர்கரத்தின் விந்துக்குள்ளே
பஞ்சவர்னம் போலவுந்தான் பரிதான்காட்டும்
ஆரேநீ யறியார்கள் உலகத்தோர்கள்
அகஸ்தியனே உந்தனுக்கு அருளிச்செய்தேன்
மாரடா அண்டவுச்சி யருகிற்சென்று
மகத்தான லாடக்கண் திறந்துபாரு
வீரடா பன்னிரெண்டு தலமொன்றாகும்
விந்துவிலே விளைந்தேறி யறிந்துபாரே. (14)

பாரப்பா அண்ணாக்கை யுண்ணாக்கேற்றிப்
பார்தனிலே பார்த்தவர்க்கே பாவமாகும்
ஆரப்பா கண்வெடிக்கும் தேகம்போகும்
அம்பியா யோகமென்ற அப்யாசத்தால்
வேரப்பா யதுவெல்லாந் தள்ளிமைந்தா
வீரமுடன் சொன்னதெல்லாம் விபரமாகச்
சாரப்பா தாரணையின் சமாதியோகம்
தனித்திருந்து பூரணமாய்த் தவமேசெய். (15)

செய்யப்பா இன்னூல்தான் பதினாறுக்குள்
திரட்டிவைத்தேன் ஞானமெல்லாந் தீர்க்கமாக
மெய்யப்பா பன்னிரண்டு வருடங்காத்து
மேன்மையுடன் திரிந்தாலும் வீணருக்குக்
கையப்பா இன்னூலைக் காட்டிடாதே
கருமம்வந்து மெய்துமடா கண்டபோரு
வையப்பா பதினாறெந் நூல்தானாகும்
வஸ்துவுட பாதமலர் வணங்குமுற்றே. (16)

சுப்பிரமணியர் ஞானம் ௰௬

முற்றிற்று.



சுந்தரபாண்டியம் சாலிமகாிஷி கோத்திரம் வை. சிவகுருநாத மூப்பனார் அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது,



உ

பராபரந் துணை.

பத்தொரஸ்பக்ரவஜ

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானம் ௱௨.



உதிரமதே ஓமென்ற மூலசிவன்
ஓங்காரப் பிரணவமு மிதுவேயாச்சு
பதியான வட்டமிது கணேசன்வீடு
பாங்கான குண்டலியும் வல்லபையுமாகும்
விதியான விதியெல்லா மிதிலாகும்
வேதாந்தஞ் சித்தாந்த மிரண்டுமிங்கே
மதியான ரவிமதியு மூடேயோடி
வாசியென்ற யெழுத்ததினாற் றுக்குதாக்கே. (1)

தாக்கினாற் சதாசிவத்தை யறியலாம்பார்
தாண்டியல்லோ அகத்திசர் கண்டாரையா
நோக்கினால் நோக்கோடு போகமாட்டார்
நடங்கினாற் சுணங்கினுட வாலுந்தோன்றும்
போக்காக அரிகிளியு மங்கென்றேதப்
புகழாக வங்குசிங்கு ரெண்டுமொட்டி
வாக்கினால் வாசியென்ற குதிரையேற
வாலையிடங் கணபதியை யறியலாமே. (2)

அறிந்தேதா னாதியென்ற மூலந்தன்னை
அப்பமுனி கண்டுடனா னந்தமாகி
மறிந்தேதா னுளறாம லுரைக்கக்கேளு
மகாமூர்த்தி யானந்தச் சரத்தைப்பாரு
எரிந்தாலே ஆகாசங் கல்த்தொங்காது
இருள்வெளியாம் ஞானமிர்த மின்பமாகும்
செறிந்தஞானி கண்டாலட் சரத்தைச்சொல்லார்
செப்பினே னிதனுடசிங் காரங்கேளே. (3)

கேளுநீ சத்திமகன் ராமதேவர்
　　கெடியான சிறிங்காரம் நீயும்பார்ப்பார்
நாளையென்று சொல்வார்கள் சொல்லார்சொல்லார்
　　நாயனுட பதனுமஞ் சொல்லப்போமோ
சூழ்வினையால் விட்டகுறை வந்துதானல்
　　துடர்ந்துமற்ற வினையறியச் சொன்னேனமப்பா
நீயிந்தப் படியிருந்தால் நிலைக்கும்ஞானம்
　　நிஷ்டையுட னிருந்துஅவ்வும் உவ்வும்பாரே. (4)

பார்க்கையிலே ஆயிரத் தொன்றுந்தோன்றும்
　　பரையினுட வேனுமங்கே தோணுமப்பா
தீர்க்கமன மாயிருந்து பார்க்கவேணும்
　　திக்குதிசைப் பாலகரும் வீரபாகும்
பார்க்கவே தேரோடே வருவார்பாரு
　　பலமுனிவர் தேவரிஷி வருவாரப்பா
சேர்கையாஞ் சேவலுங் கொடியுந்தோன்றும்
　　சிவயீசர் பதத்தையங்கே காணலாமே. (5)

கண்டவுடன் சடாட்சரத்தைச் சொல்லிநீயும்
　　கந்தபரி மளமங்கே கரைத்துவைத்து
விண்டமுல்லை பிச்சியிரு வாட்சியோடு
　　மிகுந்தபனி நீர்தன்னு லர்ச்சியையா
அண்டர்களுந் தேவர்களுஞ் சத்தியஞ்சும்
　　அவரோடே சூழ்ந்துவருங் கணங்கள்யாவுந்
தொண்டர்களாய் நிறைந்திருக்கும் சோதிகாணுஞ்
　　சூட்சாதி சூட்சமெய்துங் காணுகாணே. (6)

காணப்பா சவ்வுடனே ரவ்வுங்கூட்டிக்
　　கலந்துநின்ற அவ்வுணவ்வும் நன்றாய்ச்சேரு
சேணப்பா பவ்வுவவ்வும் ரெண்டுங்கூட்டிச்
　　சேருமந்த ஆறெழுத்துஞ் சரமாய்க்கட்டு
தாணப்பா அறுகோணச் சக்கரத்தாற்
　　றண்டவபஞ் சாட்சரத்தை சடாக்ஷரமாயுண்ணில்
வீணப்பா மற்றதெல்லா மிதற்குள்ளரச்சு
　　வேதாந்தஞ் சித்தாந்தம் ரெண்டுமாச்சே. (7

ஆச்சப்பா ஞானவழி துறந்துபோச்சு
அரகரா சிவசிவா யென்னசொல்வேன்
நீச்சப்பா யிதினுடைய நீச்சேயல்லால்
நிலையாத கசமல்லோ மற்றதெல்லாம்
போச்சப்பா யிவள்செய்த நரகத்தாலே
போக்கறியா மாடுகட்டும் ஞானமாமோ
பேச்சப்பா சொன்னக்கால் நரகமெய்தும்
பிழைப்பார்க்கு ஞானவழி துறந்திட்டேனே. (8)

துறந்தவழி யடையாமற் பார்ப்பாயாகில்
துரியமென்ற வாசியிலே யேறிப்பாரும்
மறந்தாலோ பரமோக்ஷ மில்லையப்பா
வாலையுட பதத்தாலே வங்கென்றோதக்
குறைந்தாக்கால் சரம்பிழைக்கும் குணங்கள்வேறும்
குலைப்பிட்டுத் தலைபுழுத்த நாய்போலாவாய்
சிறந்திருந்த நிஷ்டையிலே பிடித்துப்பாரு
சீக்கிரத்திற் சிவாயவழி திறக்குந்தானே. (9)

தானவனு மாகிநின்று லப்பாசொல்வேன்
தத்துவந்தொண் ணூற்றாறுந் தாண்டியோடும்
மோனவழி யுள்வழியு மூலசூஸ்திரம்
மூதண்டப் பரவெளியுங் கடந்துநிற்கும்
கானமுத முண்டாங்கா லவனேயோகி
கருணையுள்ள மெய்ஞ்ஞானி யாவருக்கும்
ஞானமணித் தாயார்தா னெனக்குச்சொன்னாள்
நாதனின்ற நிலையெனக்குக் காட்டினாளே. (10)

காட்டினாள் திசைகளெட்டும் பெந்தம்பண்ணிக்
கங்கெங்கெண பதிமாவென் றட்சரத்தினாலே
மூட்டினாள் ஓமென்ற பிரணவத்தாலே
மூதண்ட மட்டெனக்கு அடங்கிப்போச்சு
நீட்டினேன் சரத்தாலே பூதமொக்க
நிலைநிறுத்தி அங்கங்கே நிறுத்திப்போட்டேன்
ஆட்டினே னிதுகொண்டு அண்டமெல்லாம்
அப்பனே யிதையெடுத்து ஆட்டுவாயே. (11)

ஆட்டினேன் அவ்வும்உவ்வு மொன்றாய்க்கூட்டி
அதினுடனே கிலியும்ஐயுஞ் சவ்வும்பூட்டிப்
பூட்டிஞ லப்பூட்டுத் திறக்கப்போமோ
பூரணத்தி லொடுங்குமந்த ஆமையாகக்
காட்டினால்நீ யலையாதே வெளியைப்பத்திக்
கண்டாலோ பரைவாசல் திறக்குமையா
தேட்டுநீ ஓங்காரத் தட்சரமேயப்பா
சிவாயமென்ற அட்சரத்தைக் கூடக்கூட்டே. (12)

சுப்பிரமணியர் ஞானம் ௰௨.

முற்றிற்று.



மதுரை வடக்குமாசிவீதியி லிருக்கும் பாத்திர வியாபாரம் ந. ரா. ம. கணபதியாபிள்ளை யவர்களிடமிருந்த ஏட்டுப்பிரதியின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

இருபதாவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானம் உ௰.



காப்பு.

பூரணமா யெங்கெங்கு மொன்றாய்நின்ற
பொருள்தனையுந் தானறிந்து போதமாகிக்
காரணமா யிலாடக்கண் திறந்துபார்த்துக்
கருத்தொன்றாய்த் தானிறுத்திக் கபாடநீக்கி
நாரணனூர் பதிகடந்து கெவுனமாக
நந்தியுட பார்வையினால் நடனங்கண்டு
தாரணையாய் முப்பாழுங் கடந்துநின்ற
தந்திமுக னைப்பணிந்து அறிவாய்ப்பாரே. (1)

அறிவான பெரியோர்க்கு என்னவேணும்
ஆகாசக் கெவுனரசக் குளிகைவேணும்
நெறியான சிவயோக நிஷ்டைவேணும்
நேமமுடன் சத்திசிவ பூசைவேணும்
குறியான காயாதி கற்பம்வேணும்
குணமான பிள்ளையிடங் கூடவேணும்
சரியாகச் சராசரத்தைப் பார்க்கவேணும்
சடாக்ஷரமே பூரணமென் றறியும்பாட்டே. (2)

பாட்டுகளை அகஸ்தியமா முனியேகேளு
பண்பாக அஷ்டகர்ம மறிந்தபேர்க்கு
நாட்டுகிறே னஞ்சனமும் மறைப்புவித்தை
நலமான வாதமுடன் ஞானந்தானும்
பூட்டுகிறேன் யோகமுடன் சமாதிநிஷ்டை
பொறிகளைந்து மொன்றாய்ப் புலன்கடன்னைத்
தேட்டிலையு மதிகமடா பிர்மந்தன்னைச்
சீவனிலை சிவனிலையுந் தெளிந்துபாரே, (3)

பாரப்பா ராஜாங்க யோகந்தானும்
பார்தனிலே ஆரறிவார் கோடிக்கொன்று
ஆரப்பா ஆதாரம் வெவ்வேறென்று
அகங்குளிர்ந்து பாசாம லறிவுங்கெட்டு
நேரப்பா பன்னிரண்டு தலங்களென்று
நிருவிகற்ப சமாதிகளை யறியாமற்றான்
வேரப்பா பலநூல்கள் பாராதென்றன்
வெட்டவெளி அஞ்ஞானின் விபரங்காணார்
சாரப்பா அதையறிந்தால் யோகமாச்சு
தந்திரியையுங் கடந்துநின்றால் மவுனமாமே. (4)

ஆமென்ற †பாலம்நெருப் பாலுந்தாண்டி
ஆறுமுக வேலவனென் றருளும்பெற்று
ஓமென்ற பிரணவமே சுழினைவீடு
ஒருகோடி ரவிபோலக் காந்திமீறும்
நாமென்று சொல்லாமல் நந்தியூடே
நாற்பத்தி முக்கோண மேருசென்று
காமென்ற காமதேன் கற்பகத்தைக்
கருவறிந்து கண்டவனே ஞானிதானே. (5)

தானென்ற ஆணுவத்தா லுலகம்பாழாம்
சஞ்சார சமாதியினால் மவுனமாகும்
ஊனென்ற ரவிபோலே மதிதான்நிற்கும்
உற்றுப்பா ரைந்திடமே கர்மபீடம்
கோனென்ற ஐந்திடமே பிர்மபீடம்
கோடி ஒரு நெல்லியுந்தான் குளிர்ச்சிகாட்டும்
தேனென்ற கனையெருமைப் பாலுமெத்த
சித்தர்களாய் ரகசியங்கள் செப்புவாரே. (6)

செப்புவா ரண்டவுச்சிக் குள்ளேமூலம்
சிவசிவா சோதியுட விருட்சமுண்டு
முப்பொருளு மொன்றாக நிறுத்திமைந்தா
முடியிலொரு லாடக்கண் திறந்துபார்க்கக்
கற்பூரத் தீபம்போற் சோதிகாணும்
கபாலவுச்சி முதுகுவழி யேறிப்பாயும்
தற்பரத்தி னுன்னையுந்தா னுயரத்தூக்கும்
சாதகமாய் நீயறிந்து தணிந்துநில்லே. (7)

† பாலம்=மயிர்ப்பாலம்.

நில்லடா ரேசித்துக் கும்பித்தேதான்
நிறுத்தடா பூரித்து நிலையில்நின்று
வில்லடா விசைகொண்டு பார்க்கும்போது
விட்டகுறை தொட்டகுறை யிரண்டுங்காணும்
கொல்லடா கருவிகளு மாண்டுபோகும்
கூடாத மந்திரத்தின் குறியைக்காட்டும்
அல்லடா ஆதிவஸ்தும் அநாதிவஸ்தும்
அருமையுட னொன்றாகச் சேர்த்துப்பாரே. (8)

பார்க்கையிலே அகத்தியமா முனியேகேளு
பன்னிரண்டு அங்குலந்தான் பாயும்போது
ஏர்க்கையிலே சந்திரன்றன் நாலும்போச்சு
என்மகனே தேகமுந்தா னிறந்துபோகும்
கார்க்கையிலே நாலையுந்தா னெட்டிற்சேரு
கங்குல்பக லொன்றாகக் கலந்துபோகும்
மார்க்கமதை யறியாமல் மனிதர்தாமும்
மாண்டிறந்து போவதற்கு வருந்துவாரே. (9)

வருவதுவும் போவதுவும் யோகந்தானும்
மகத்தான கற்பமொடு மவுனந்தானும்
திருவான வாதமுடன் வைத்தியந்தான்
தீர்க்கமுட னஞ்சனமுந் திலதப்போக்கும்
மருவியே அஷ்டகர்மம் மறைப்புவித்தை
மகத்தாமைம் பத்தோரட் சரங்காடமும்
குருபரனே குருச்சொல்ல வேணுமென்று
கும்பிட்டே னிருதாளைப் பணிந்தேன்பாரே. (10)

பாரேநீ அகத்தியமா முனியேஆறு
பத்தோடு நான்குவித யோகமென்பர்
சீருகெட்டுத் திரிந்துமவ ரிறந்துபோவார்
செப்புகிறேன் ராஜபா ஜாங்கயோகம்
ஆறொருவ ரறியாமற் பேதஞ்செய்து
ஐம்பத்தோ ரட்சரமும் வேதமாகக்
கூறாகச் சொன்னதுபோல் மனிதர்தன்னைக்
கொல்லுவதற் கொப்பிணையாய்க் கூறினாரே. (11)

கூறியதோ ரிராஜரா ஜாங்கயோகம்
குறிப்பறிந்து சொல்லுகிறேன் மகனேகேளு
வீறியமா கவுந்தானே மனமொன்றாகி
விந்துவடா புருவமதை யுருவிப்பாரு
சீறியே ரவிதனையும் மதியிற்சேர்த்துச்
சித்தமுட னக்கினியில் ரவியைச்சேர்த்து
மாறியே மனக்கண்ணி னாலேபார்த்து
மகத்தான யோகமுந்தான் கைக்குள்ளாச்சே. (12)

ஆச்சென்ற அரிக்குமுத லெழுத்தைக்காணார்
அதிலடங்கும் வட்டமுந்தான் விந்தும்யாரார்
மூச்சென்ற விந்துவல்லோ உம்மென்றாச்சு
முடிவான அகாரமுந்தான் சேரலாச்சு
நீச்சென்று திரியாம லறிந்துகொண்டு
நிருவிகற்ப சமாதியிலே நிலையில்நில்லே
வீச்சென்ற கொலைகளவு செய்திடாமல்
வேதாந்த விசாரணையை விரும்பித்தேறே. (13)

விரும்பியே மூலமடா அண்டத்துச்சி
வேதமடா சந்திரன்றான் நாலுமிச்சம்
திரும்பியே போகிறதும் வருவதுந்தான்
சிவத்தோடே சேராமற் சிதறிப்போனால்
துரும்புபோ லுன்தேக மிருக்கும்பாரு
சோதிமணி துலங்குகின்ற யிடமுங்காணார்
கரும்பிலையும் ரசினையடா மதுவைக்காணார்
காலனுக்கே ஆளாகப் போவான்தானே. (14)

தானென்ற ஆணுவத்தைப் போக்கிநீயும்
தனித்திருந்து யோகமென்ற தவமேசெய்தால்
கோனென்ற குண்டலியா மண்டத்துள்ளே
கோடிரவி போலவுந்தான் காந்திமீறும்
ஊனென்ற கண்டத்துக் கவமேபோக்க
உன்மனதில் நினைத்தபடி யூகங்காட்டும்
தேனென்ற அருவியே யமிர்தம்பாயும்
திரையேழும் மகிழ்ந்துமிகத் தீர்க்கமாமே. (15)

தீர்க்கமுடன் யோகமுந்தான் முடிந்தபோது
சித்தியாம் விநாயகனார் செயல்தன்னாலே
பார்க்கையிலே மவுனத்தி லடங்கிப்போகும்
பன்னிரண்டு முகத்துடைய வன்னிசேரும்
கார்க்கையிலே முப்பாழுங் கடந்துசெல்லும்
கருமமென்ற வினைகளெல்லாங் கலங்கியோடும்
ஏர்க்கையிலே யிருதயத்தை யொன்றதாக்கி
எட்டிரண்டு மொன்றாகச் சேர்த்துப்பாரே. (16)

பாரடா எட்டிரண்டு மறியாத்தோசி
பரப்பிர்மந் தன்னுடைய பாதங்காணார்
ஆரடா எட்டிரண்டு மேதென்றாக்கால்
அப்பனே அகாரமல்லோ சந்த்ரபீசம்
மேரடா சூரியன்று னுகாரமாகும்
மேன்மையுள்ள சிகாரமுந்தான் வன்னிவன்னி
வேரடா சந்திரனைச் சூரியனிற்சேரு
விட்டகுறை தொட்டகுறை தெரியுந்தானே. (17)

தொட்டகுறை சொல்லுகிறேன் துரியாதீதம்
துலங்குமடா வன்னியுந்தா னதன்மேல்நிற்கும்
வட்டமிட்ட சூரியன்றான் கனலிற்சென்று
வடவரையி னுச்சியினில் மாறிப்பாயும்
திட்டமுட னக்கினியும் பிர்மவீட்டிற்
சிறந்துமிகச் சேர்ந்திடவே அமிர்தமாகும்
கட்டணையாய்த் திரியாதே நாதவிந்து
நாற்பத்து முக்கோண நளினந்தானே. (18)

தானென்ற ஐம்பத்தோ ரட்சரத்தைச்
சத்தியமாய் மனதடங்கி யண்டத்துள்ளே
ஊனென்று பாயுமடா வுந்தனன்பு
ஒன்றான அட்சரமே பிர்மந்தன்னிற்
கோனென்றே ஒடுங்குநிலை பெற்றுமைந்தா
கோடிரவி மதியினுட காந்தியாலே
தேனென்ற அண்டவுச்சி தன்னைச்சுற்றித்
திருவான பஞ்சார மிதுவுமாச்சே. (19)

ஆச்சடா கருநெல்லி மரமீதாச்சு
அப்பனே வெண்சாரை சந்த்ரநாமம்
மூச்சடா அக்கினியே சுணங்களுகி
முழுதுமடா கனைபெருமைப் பாலுண்டாச்சு
நீச்சடா விருக்ஷந்தான் சோதியென்றால்
நிலையான பராபரமே சோதிசோதி
வாச்சடா இம்மென்ற மவுனந்தன்னை
வசமாக அனுதினமும் நிறுத்திப்பாரே. (20)

சுப்பிரமணியர் ஞானம் உம்.

முற்றிற்று.





சுந்தரபாண்டியம் சாலிமகாரிஷி கோத்திரம் வை. சிவகுருநாத மூப்பனார் அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

இருபத்தோராவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானம் ௨௫.



சீரான வுலகத்தோர் மயங்கவேதான்
சிறப்பாக வேதமென்றும் புராணமென்றும்
நேராகக் கட்டிவைத்தான் பலநூலெல்லாம்
நினைவதுவும் மயங்கியவர் நிசமென்றெண்ண
மாரான வாறுகப் பொய்யைச்சொன்னான்
வகையாக வேதவியா சன்றானப்பா
வீரான திரிமூர்த்தி யுத்தாரத்தால்
விதவிதமாய்ச் சாஸ்திரங்கள் பாடினானே. (1)

பாடினான் திரிமூர்த்தி தெய்வமென்றும்
பரிவாக மோட்சமது மீவாரென்றும்
நாடியே யவர்தனையும் பூசித்தாக்கால்
நன்மைமிகத் திற்செல்வ மீவாரென்றும்
சோடினையா யதுக்கெல்லா முத்தாரங்கள்
சுந்தரம்போற் றனிறுத்தி மாயஞ்செய்து
வாடாமற் றன்வாழ்வீ ரென்றுசொல்லி
மதிமயக்கஞ் செய்துவிட்ட வரிசைகேளே. (2)

கேளடா மூவருட வரிசைசொல்வேன்
கெடியான சிவனுக்கோ ஜாலவித்தை
நாளடா லட்சமது பாடமாகும்
நாரணற்கு வினோதவித்தை லட்சம்பாடம்
நீளடா பிரமனுக்கு அதர்வணத்தில்
நிச்சயமாய்ச் சொல்லுகிறேன் லட்சம்பாடம்
வாளடா யிந்தவித்தை யாலேயப்பா
மதிமயக்கஞ் செய்திடுவார் வையகத்தே. (3)

வையகத்தோர் தனைமயக்கிக் கெடுக்கிறார்கள்
வன்மையுடன் கருத்தாவைத் தோணெட்டாமற்
சையோக லீலையிலே யிருந்தபேர்கள்
தன்மையிலாச் சிவனுக்குத் தேவிரெண்டு
மையல்கொள் ளும் விஷ்ணுவுக்கோ தேவியெட்டு
வன்மையுள்ள பிரமனுக்கோ தேவிமூன்று
ஐயமுள்ள பெண்ணாசை கொண்டேபின்பு
அழிந்தார்கள் மூவருமே அறிவாய்க்கேளே. (4)

மூவர்களுந் தெய்வமென்றால் நோக்காதே
மூடர்களே தரித்திரியக் கொடுமையேது
ஆவதோர் காலமெல்லா முணர்ந்தாலுந்தான்
அவராலே யில்லையடா நோய்தான்தீர்க்கச்
சாவதுதான் நோய்மிகுதி யவர்கட்குண்டு
சண்டாள ரவர்களுட பேச்சையப்பா
நாவுதனிற் சொல்வோர்க்கும் நினைப்போர்க்கெல்லாம்
நன்மையுள்ள சொர்க்கமில்லை நயந்துகாணே. (5)

காணப்பா மூவருட தந்திரத்தைக்
கருணையுடன் சொல்லுகிறேன் காணுகாணு
ஆணுவத்தா லவர்களுமே யுலகந்தன்னை
அப்பனே மயக்கியவர் வலைக்குள்ளாக்கி
தாணவனும் பராபரத்தை நினைக்கொட்டாமல்
தாங்களே தெய்வமென்று விரோதஞ்செய்வார்
வீணனபூசையிலே மனமுழன்று
வெம்பியே மாந்தர்களு மாண்டார்பாரே. (6)

பாரப்பா யுலகத்திற் பலபேர்சொல்வார்
பராபரத்தைத் தெரிசிப்பார் பரமஞானி
நேரப்பா யுலகத்தோர் தனக்குத்தானும்
நிட்சயமாய்த் திரிமூர்த்தி தெய்வமாகும்
ஆரப்பா இப்படியே சொல்வாரென்று
அறிவில்லாக் குருவயிறு வளர்ப்பான்பாரு
தேரப்பா யென்நூலைப் பார்த்தபேர்க்குத்
திகட்டாத இகபரமும் சேருங்கேளே. (7)

கேளடா அகஸ்தியனே மகேருகேரு
கிருபையுடன் மூவருக்கும் வயதுசொல்வேன்
நாளடா பதினெட்டு யுகந்தானப்பா
நலமாகத் தானிருந்து மாண்டேபோவார்
நீளடா அவர்க்குசிரஞ் சீவிகேளு
நிச்சயமாய்ச் சொல்லுகிறேன் முன்னேமாள்வார்
வாளடா பெரோனுடைய வுபதேசங்கள்
மகத்தான செயமாச்சு வண்மைதானே. (8)

தானென்ற மூவருக்கும் வயதுமித்தத்
தகைமையுள்ள கலியுகந்தான் கடைசிதன்னில்
நானென்ற இவர்களுமே மாண்டேபோவார்
நன்மையென்றே அடுத்தோர்கள் வீணாய்ப்போவார்
வானென்ற சதாசிவனும் மகேஸ்பரன்றான்
வண்மையுள்ள யுகநூறில் மாண்டேபோவார்
தேனென்ற சிவனமனையாள் பராபரையும்
தேகம்விட்டு மாண்டிடுவாள் கேளுகேளே. (9)

மாண்டிடுவாள் நானுமந்த யுகத்திற்றானும்
மாண்டிடுவேன் சித்தரெல்லாம் மாண்டேபோயி
ஆண்டகுரு பராபரத்திற் சேர்ந்தேகொள்வார்
அப்பனே யில்வாழ்க்கை சொற்பமாகும்
தாண்டாத சோதியடா யப்பாசொன்னேன்
சொல்லரிது அகண்டவெளி பூரணந்தான்
வேண்டாநீ யென்னோடே வசனித்தாய்நீ
என்னசொல்வேன் பராபரத்தின் செயல்தான்பாரே. (10)

செயலாக நவக்கிரகம் மாண்டேபோவார்
சிவந்தனியே மனிதருக்குப் பயமேசெய்து
இயல்பாகக் கருத்தரிக்கும் வேளைதன்னில்
இனிமையுறும் நற்கிரகப் பார்வையாகி
நயமாகக் குழந்தையது பிறந்துதானால்
நல்வினையாய்ச் செகமாள்வான் யோகமென்று
உயர்வாகப் பவக்கிரகம் பார்வையானால்
ஒன்றுமில்லாத் தரித்திரிய மென்பார்தானே. (11)

தானென்ற இதுவுனக்கு நிசமோவப்பா
தன்மையில்லா மூவர்களும் வகுத்துச்செய்த
ஆணுவமே யல்லாது ஒன்றுமில்லை
அன்பில்லாக் கிரகத்தா லொன்றுமில்லை
தேன்போலே வாழுமிந்த ஆண்பெண்ஜாதி
சேரும்போ தோர்மனதாய்ச் சேர்ந்தாலப்போ
வானென்ற கருத்தரித்துப் பிறந்துதானால்
மகராஜ ஞானியடா செகமாள்வானே. (12)

செகந்தனிலே ஆண்மனது சந்தோஷித்துச்
செப்பமுள்ள பெண்ணாளும் விசனித்தேதான்
அகமிருந்தா யிருவருமே சேரச்செய்து
அன்புடனே கருத்தரித்துப் பிள்ளையின்றால்
சுகமான உத்தமத்தில் மத்திபந்தான்
சொற்பெரிதாய் வாழ்வான்பார் பாதிநாளும்
உகமையுடன் இருவருமே விசனித்தேதான்
உண்மையாய்ச் சேர்ந்துகருத் தரித்தாற்கேளே. (13)

கருத்தரித்துப் பிறந்துதென்றால் அவனுக்கேதான்
கருணையில்லா தரித்திரிய மாவான்பாரு
அருத்தமறி வாண்முப்ப தாண்டுமட்டும்
அலக்கழிவில் லாமலவன் விந்துகட்டி
வருமமுடன் தானிருந்து பெண்ணைச்சேர்ந்து
வண்மையுறக் கருத்தரிந்துப் பிள்ளையின்றால்
அருமையுள்ள பிள்ளையது வயதுதானும்
அன்புடனே தானிருந்து வாழ்வான்பாரே. (14)

பாரப்பா யிளமையிலே பழுத்துதானும்
பரிவில்லாக் குழந்தைக்கு வயதோதத்து
நேரப்பா யிப்படியே யிருக்கமாந்தர்
நிச்சயமாய்ப் பிரமன்விதி யென்பர்மூடர்
தூரப்பா பாவமென்றும் தருமமென்றும்
சொல்லுவார் மாந்தர்களும் அறிவில்லாமல்
ஆரப்பா அறிந்தார்கள் மூவர்செய்தி
அக்கிரம மாகுமடா பின்னஞ்சொல்வேன். (15)

சொல்லுகிறேன் தானதன்மஞ் செய்தீரானாற்
சொர்க்கமுண்டு நரகமில்லை யென்பார்பாரு
வெல்லுகிறே னெனக்குபண மீய்ந்தாலிப்போ
வெகுசுருக்கு மோட்சமது சேர்வாயென்று
நல்லகுண மாயிருப்பார் பொய்யைப்பேசி
நழுப்பியே யேய்த்துப்பணம் வாங்கிப்போவார்
வல்லபமு மில்லையடா அவனாலேதான்
வளமாகச் சொல்லுகிறேன் தெளிவாய்ப்பாரே. (16)

பாரப்பா பாவமென்றும் புண்யமென்றும்
பண்பாகச் சொல்வார்கள் நம்பவேண்டாம்
தேரப்பா என்னூலைப் பார்த்தாயானால்
திகட்டாத பேரின்பங் காணலாகும்
ஆரப்பா யிதையறிந்து சொல்லப்போரார்
அப்பனே வுலகத்தோர்க் கியின்னூலை
நேரப்பா சமுசார வாளிபார்த்தால்
நிகரில்லாச் செல்வமுடன் வாழ்வார்தாமே. (17)

வாழ்வார்கள் பராபரத்தைத் தியானிந்தாக்கால்
வண்மையுடன் முன்வாழ்வார் செல்வமாக
நீழ்வார்கள் வம்மிசங்கள் தழைத்துநன்றாய்
நேர்த்தியுடன் வாழ்ந்துபின்னும் மோட்சஞ்சேர்வார்
தாழ்வான திரிமூர்த்தி மாயஞ்செய்வார்
தளராமற் பூரணத்தில் நாட்டங்கொண்டால்
வீழ்வார்கள் மூவர்களுந் தெரிபட்டோடி
மேன்மையுடன் பிடித்தபிடி விடாதேசொன்னேன். (18)

சொன்னடா பூரணத்தின் கிருபையாலே
தோற்றுமோ வுங்களுக்குச் சுணையுண்டாக
வின்னமில்லா விதியிருந்தாற் கிடைக்குமென்று
வெகுஞானங் கற்றவர்போற் புலம்பவேண்டாம்
தன்னியமா யுங்கள்புத்தி யெங்கேபோச்சு
தான்நடக்கத் தெரிவதுபோ லெண்ணிப்பாரு
இன்னமதா யின்னூலைப் பழித்தாயானால்
தீதாய்நின் வம்மிசங்கள் நாசந்தானே. (19)

தானென்ற மூவர்களும் பரத்தைநாடித்
 தன்மையுடன் மோட்சமது யீவாரென்றும்
வானென்ற பூரணத்தை நோக்கிநிற்பாய்
 வறுமையுள்ள மூவர்களு மூங்களுக்குத்
தேனென்ற மோட்சமது யிவரோயீவார்
 திறங்கெட்ட மூவர்களும் மறந்தாரப்பா
ஆறுவங்கள் மெந்தவுண்டும் அழிந்தேபோவார்
 அப்பனே யிந்நூலைப் பாருபாரே. (20)

அப்பனே ஐந்தெழுத்தி லேந்துஞ்சேரும்
 ஆத்துமமே பராபரத்திற் சேருஞ்சேரும்
ஒப்பில்லாப் பரபிர்ம மொன்றுவப்பா
 ஓகோரகோ அண்டபிண்ட சராசரங்கள்
மெய்ப்புடனே அவர்படைத்த தல்லால்வேறே
 விதிப்பிர்ம தேவனுமே படைத்தானென்று
கைப்புடனே பொய்சொல்லி வேதந்தோறும்
 காட்டிவிட்டான் மகாதேவ வியாசன்முனே. (21)

வேதவியா சன்கட்டை நம்பவேண்டாம்
 மேன்மையென்று மூவர்களை வணங்கிவந்தால்
ஆதரவா யுங்களுக்கு வரமீவாரோ
 அவராலே யில்லையடா அதிகாரந்தான்
நீதமுடன் கேட்டவர மீவோமென்று
 நிசமாக யேய்த்தவர்கள் வலைக்குள்ளாக்கி
சாதகமாய் செய்தனுமே கெடுத்துப்பின்னும்
 தமியோர்கள் மாண்டபின்பு விலகிப்போவர். (22)

போவர்களே மூவருட பேச்சைத்தள்ளு
 புதுமையுள்ள யென்நூலைப் பார்த்தேதேறு
தேவராம் பராபரமே மெய்யாயென்னில்
 திசையெட்டுந் தான்புகழ வாழ்வாயப்பா
ஆவதுதா னவர்செயலா லெல்லாமாச்சு
 அப்பனே தானுணர்ந்த அறிவில்நின்று
ஆவலுடன் பராபரமே கெதியென்றெண்ணி
 ஐம்புலனை யொடுக்கியனு தினமும்பாரே. (23)

பாரப்பா அகண்டவெளி பூரணந்தான்
பராபரத்தின் நிலையிது வெல்லாமாச்சு
நேரப்பா யிதையறிந்தால் ஞானமாச்சு
செகத்தோர்க்கு ஞானமெல்லாந் தெளிவதாச்சு
காரப்பா வொருநிலையிற் பிடித்துநில்லு
கண்டுகொள்வாய் நினைத்தபடி முடியும்பாரு
ஆரப்பா யிதையறிந்து சொல்லப்போரார்
அப்பனே ரகசியத்தைத் தெளிவாய்ச்சொன்னேன். (24)

வெளியாகச் சொல்லிவிட்டே னுலகத்தோர்க்கிவ்
விதமறிந்தா லவன்யோகி யவனேஞானி
சுளிவாக மோட்சமது சேரத்தானே
சுகம்பெறவே மோட்சமது பெறவேவேண்டி
தெளிவாகச் சொல்லிவிட்டே னிருபத்தைந்திற்
றேர்ந்துமனந் தான்மகிழ்ந்து வாழச்சொல்லி
வழிதிறந்து விட்டனடா அப்பாகேளு
மதிபெருகும் கண்மணியே ஞானம்முற்றே. (25)

சுப்பிரமணியர் ஞானம் உரு

முற்றிற்று.



சத்திகிரி சிவகிரி திருவாவினங்குடி யெனத்தழைத்தோங்குந்திருப்பழனிமலையிலெழுந்தருளிய ஸ்ரீகைலாச போகமகாரிஷீஷ்வர சுவாமியவர்கள் ஆதீனஆச்சிரமம் ஆதீன மகாகைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீகைலாச தேண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்துவாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

இ ரு ப த் தி ர ண் டா வ து:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானம் ௨௨.



காப்பு.

ஒழியாத சுழிமுனையி லொடுங்கிநல்ல
உற்றநிலை வாசிசிவ யோகத்தேறி
வழியான துறையறிந்து மவுனங்கொண்டு
மகத்தான அண்டவரை முடிமேற்சென்று
தெளிவான ஓங்கார வடிவேல்கொண்டு
தெளிந்துமனத் தறிவாலே தன்னைக்கண்டு
வெளியான பரவெளியிற் றன்னைக்கண்டு
வேதாந்த சத்திசிவ ஆதிகாப்பே. (1)

ஆதியிலே பராபரத்திற் பிறந்தசத்தம்
அருவுருவாய் நின்றபர சிவமுமாகிச்
சோதியென்ற சிவனிடமாய்ச் சத்தியாகித்
தொல்லுலகி லெழுவகையாந் தோற்றமாகி
நீதியென்ன அறிவதனால் தானாய்நின்று
நிறைந்தபரி பூரணமாய் நிஷ்களமுமாகிச்
சாதியென்ற சத்திசிவ மருள்தன்னாலே
சண்முகமுங் கணபதியுந் தானுண்டாச்சே. (2)

உண்டான சத்திசிவம் ஏகமாகி
உளங்கனிந்து பூரணமாய் நிற்கும்போது
குண்டான மாங்கனியைக் கையில்வாங்கிக்
குமரனுடன் கணபதியைக் குணமாய்ப்பார்த்து
மண்டான கிரிவலமாய் வந்தபேர்க்கு
மாங்கனியைத் தானீவோ மென்றுசொன்னார்
பண்டான கனியறிந்து குமரன்றானும்
பாய்ந்துமயி லேறிகிரி வலஞ்சென்றாரே. (3)

சென்றபின்பு கணபதியு மாலோசித்துத்
தீர்க்கமுள்ள மேருகிரி சேர்தானென்று
கண்டவுடன் சிவனுமையாள் பாகந்தன்னைக்
கருக்குடனே சுற்றிவந்து கனியைவாங்கிக்
கொண்டுமந்த சிவனுமையைத் தியானஞ்செய்து
குறியறிந்து நெறிதமக்குள் குருவைப்போற்றி
நின்றுருசி கண்டறிந்து நிற்கும்போது
தீர்க்கமுள்ள கணபதியை வாவென்றாரே. (4)

வாவென்றே யெடுத்தணைத்து அருட்பாலீய்ந்து
மகத்தான ஐவருக்கும் பீடமாகி
ஆவென்று மூலமதற் காசாய்நின்று
ஐந்தெழுத்திற் குயிரான ஆதியாகி
கூவென்ற சத்துசித்த சுத்தமாகிக்
குவிந்தெழுந்த வாசிதிரு தேசியாகிப்
பூவென்ற ஆயிரத்தெண் மலருக்குள்ளே
பொருந்திமனத் தறிவாலே யறிந்துவாழே. (5)

இருந்துவா ழென்றுரைத்த வேளைதன்னில்
ஏகாந்த மயில்வீர னெதிரில்வந்து
அருந்தவமாய் நின்றநிலை தன்னைப்பார்த்து
அருமையுள்ள கண்மணியே வாவென்றேதான்
வருந்தியே மாங்கனியொன் றீந்துநல்ல
மகத்தான அண்டரண்ட வரைகள்சுற்றித்
திருந்தியே தீர்க்காயுள் பெற்றுவாழ்ந்து
தீர்க்கமுடன் மலைக்கரசா யிருந்துவாழே. (6)

வாழென்று சொன்னவுடன் மயில்வீரன்றான்
மகத்தான சிவசத்தி பதமேற்கொண்டு
ஆளென்று மயிலேறிக் கயிலாசத்தை
ஆவலுடன் சுற்றிவரும் போதிலேதான்
சூழென்று இமயகிரி வடபாகத்திற்
சுத்தசித்த மானதபோ தனர்கள்கண்டு
தாள்பணிந்து வணக்கமதாய் நிற்கும்போது
தபோதனர்கள் ரிஷிகளுமே தான்வந்தாரே. (7)

வந்தவரைத் தான்பார்த்து வரையில்நிற்க
மகத்தான சற்குருவென் றடிபணிந்து
இந்தமலைச் சாரலிலே வெகுநாளாக
இன்பமுடன் றவஞ்செய்து வாழ்ந்தோமையா
அந்தரமாய் ராட்சதர்க ளண்டிவந்து
அலங்கோலஞ் செய்துமே அரத்துகின்றார்
சுந்தரமா யிருந்துதவங் காருமென்று
சுத்தசித்த மாய்தவத்தைத் துடங்கினாரே. (8)

துடங்கிமன தடங்கிநிலை தன்னைக்காத்துச்
சுத்தமுடன் நின்றுவினை யாடும்போது
அடங்கிமன மடங்காத அசுரர்தானும்
அஞ்சாம லழும்புசெய்ய மகத்தைப்பார்த்து
திடங்கொண்டு மயிலேறி செவ்வேல்கொண்டு
சினந்துவரு மசுரர்களை மாளவென்று
படங்குவித்து வேல்முனையைத் தியானம்பண்ணிப்
பாயவிட அசுரர்களை பறந்துபோச்சே. (9)

பறந்துபோய் பலவிதமாய் ரூபங்கொண்டு
பந்திபந்தி யாயசுரர் பறந்துவந்தார்
சிறந்துவந்த சேனைகளை நன்றாய்ப்பார்த்துத்
தீர்க்கமுள்ள மயிலேறித் தெளிந்துநின்று
அறந்தழைக்க வேணுமென்று ஸ்தூலரூட்சம்
அரூபமென்னுங் காரணமாய் ரூபங்கொண்டு
நிறந்தரமாய் வந்தசூர அசுரர்தன்னை
நிர்த்தூளி செய்துதவ நிலைகொண்டாரே. (10)

நிலைகொண்டு நின்றஜெயங் கொண்டசித்தை
நேர்மையுடன் தவஞ்செய்யு முனிவர்கண்டு
கலைகொண்டு மனந்தெளிந்து மகிழ்ச்சியாகிக்
கானமயில் வீரனடி கருதிப்போற்றித்
தலைகொண்டு தாள்பணிந்து அருட்கண்பெற்று
தபோதனரும் ரிஷிகளுமே தான்பணிந்து
சிலைகொண்டு நின்றவடி வேலர்தன்னைத்
தெரிசித்து அவரவர்கள் பதிசென்றாரே. (11)

பதிதேடி யவரவர்கள் செல்லும்போது
பத்தியுள்ள அகத்தியமா முனிவர்வந்து
விதியறிந்து அசுரர்களை மாளவென்று
வெற்றியுள்ள வடிவேலைத் தியானம்பண்ணி
கெதியறிந்து ஸ்தூலமுடன் சூக்ஷமாகிக்
கிருபையுள்ள காரணமாம் ரூபங்கொண்டு
சதியறிந்து சங்காரஞ் செய்திடையா
சண்முகமே யென்குருவே சரணந்தானே. (12)

சரணமென்ற அகத்தியமா முனியைப்பார்த்துச்
சண்முகமாய் நின்றவடி வேலர்தானும்
திரணமதாய்த் தானறிந்து நீயாரென்னத்
திருவடியைப் பூசைசெய்யுஞ் சேயனென்றார்
கரணமந்தக் கரணமதாய் வந்ததேதோ
கருணையுடன் வாருமென்று கடாட்சம்நல்கித்
தருணமறிந் துதவுவது தருமமென்று
சங்கையுடன் தான்வந்து வகைசொல்வீரே. (13)

சொல்லென்று மயில்வீரன் கேட்கவந்தச்
சோதிமய மானவகத் தீசர்சொல்வார்
சல்லென்று வந்தகோரு அசுராள்தன்னைச்
சண்முகமாய் நின்றவடி வேலுங்கொண்டு
சொல்லென்று சங்காரஞ் செய்திரந்த
திருவுருவாய் நின்றகா ரணத்தைக்காட்டி
உள்ளென்ற ஆதார ஸ்தூலசூக்ஷமம்
உண்மையென்ற காரணமு முரைசெய்வீரே. (14)

உரைசெய்வீ ரென்றுசொன்ன வுறுதிகேட்டு
உண்மையென்று மயில்வீரன் உறுதியாகி
நிரைசெய்து எக்கியங்கள் தானுண்டாக்கி
நேமமுடன் அகத்தியமா முனிவரென்று
அரையறிந்து அருகிருத்தி யோமகுண்டம்
ஆதிமந்தி ரத்தாலக் கினியுண்டாக்கிப்
புரையறிந்து மந்திரங்கள் ஜெபிக்கும்போது
பூரணமாய்க் கும்பமதில் தானுண்டாச்சே. (15)

உண்டான பூரணமாய்க் கும்பம்வாங்கி
உண்மையென்று மார்முனிக்கு அபிஷேகித்து
பண்டான மனதொன்றாய் நிலையைக்கண்டு
பணிந்துஅக மகிழ்ந்துநீ யிருந்துகொண்டு
நன்றான நவக்கிரக மொன்பதுக்கும்
நலமான அனுக்கிரக நிலையுங்காட்டி
குன்றான அனுக்கிரக வாசல்காணக்
குவிந்துமன தறிவதனால் வின்னென்றாணே.

வின்னென்று விசையுடனே முனைநாவுன்ன
மெய்ஞ்ஞான வவ்வாசல் திறக்கும்போ
கன்னென்ற கபாடவழிக் குள்ளே நின்று
கலையறிந்து வாசியினால் கமலநோக்கி
யுன்னென்று மூலமதில் வங்கென்றுபூரி
யுறுதியென்ற தமரதிற்சிங் கென்றேரேசி
ஒன்னென்று மிப்படியே கொண்டுநின்றால்
யோகமுள்ள தசதிட்சை யுண்மைகாணே.

உண்மையுடன் சுழினையிலே வின்னென்றாணி
உறுதியுடன் ஆதார திட்சைகேளு
பண்மையுடன் ஓம்ரீம்அங் அங்அங்கென்று
பட்சமுடன் பதினாறு உருவேசெய்தால்
தன்மையுடன் கணபதியும் பிரகாசிப்பார்
தானமென்ற சுழினையிலே கன்னைப்பார்த்து
நன்மையுடன் ஓம்நம சிவயவென்றால்
நோக்குமுன்னே பிரமன்தரி சனமுமாமே.

ஆமப்பா சிவயநம சிவயநமவென்று
அதன்பிறகு வயநமசி வயநமசிவாவென்று
தாமப்பா தலைகாலாய் மாறிக்கொண்டு
சங்கையுடன் கால்தலையாய் மாறிக்கொள்ளு
ஆமப்பா நமசிவய நமசிவயவென்று
அதன்பிறகு சிவயநம சிவயநமவென்று
ஓமப்பா நமசிவய வென்றுமாற
உண்மையென்ற ஆதாரஞ் சித்தியாமே.

சித்தமுட னைந்தெழுத்தை மைந்தாநீயும்
செம்மையுட னேகலைகால் தலையாய்மாற
அத்தமுடன் ஆகார தேவதைகள் வந்து
சொன்னபடி யிருதயத்திற் சுகமாய்நிற்பார்
பத்தியுட னிப்படியே தியானம்பண்ணி
பதிவாக விபூதியுத் தளமாய்ப்பூசி
நித்தமுநீ யிப்படியே செய்துநின்றால்
நிலையில்லாத் தூலசடம் நிலைக்கும்பாரே. (20)

பாரப்பா கலையறிந்து நிலையில்நின்று
பத்தியுட னாதார சூட்சங்கேளு
நேரப்பா ஓங்கிலி அங்கென்றோது
நிலையறிந்து அங்கிலி நங்கென்றோது
காரப்பா மங்கிலி சிங்கென்றோது
கருணையுடன் சிங்கிலி வங்கென்றோது
சாரப்பா வங்கிலி யங்கென்றோது
சலுதியாய் அங்கிலி மங்கென்றோதே. (21)

ஓதியபின் யங்கிலி உங்கென்றோது
உண்மையுடன் உங்கிலி அங்கென்றோது
நீதியுடன் அங்கிலி மங்கென்றோது
நிலையறிந்து மங்கிலி றீங்கென்றோது
ஆதியுடன் றீங்கிலி ஓமென்றோது
அப்பனே தலைகாலாய் மாறியோது
சோதியுடன் சுழினையிலே மனக்கண்சாற்றிச்
சுத்தமுடன் விபூதியைநீ தரித்துக்கொள்ளே. (22)

கொள்ளப்பா விபூதியைநீ தரித்துக்கொண்டு
கூர்மையுடன் கால்தலையாய் மாறக்கேளு
தெள்ளப்பா ஓங்கிலி றீங்கென்றோது
சித்தசுத்தம் றீங்கிலி மங்கென்றோது
விள்ளப்பா மங்கிலி யங்கென்றோது
விவரமாய்த் தோற்றுமடா செய்கையாவும்
உள்ளப்பா மங்கிலி அங்கென்றோது
உறுதியுடன் அங்கிலி வங்கென்றோதே. (23)

ஓதியபின் வங்கிலி சிங்கென்றோது
உத்தமனே சிங்கிலி மங்கென்றோது
நீதியுடன் மங்கிலி நங்கென்றோது
நிலையறிந்து நங்கிலி யங்கென்றோது
சோதியுடன் மங்கிலி ஓமென்றோது
சுத்தமுடன் ஈராறு தவமுஞ்சித்தி
வீதியென்ற ஆதார மேலாதாரம்
விண்ணடங்கிக் கண்ணடங்கி மேவிநில்லே. (24)

நில்லப்பா கண்ணடங்கி வின்னென்றாணி
நிலையறிந்து பிராணாயஞ் செய்தால்மைந்தா
கல்லப்பா தேகமது காலனேது
காலனென்னும் வியாதியெல்லாங் காணாதோடும்
ஒல்லப்பா வாசியது உறுதியாகும்
ஓதுகின்ற மந்திரமுஞ் சித்தியாகும்
சொல்லப்பா ஸ்நாலமுடன் சூட்சஞ்சொன்னேன்
துலங்கிநின்ற ஸ்தூலத்தின் சுருக்கங்கேளே. (25)

சுருக்கமுடன் ஆதார ஸ்தூலசூட்சஞ்
சொன்னபடி பிராணாயஞ் செய்துகொண்டு
உருக்கமுடன் ஜெபதபங்கள் பூசையாவும்
இன்மையா யுனக்குள்ளே கண்டுதேறி
பெருக்கமுடன் தானிருந்து சீவான்மாவே
பிரணவமாய் நின்றபரம் நீருமாகி
நெருக்கியந்த அண்டவெளிக் குள்ளேசென்று
நேமமுடன் பிராணாயம் நினைவாய்ச்செய்யே! (26)

செய்யப்பா பிராணாயம் பிராணாயம் நினைவாய்ச்செய்ய
சிவசிவா கருமானம் செப்பக்கேளு
பொய்யப்பா போகாது பிராணவாய்வு
பொருந்திநின்று விளையாடும் புதுமைகேளு
பையப்பா சுழிளையிலே வின்னென்றாணி
பதியாக மூலமதில் வங்கென்றூரி
மெய்யப்பா சுழினையிலே சிங்கென்றுரேசி
வேகமுடன் கண்டமதில் அங்கென்றுகும்பே. (27)

அங்கென்று கண்டமதில் கும்பித்தேதான்
அசையாது வாசிதிரு வாகிதானும்
செங்கமல மானசுழி பிண்டத்தேறும்
திரும்பியந்த பிண்டமதிற் சென்றுவாழும்
சங்கையுடன் தன்னகத்தில் தானேதானாய்
தன்மையுடன் நின்றுவிளை யாடும்வாசி
மங்களமாய் சுழினையிலே வின்னென்றாணி
மார்க்கமுடன்; இகபரமாம் யிருந்தாகாணே. (28)

காணவே சத்தியவள் தியானங்கேளு
கருவாகச் சொல்லுகிறேன் கருத்தாய்க்கேளு
பூணவே யுரைத்திடுவாய் அங்சிங்கென்று
புத்தியுடன் பதினாறு உருவேசெய்து
தோணவே விபூதிதூ ளிதமேபூசச்
சுத்தமுடன் பராசக்தி நிர்த்தஞ்செய்வாள்
ஊணவே யிப்படியே தியானம்பண்ணி
உண்மையுடன் பிராணாய வுறுதிபாரே. (29)

எறுதியுள்ள அகத்தியமா முனியேகேளு
உண்மையுள்ள சத்தியைநீ தியானம்பண்ணி
பருதிமதி சுடரொளிபோல் பஞ்சகர்த்தாள்
பதியறிந்து பிராணாயம் பதிவாய்ச்செய்து
சுருதிபொரு ளானதொரு பொதிகைமேவி
சுகசீல பிராணகலை வாசியேறி
கருதிமன மொன்றாகிச் சுழியில்நின்று
கலகமற்ற அமுதபா னங்கொள்வாயே. (30)

பானமென்ற மதியமுத பானங்கொள்ளப்
பரப்பிரம மானசுழி வழியுங்காட்டித்
தானமென்ற ஆதார மேலாதாரந்
தனையறியப் பிராணாயச் சங்கைசொல்லி
ஞானமென்ற நிலைகாட்டி மூலங்காட்டி
நாதாந்த ஆறுமுக நிலையுங்காட்டி
மோனமென்ற வடிவேலின் முனையுங்காட்டி
முனையறிந்து கலைநிறுத்தி முடிமேல்நில்லே. (31)

நில்லப்பா சதுரகிரி முடியிற்சென்று
நிலையான பொதிகையிலே வாசமாகி
ஒல்லப்பா தானுகி வின்னென்றாணி
உறுமனதில் நிலைத்தடுதாரு மந்திரந்தன்னைச்
சொல்லப்பா தியானமுடன் ஜெபிக்கும்போது
சுத்தமுடன் சித்திக்கும் சுகமாய்நின்று
செல்லப்பா அஷ்டாங்க யோகத்தேகிச்
சிவாயகுரு பாதமதில் தெளிவாய்நில்லே. (32)

தெளிவான தெளிவதனுல் தன்னைக்கண்டு
தீர்க்கமுட னிருந்துதவஞ் செய்வாயென்று
பழியாத வனுக்கிரக வரமுமீந்து
பார்க்கவே மயில்வீரன் வடிவேல்கொண்டு
அழியாத அண்டவரை முடிமேற்சென்று
அஷ்டகிரி பர்வதத்திற் கரசுமாகி
ஒளிவாகி அண்டவெளி யெங்குந்தானுய்
ஓங்கார வடிவேலை யுவந்தான்முற்றே. (33)

சுப்பிரமணியர் ஞானம் ௩௨.

முற்றிற்று.





மதுரை வடக்குமாசிவீதியி லிருக்கும் பாத்திர வியாபாரம் ஸ்ரீ ரா. ம. கணபதியாபிள்ளை யவர்களிடமிருந்த ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

இருபத்துமூன்றுவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞான விந்தை நடு.



காப்பு.

சீரான விராட்பிர்ம ரூபங்காப்பு
செகமெங்குந் தானான நாதன்காப்பு
நேரான நீலகண்டன் பாதங்காப்பு
நேர்மையாம் வாலைமனோ மணியாள்காப்பு
கூரான எட்டெழுத்தும் ஐந்தெழுத்துங்
குணமான மூன்றெழுத்தும் வடிவங்காப்பு
காரானை யாயுதித்த வொற்றைக்கொம்பன்
கணபதியி னிருசரணங் காப்புச்சீரே. (1)

சீர்மேவும் வாலையபி ராமிரூலி
திரிபுரைசங் காரிகௌ மாரிவாமி
தார்மேவும் மகிடசங் காரிதுர்க்கை
சாமுண்டி கங்காளி தந்தமைந்தன்
கார்மேவும் அத்திமுக வொற்றைக்கொம்பன்
கருணைதிரு நயனமிரு கமலபாதம்
பார்மேவும் அறுமுகவன் குருமுனிக்குப்
பகர்சர்வ விஞ்சைக்கு ஆதியாமே. (2)

ஆமப்பா அகஸ்தியனே சொல்லக்கேளு
அருமையா யுந்தனுட குருவின்மூலம்
தாமப்பா அறுகோணம் முக்கோணத்தைச்
சார்ந்திடமேல் விந்துவிட்டு நடுவேகேளு
நாமப்பா ஐயுமென்று கிறியும்போடு
நலமாமுக் கோணமூன் றிதழும்போடு
தோமப்பா அறுகோணந் தன்னிற்றானும்
சுகமாக சரஹணபவா வென்றுசாத்தே. (3)

சாத்தியே அறுகோணந் தன்னிலேதான்
சாருமே வட்டமிட்டெட் டிதழும்போடு
மாத்தியே இதற்குமேல் வட்டம்போடு
மாறிநின்ற அஞ்சிதழும் வளமாய்ப்போடு
தாத்தியே இதற்குமேல் கோட்டையொன்று
தப்பாமற் கீறியே வாசலிட்டு
ஏத்தியே வரவேணு மென்றுபோற்றி
யின்பமாய்ச் சண்முகத்தைத் தியானஞ்செய்யே. (4)

செய்யப்பா கோட்டையுட வாசல்நாலும்
சிறப்பாகக் கீழ்வாசல் கணேசன்தானும்
வையப்பா தென்வாசல் நந்திவாசல்
வளமான மேல்வாசல் வாசுதேவர்
மெய்யப்பா வயிரவனை வடக்குவாசல்
மேன்மையாய் நிறுத்தியே பூசைசெய்தால்
பொய்யப்பா சொல்லவில்லை அஷ்டகர்மம்
புகழாக நொடிக்குள்ளே ஆடுந்தானே. (5)

ஆடுமடா பில்லியுடன் பேய்களெல்லாம்
அப்பனே வியாதியென்ற தெல்லாமோடும்
பாடுமடா வாக்கதனிற் சோதிநித்தம்
பாடகமுஞ் சீரடியும் பணிந்துகாண்பாய்
நாடுமடா யிதைப்போலே நிசமதாக
நானிலத்தி லென்னைப்போற் சொல்வாருண்டோ
சாடுமடா சரவணத்தின் பூசைதன்னிற்
சாதகமா யறிந்தவனே ஞானியாவான். (6)

சொன்னபடி தப்பாச்சக் கரத்தைக்கீறி
சூக்ஷத்திற் பிராணாயம் செய்துகொண்டு
நன்னயமாய் அபானமது பானஞ்செய்து
நன்றாகத் தீபமுடன் தூபங்காட்டி
வன்னமுடன் பரிவட்டம் புட்பஞ்சாத்தி
வரிசையாய்ப் பழந்தேங்காய் பலகாரங்கள்
அன்னமுடன் நெய்யுடனே பாலும்வைத்து
அரகரா வென்றுநீ தியானம்முட்டே. (7)

மூட்டப்பா மூலமதின் மந்திரத்தை
மூதண்ட மாயென்னை முன்னேகாண்பாய்
கோட்டிசெயும் மூடருடன் கூடாதேநீ
குமரனே தெய்வமென்று குறித்துப்பாரு
தாட்டிகமாய் உன்னைப்போற் சித்தருண்டோ
தாரணியிற் பேருபெற்ற சித்தனாவாய்
பூட்டதனை வெளியாகத் திறந்துவிட்டேன்
பூதலத்தி லொருவருக்கும் புகலொண்ணாதே. (8)

புகலவொண்ணா தென்றசொல்லை நீதான்மைந்தா
புந்திதனி லேயடக்கி வைத்துக்கொள்வாய்
சகலவினை களுமகலும் அறிந்துபாரு
சடாக்ஷரத்தின் பெருமையதை யார்தான் காண்பார
செகமதனி லிதைக்கண்டோர் வெளிவிடார்கள்
தீவினையும் பேய்வினையுந் தீய்ந்தேபோகும்
சுகமாக வாழ்வாயே கண்டறிந்தாற்
சூட்சமதைச் சொல்லிவிட்டேன் சிவ்வென்றோதே. (9)

சிவ்வழலு முருத்திரனு முருகன்முடியானான்
சேவலது புயமாகி மகரநிறமானான்
நவ்வினிய விதிகுமர னிடதுபுயமானான்
நற்சத்தி வடிவேல னசுரரையும்வென்றான்
மவ்வுசிவ் நவ்வென்னுந் திரியாமெழுத்தை
மசிநசி யெனச்செபித்து உருலட்சமாகில்
வெவ்வுணர் வார்போல வினையகலுமிதுதான்
வேல்முருகர் சர்வசங் காரவிஞ்சைமேலே. (10)

மேலான கும்பமுனி பெருகவிள்ளும்
வேல்முருகர் சர்வசங் காரவிஞ்சை
வாலாய மாகவொரு பிரம்பிற்பாச்சி
வலமிடந்தோள் சிரசிலுமூன் றட்சரத்தையூன்றி
காலாக வருவேக சூரரையும்வெல்லும்
கனிவுகொண்டு லட்சமுரு செபித்தபேர்க்கு
ஆலால விஷங்களுமே நாஸ்தியாகும்
அதனில்விஞ்சைக் கின்னம்வர லாறுகேளே. (11)

கேளுமூன் றெழுத்துருக்கள் பிரம்பிடக்கைக்கொண்டு
கெவுனமுன்னி விபூதிதரித் தெதிரேயார்க்கில்
வாளுருவிக் கொல்லவரு வார்முறிபட்டோடும்
மகாவிஞ்சை தன்னையுமே தகட்டிற்கீறி
நீளுலட்சம் உருஜெபித்து சிரசிலணிவோர்க்கு
நேராக வுண்டையம்பு விலகியோடும்
நாளுலவு மிரவுபகல் சயனிக்கும்போது
ரகசியத்திரி யட்சரத்தை முகத்திலொட்டே. (12)

ஒட்டியே துயின்றிடத்திற் கனுக்காணுது
ஊர்ச்சர்ப்பம் தீண்டாது படுத்துறங்கிப்போகும்
முட்டுவயுற் றுதித்தகர்ப்பம் மரித்தால்வெண்ணெய்
முனையறுகால் மந்திரித்துச் சிரம்வயிற்றிற்பூச.
அட்டபிள்ளை வெளிப்படுஞ்சா காதுபிள்ளை
யதுவுமே சுகமாகப் பிறக்குந்தானே
தொட்டுருட்டி லெத்தனைபே ருடன்சென்றாலும்
சுண்டைக்கா யளவுகல் லோதிநீயருளே. (13)

ஓதியகல் பாகுருமால் முடிந்துகொண்டு
ஊர்ப்பயணம் போகும்போ தொருவருக்கும்
காதுவிடாச் செந்துக்கள் மிதிபடாது
கால்பட்டாற் கடியாது காலைச்சுற்றும்
நீதியில்புண் ணியபுருட னுக்கேளு
நித்யத்திரி யட்சரத்தை நினைவிலுன்னி
சாதகமாய்க் கோடியுருச் செபித்தபேர்கள்
தானிருக்கு மூர்தனிலே விஷமண்டாதே. (14)

அண்டாது யேவல்பில்லி சூனியங்கள்
அணுகாது நாவேறுங் கண்ணேறுங்கூட
மிண்டான பேர்களும்நல் வார்த்தைசொல்வார்
விரைந்துவரைந் தெந்திரத்தைச் சிரசிலணிவோர்க்குப்
பண்டான வினைராச பிளவைவீக்கம்
படுபருவன் சிரங்குஷ்டம் பெருவியாதிக்கே
விண்டான எண்ணெய்ஜலம் விபூதிபிரம்பாலே
வியாதியெல்லாம் மாரணமூன் றெழுத்தினாலே. (15)

எழுத்தெனுமூன் றட்சரத்தின் விஞ்சையின்னும்
இயம்பவே குறுமுனியை நோக்கிவேலர்
வழுத்தவிது சர்வசங் காரதிரியெழுத்தை
மவுனமுன்னி வட்டஞ்செய் துருப்பெருக்கினோர்கள்
கழுத்துவாய் செவிகன்னம் நெஞ்சுகுய்யம்
கடிதடமி லிங்கமங்கை கால்களோடு
தழுத்தசிகை சிரசில்ரணங் கண்டமாலை
சற்குருவை நினைந்துகொண்டு பிரம்பால்நீவே. (16)

நீவியே பூதிசல முந்தரித்து
நிதமிருபோ துட்கொள்ள எட்டுநாளிற்
பாவியருக் கானாலும் நாஸ்தியாகும்
பழவினைக்கூ ரானாலும் நாஸ்தியாகும்
மாவலுவாம் சடாமுனியும் பிர்மராக்ஷதையும்
யந்திரமா வாதிகட்கு வணங்காப்பேயும்
மேவியகெந் துக்கிரகம் வேதாளக்கிரகம்
மிகளச்சுக் கிரகம்நவக் கிரககுய்யக்கிரகம். (17)

கிரகசௌ மாங்கிரகம் அகோரக்கிரகம்
கிளர்சந்தி யாக்கிரகம் சொலுமாலைக்கிரகம்
சர்வதுட்டக் கிரகங்கள் தொட்டிருந்தால்
தந்[illegible]மது கடித்திருந்த வண்டருக்குந்தானே
வெருவிவிழித் திடுங்கண்ணை மெருட்டிப்பார்த்து
மேல்விழுந் தாற்றவருங் குறியைக்கண்டு
மருவியழு விஞ்சையுரு சலம்சிரசிற்சொரிந்து
மந்திரநீரைப் பிரம்பினால் உச்சியிலேதட்டே. (18)

தட்டியே ஆயிரத்தெட் டுருச்செபித்துச்
சங்கார விபூதியினா லெரியும்போது
சுட்டிடுந்தீ வட்டிகொண்டு கொளுத்தினாப்போற்
சோர்ந்ததது நடுநடுங்கிப் போறேன்போறேன்
விட்டிடையா வெகுநாளாய்க் காத்தோமிந்த
வேளையஞ்சு மரக்கால்நீர் விரைந்துதாரும்
திட்டமாய்ச் சாப்பிட்டுப் போறேனென்று
சென்றதற்கு அடையாளம் செப்பக்கேளே, (19)

செப்புகிறேன் சிதம்பரசக் கரத்தினாலே
தேகமெல்லாங் கட்டுண்டு தியங்கினேனே
தப்புரைசொல் லேனீதோ போறேனீசன்
தன்மேலே ஆணையிட்டுப் போறேனென்று
அப்படியே போனதற்குச் சோதனைகள்கேளு
அருகிருந்த மரத்தினுட கொம்பினூடும்
ஒப்பெரிய பெரும்பாறை அம்மிதூக்கிப்
பேசாமல் வெருண்டுபயந் தோடுந்தானே. (20)

ஓடுமொரு முயல்கண்டன் பிரமகண்டன்
உடைக்குழியாம் குமரகண்டன் மகரகண்டன்
நீடுமொரு கருமத்தால் வரும்வியாதிக்கே
நிதம்பஞ்ச கவ்யங்கோமூத் திரத்தினாலும்
கூடுமொரு சங்கார மாயிரமுஞ்செய்து
குறையாமல் நிதமுமரை மண்டலமுட்கொடுத்தால்
நாடுமொரு வலிப்பகலும் வலுப்புக்கெல்லாம்
ராஜனாம் முயல்கண்டன் வலிதுதானே. (21)

வலிதாகப் போகாட்டால் யீசன்கோலம்
மனத்தினுன்னி விரித்தசடை வீரப்பல்லும்
நலிவான மகரகுண் டலமுமூன்று
நயனமுரு ரோமங்கள் அளவேவாயில்லை
புலியாடை யுடுத்திமழு மான்கரத்திலேந்திப்
பூங்கொன்றை மாலையது புனைந்திருக்கக்
கெலியான பரமனென்று சிந்தையெண்ணிக்
கேசரிமேல் மூலத்தை வைத்துத்தானே. (22)

தானேநீ றுத்தளமா யணிந்துகொண்டு
தான்சிவமாய் முயலகநோய் பிடித்தான்றனை
ஊனென்ற முச்சூட்ச மூன்றெழுத்தையுன்னி
உதைத்துருக்கள் பிரம்பினா லடிக்கநாஸ்தி
கானுறு மும்மாதம் பிடித்தபேர்க்குக்
காராவின் பால்நெய்தே னென்றாய்க்கூட்டிக்
கோனான சங்காரம் நூறுபத்துச்செபித்துக்
கொடுக்கவொரு திங்களுக்குட் குணமாய்ப்போமே. (23)

போகாத சுரம்வந்து பிடித்துதானாற்
புடைக்குமுறப் புறத்தில்நீ றதைப்பரப்பி
வாகான சக்கரமூன் றட்சரத்தைவரைந்து
வகைதுகையா யிரங்களுருச் செபித்துநீறணிந்து
நாகான பிரம்பையவன் நெற்றியிலேதட்டி
நல்லுருவா யிரம்ஜெபிக்க நழுவிவிடும்வெப்பு
சாகாத மூலிமூன் றெழுத்தைச்செப்பு
தகட்டிலே வரைந்தணிய குளிர்சுரமும்விடுமே. (24)

விட்டுவிடா தாந்திரிகம் வாயில்விட்டசன்னி
மிகுத்தசித்து விப்பிரம கண்டகமாஞ்சன்னி
சட்டமுள்ள கெம்பீரச் சன்னிருத்ரசன்னி
சந்திகச் சன்னிமுதல் பதிமூன்றுக்கும்
திட்டமுள்ள சிதம்பரமூன் றெழுத்தினையேயொட்டித்
தேனிலுருச் செபித்தருளச் சன்னியெல்லாம்நாஸ்தி
கொட்டுடுக்கு தவுண்டைபே ரிகைமத்தாளம்
கூறுபல வாத்தியங்கள் கிழியத்தானே. (25)

கிழியுமூன் றட்சரத்தை முகத்திலொட்டிக்
கிளருமுருச் செபிக்கையிலே கிழிந்துபோகும்
தளருகின்ற மலடியற்குப் புத்ரனுண்டாம்
தனிப்பசுவின் நெய்யிலுருச் செபித்துத்தானே
இளகுமொரு மாசமுண்டாற் கற்பமுண்டாம்
இனியநெய் மூன்றுநா ளுருச்செபித்துப்
பழகுதிங்கட் கொருபடியாம் மூன்றுதிங்கள்
பகர்ந்துண்டாற் கர்ப்பஞ்சேய் பாரில்பெறுவாரே. (26)

வாரேறு கொங்கையர்கள் மலடியர்னால்
மந்திரத்தாற் பஞ்சகவ்வியம் உருச்செபித்து
நேராகச் செல்லுமண் டலமுண்டோர்க்கு
நிமிஷமிது கைகண்ட அவிழ்தசித்தி
சீராகப் பச்சைமஞ்சள் அரைத்துத்தில்லைத்
திரியெழுத்தை யுச்சரித் திரண்டுமாதம்
ஏராகக் குளிக்கவுடன் கற்ப முண்டாம்
இனிமூன்றும் பதின்மூன்றும் பெறுவார்தானே. (27)

மூன்றெழுத்தின் மகிமையிது பிரணவத்தின்கட்டாம்
மோனமொரு ரீங்கார விஞ்சைமுகத்தொட்டி
தோன்றிடுமே ரணகளத்தில் மருவலர்கள்கூடித்
தொடுத்தவுண்டை அம்புமுதல் விலகியோடும்
கான்றிரியட் சரத்தையுன்னிச் செபிக்கும்போது
கண்ணெதிரே மாப்பதுமங் காட்டுங்காட்டும்
மீன்றிகழு முயர்பொதிகை கும்பமுனிகேட்க
வேலரனுக் கிரகஞ்செய் விஞ்சையுண்மையருளே. (28)

அருளுகின்ற விஞ்சைதான் ஆருக்காகல்
அரன்மாலைப் பணிந்ததன்மை அறிவுள்ளோர்க்கு
குருவின்விசு வாசமுடன் நன்றிமறவார்க்குக்
குணமிகுந்த பெரியோர்க்கும் கூறலாகும்
மருளுடைய மனத்தோர்க்கும் வஞ்சநெஞ்சலோபர்
மாதர்மே லிச்சைவைத்து வணங்குவோர்க்கு
பொருளளித்து உயிர்வதைசெய் கல்நெஞ்சோர்க்கும்
பொன்கோடி யீந்தாலும் புகலொண்ணாதே. (29)

உச்சத்தில் மகாரமாகி உயர்நடு சிகாரமாகிப்
பிச்சத்தில் நகாரமாகிப் பிறைவட்டஞ் சூலஞ்செய்து
மெய்ச்சித்த சித்தரெல்லாம் விஷந்தனை மீட்கவேண்டிப்
பச்சத்தாற் றியானஞ்செய்யப் பறந்திடும் விஷங்கடானே. (30)

சுப்பிரமணியர் ஞான விஞ்சை ௩௰.

முற்றிற்று.

சத்திகிரி சிவகிரிதிருவாவினங்குடி யெனத்தழைத்தோங்கும்திருப்பழனிமலையிலெழுந்தருளிய ஸ்ரீகைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீனஆச்சிரமம் மகாகைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீகைலாச தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்துவாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

இருபத்து நான்காவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞான மந்திரம் ௲.



வசிவசி யென்றுநித்தம் செபித்தாயாகில்
மகத்தான சகலசௌ பாக்கியமுண்டாம்
நசிநசி யென்றுநித்தம் செபித்தாயாகில்
நலமில்லாச் சகலவினை நாடாதோடும்
மசிமசி யென்றுநித்தம் செபித்தாயாகில்
மகத்தான கசமுதலாய் ரோகந்தீரும்
கசிகசி யென்றுநித்தஞ் செபித்தாயாகில்
கனத்தெழுந்த சிலந்திபுண் கறைந்துபோமே. (1)

போமப்பா அங்கிலிசிவ சிசியென்ன
பொல்லாத மிருகமெல்லா மோடிப்போகும்
ஆமப்பா ஐயுஞ்சவ்வும் கிலிவாவென்ன
அடங்காத மிருகமெல்லாம் ஓடிப்போகும்
ஓமப்பா கிலியும்சவ்வும் ரங்ரங்கென்ன
உத்தமனே பக்ஷியெல்லா மொடுங்கிநிற்கும்
தாமப்பா நிலையறிந்து தியானஞ்செய்யத்
தானவனா யிருந்துசித்து மாடலாமே. (2)

இருந்துநிலை தனையறிந்து யோகஞ்செய்ய
ஏகாந்த மாமுனியே யொன்றுகேளு
வருந்திநின்ற மிருகமெல்லாம் வசியமாகும்
மார்க்கமுடன் மந்திரந்தா னென்றுகேளு
அருந்தவமாய்ச் சொல்லுகிறோம் நன்றாய்க்கேளு
அக்குஅக்கு யென்றுநித்தம் அழுத்திநூறு
பரிந்தாவா மிருகமெல்லாம் அசந்துபோகும்
பாலகனே சுழிமுனையிற் பதிவாய்நில்லே. (3)

பதிவான விஷங்களெல்லாந் தீருதற்குப்
பாலகனே மந்திரந்தா னென்றுகேளு
கெதியான அட்சரந்தான் சீசிங்சீஙசிஙசியென்று
கிருபையுடன் பதினாறு உருவேசெய்து
மதியான விபூதியைநீ கடாக்ஷித்தாக்கால்
மகத்தான விஷங்களெல்லாம் மாண்டுபோகும்
விதியாளி யானதினாற் சொன்னேன்மைந்தா
வெகுவிதமாய் அவரவர்கள் ஜெபித்தார்தானே. (4)

செபிப்பதற்கு வெகுசுருக்கு மைந்தாகேளு
செலமதிலே தான்ஜெபித்துக் கொடுக்கலாகும்
தவிப்பகலக் குளப்பார்வை பார்க்கலாகும்
தகனிணைந்து மந்திரத்தைச் செபிக்கலாகும்
குவிப்பான சிலந்திமுதல் வீக்கத்திற்கும்
குணமாகும் வெண்ணெயிலே தியானப்பண்ணு
கவிப்பான விஷமுதலாம் சில்விஷங்கள்
காணும லோடுதற்குக் கருவைக்கேளே. (5)

கருவான மூலிகைதான் தும்பைவேர்தன்
கடிசான மேனியுடன் மூன்றுங்கூட்டி
உருவான நவச்சாரங் கொஞ்சங்கூட்டி
உத்தமனே கசக்கியந்த நயனத்தூட்டு
பெரிதான விஷங்களது தலைமேற்கொண்டால்
பிழிந்தவுடன் ஓடுமடா பிணமானாலும்
விரிவான பசாசுமுதல் ஜன்னிக்கெல்லாம்
விபரமுள்ள நசியமதால் விட்டுப்போமே. (6)

சுப்பிரமணியர் ஞானமந்திரம் கூ.

முற்றிற்று.



மதுரை வடக்குமாசிவீதியி லிருக்கும் பாத்திர வியாபாரம் ந. ரா. ம. கணபதியாபிள்ளை யவர்களிடமிருந்த ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



கடவுள்துணை.

இருபத்தைந்தாவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# தேவி ஞான தெரிசனம்.

அம்பரையே அகண்டமே ஆதித்தாயே
ஆதியந்த மில்லாத அம்மாஅம்மா
தம்பரையே சமரசமே ஞானதேவி
சச்சிதா னந்தவெளித் தாயேதாயே
நம்பரையே நாதாக்கள் கருணைவாழ்வே
நானென்றும் நீயென்றும் இல்லாதாளே
உம்பரையே உம்பரரி யயற்குமெட்டா
ஓங்காரங் கடந்துநின்ற வொளியேயென்னே. (1)

ஒளியாகி வெளியாகி யுருவுமாகி
யொன்றாகி யிரண்டாகிச் சகலமாகி
வளியாகி யொளியாகி வானுமாகி
மவுனமுற்ற யோகமுதல் ஞானமாகித்
தெளிவாகித் தெளிவினுள்ளே தெளிவுமாகிச்
சித்தர்முதல் ரிஷிகளுடன் மனமுமாகிக்
களியாகிச் சுழியாகி மேல்கீழாகிக்
கண்கொள்ளாப் பூரணமே யென்றுபோற்றே. (2)

போற்றியவள் கருணைகொண்டு மேலேபார்க்கிற்
புகழான சத்துசித்தா னந்தங்காணும்
சாற்றியதிற் சேதனசே தனமாய்நின்ற
சச்சிதா னந்தபூ ரணமுந்தோன்றும்
மாற்றியதோர் பலவந்த ரூபமாகி
வாகான வுள்ளோடு புறம்புமாகி
ஏற்றியதோ ரொன்றாகி யநேகமாகி
ஏகாந்த நிர்மலத்தி யென்றுகாணே. (3)

காணப்பா சத்தியஞ்சத் தியமுமாகிக்
கைவிட்ட விரண்டுமற்றுக் கருணையாகிப்
பூணப்பா சத்தாகிச் சித்துமாகிப்
புகழான வானந்த மயமுமாகி
ஊணப்பா நித்தசுத்தப் புத்தமாகி
ஓங்கிநின்ற நிர்மலத்தி னொளியுமாகி
ஆணப்பா பரைகடந்த வெளியுமாகி
யாதியந்த மில்லாத வடிவமாமே. (4)

வடிவா முடிவாகி மானுங்காணு
மன்னுயிர்க்குள் நிறைந்துநின்ற மயமுமாகி
முடிவாகி நானாகி நீயுமாகி
மூச்சாகி மூச்சற்ற பொருளுமாகி
நெடிவாகி வானாகி வானுந்தாண்டி
நிறைந்துநின்ற அகண்டமுமாய் நினைவுமாகி
விடிவாகி யட்சயமாய் ரவிமதியுமாகி
விளங்கிநின்ற வானந்தப் பொருளுமாமே. (5)

பொருளான வேதாந்தம் சித்தாந்தமாகிப்
புகழ்ந்துநின்ற சமரசத்தின் போக்குமாகி
அருளாகிச் சித்தாகி ரூபமாகி
அளவற்ற சித்தர்களுக் கரூபமாகி
மருளாகி மோட்சமுந்தற் பரமுமாகி
வாரிதியாய் வையகமாய்ப் பரமுமாகி
இருளாகி யொளியாகி வெளியுமாகி
யேத்திரிய பூரணமா யிருந்தவாறே. (6)

பூரணமாய்க் காரணமாய்ப் புத்தியாகிப்
போக்காகி வரவாகிப் புகழ்ந்தேயெங்கும்
காரணமாய் நிற்குணமாய்க் கருணைதானாய்க்
கரசரண தேகமொடு கருத்துமாகி
வாரணமா யதுவாகி யிதுவுமாகி
மருவியபின் னதுவுமற்று யிதுவுமற்றுத்
தோரணமா யண்டமுதற் பதமுமாகிச்
சொல்லாகிக் குறியாகி நின்றவாறே. (7)

குறியாகி வேதாந்தஞ் சாட்சியாகிக்
கூடுகிற மனமாகி யதுவுந்தாண்டி
நெறியாகி வைம்பூத சூட்சமாகி
நேரான திரோதாயிக் குள்ளுமாகிச்
சரியாகி நாதவிந்து கலையுமாகிச்
சகலவுயிர் காலமுமாய்த் தான்தானாகிப்
பிரிவாகி யெட்டாகி நாலுமாகிப்
பேரொளியாய்ச் சித்தொளியாய் நிற்கும்பரே. (8)

பாரப்பா சத்தத்துட் சித்தமற்றுப்
பரிவான வானந்த மயமுமற்று
நேரப்பா மத்தியற்று மயக்கமற்று
நினைக்கின்ற சங்கர்ப்ப விகர்ப்பமற்றுச்
சேரப்பா யலைய வாரிதியாய்நின்று
செலமெல்லாம் பூரணமாய்ப் பொங்கித்தானும்
காரப்பா சிலந்தியுட னூலும்போலே
கைவிட்ட சூத்திரமாய்க் கலந்துதானே. (9)

கலந்துநின்ற வுலகமெலா மிறுதிதானாய்க்
காத்துயிரை வளர்க்கிறதோர் கருணைதானாய்
அலந்துநின்ற வறுமையுங்கா மியமுமாகி
அநேகவித மாகிநின்ற குணமுமாகிப்
புலந்துநின்ற கோளாகி நோயுமாகிப்
புவனத்தே நவலோகப் பொன்னுமாகி
மலந்துநின்ற பொய்யாகி மெய்யுமாகி
மாயமுமாய் ஞானமுமாய் வந்தவாறே. (10)

சுப்பிரமணியர் தேவிஞான தெரிசனம் ம.

முற்றிற்று.

சத்திகிரி சிவகிரி திருவாவினன்குடி யெனத் தழைத்தோங்கும் திருப்பழனிமலையிலெழுந்தருளிய ஸ்ரீகைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் ஆதீன மகாகைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீகைலாச தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிட மிருந்துவாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்தசாஸ்திரம்அச்சிடலானது



உ

குருவே துணை.

இருபத்தாறுவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# சிவயோகம் சய.



காப்பு.

ஆதியென்ற அடியாகி நடுவுமாகி
அந்தமுமா யருவுருவா யகண்டமாகிச்
சோதியென்ற வொளியாகிக் குணங்குறியுமாகிச்
சொல்லுவதற் கொப்பொன்று மில்லாதாகி
ஓதுமறை யாகமங்கள் சமயகோடிக்
குட்புறமுங் கீழ்மேலென் றுணராதாகி
நீதியென்ற மனத்தினுக்கு மரிதாய்நின்ற
நிமலியென்தாய் பதம்பணிந்து நிகழ்த்துஞ்சீரே. (1)

சீரான பொதிகைமுனி மைந்தாவாவா
சிவயோக வுபதேச வுண்மையைமுன்
நேரான பலமுனிவர் சித்தர்கூடி
நூலதனைப் பலவாறாய் நுவலலானார்
பாரான பூவினுறை மாந்தரெல்லாம்
பார்த்துப்பார்த் தந்நூலின் பயனைக்காணு
காராறு கத்தியமென் மொழியிற்றுந்
தயனே இதன்விபரஞ் சாற்றுவோமே. (2)

ஓமப்பா மோக்ஷத்தை யிச்சித்தோர்கள்
ஒன்றறிய வேண்டுமது என்னவென்றால்
நாமப்பா எடுத்தசரீ ரத்தின்துன்பம்
நற்றாயின் கெர்ப்பத்திற் படுமோர்துன்ப
மாமப்பா வையகத்திற் பிறந்துபால
வயதிலே படுந்துன்ப மெவ்வனத்தி
லாமப்பா படுந்துன்ப மதன்மேல்மூப்ப
தாம்வயது படுந்துன்பம் வழுத்துவேனே. (3)

வேணப்பா யீதறிந்து சரீரத்துன்ப
விதிகுறித்துப் பிதியடை யாமலுள்ளத்
தானப்பா சரீரமினி யெடாமல்மோக்ஷ
சாதனையை அடைகின்ற வழியைச்சொல்ல
மீனப்பா போன்றவிழி யுமையென்றுத்தாள்
வேல்பிடித்த வேலனெனப் பெயருமிட்டாள்
தேனப்பா தேகமிதி அநித்யமென்றும்
ஜீவான்மா நித்தியமென் றறிந்துகொள்ளே. (4)

கொள்ளவே மோக்ஷத்திற் குரியதான
கொள்கைசில தருமங்கள் செய்யவேணும்
தள்ளவே கர்மசர்ச் சங்கத்தாலே
சாநூலைப் பார்த்துமனந் தெளியவேணும்
விள்ளவே அம்மனதை வசமதாக்கி
மேலான பிரமத்தை யடையவேணும்
மெள்ளவே யோகத்தின் செய்கைமார்க்கம்
விளம்பினேன் குறுமுனியே விபரக்கூறே. (5)

கூரப்பா இந்திரியத்தை விடயத்தூடே
கூட்டுவதே யோகமெனக் கொண்டார்சில்லோர்
தேரப்பா சிந்தையதை ஆன்மாவோடு
சேர்ப்பதுவே யோகமெனச் செய்தார்சில்லோர்
மாரப்பா பிராணவாயு வோடபான
வாயுவையுந் தான்கலக்க யோகமென்பர்
ஆரப்பா சொல்வார்க ளிதனையெல்லாம்
அறியாதார் யோகமெனச் சொல்வார்காணே. (6)

காணப்பா இவைகளெல்லாம். யோகமல்ல
காசினியிற் செய்தலுத்தர ரநேகமாந்தர்
வீணப்பா மாமாங்க யோகஞ்செய்தும்
விழலாகத் தேகமது வியலாச்சு
தாணப்பா குமரன்சொல் ஜீவாத்மாவைத்
தானுமே பரமாத்மா வுடனேகூட்ட
மாணப்பா யோகமது சித்தியாச்சு
மைந்தனே அதன்விபரம் வழுத்துவேனே. (7)

வழுத்துவே னென்னபுறக் கரணந்தன்னை
வழிதுறையா யுட்கரணத் தியக்கம்பண்ணி
அழுந்தும்ஜீ வான்மாவைப் பரமான்மாவில்
ஆங்கியக்கங் கருத்தாகப் பண்ணவேண்டும்
பழுத்திடும்வா யுவைத்தரித்தே மனதிருத்திப்
பண்ணுவதே யோகமெனப் பகரலாகும்
இழுத்திழுத்தும் வாசிவச மாகாதேங்கி
யிவ்வுலகத் திருந்தனுத்தா ரெண்ணிலாரே. (8)

ஆரப்பா ஆறுவகை யோகமுண்டு
ஆசனம்பி ராணாயம் பிரத்யாகாரம்
சாரப்பா தாரணையுந் தியானமோடு
சமாதியென்றே ஆறுவகை யாயிருக்கும்
ஏரப்பா ஏகாந்தத் தலமதாக
எறும்புதீ யீயெறும்பு கொசுவுசாம்பல்
பாரப்பா உமிகரிநீர் காற்றில்லாத
பரிசுத்த மானஇட மதனைப்பாரே. (9)

பாருநீ செவ்வையா யிருந்துகொண்டு
பலவிதமுண் டாசனந்தான் பாரிலப்பா
தேருநீ அதிற்பிர்மா சனமிசைந்த
சித்திரா சனத்தைநிய மித்துக்கொண்டு
சாருநீ கழுத்தையுஞ்சற் றேவணங்கித்
தன்வாய்கண் மூடியைம் புலனடக்கிச்
சேருநீ நாசிநுனி யையுண்ணோக்கிற்
செறுத்தப்பல் லோடுபல்லைச் சேர்க்கொணாதே. (10)

சேர்க்காமற் செய்மூன்று பிராணாயாமம்
செய்யென்றே னதன்விபரஞ் செப்பக்கேளு
மார்க்கமுள்ள ரேசகம்பூ ரககும்பகந்தான்
மருவவொரு பிராணாய மாகுமென்பர்
தோர்க்காமற் பிராணாயம் முதலில்வேர்வை
தோன்றுமிரண் டாவதுவே நடுக்கமுண்டாம்
பார்க்கவே பிராணாயம் மூன்றில்வேர்வை
பகர்நடுக்க மில்லைமிகச் சுகமதாமே. (11)

ஆமப்பா கிரமத்திற் செய்யவேணும்
அதிக்கிருமித் தச்செய்தால் வியாதிகாணும்
ஓமப்பா விக்கினங்கள் மிகவுண்டாகும்
ஓகோகோ யிடையும்பிங் கலையினோடு
நாமப்பா சுழிமுனையாம் மூன்றுநாடி
தானதிலே இடையிடது நாசிதேவும்
சோமனப்பா பிங்கலையும் வலதுநாசி
சூரியனே தேவதையென் றியம்பலாமே. (12)

இயம்புசுழி முனைக்குமிடை பிங்கலைக்கு
மிடைநடுவே யிலங்குமிதன் தேவுபிர்மா
சுயம்புவாய் ரேசகம்பூ ரககும்பகமும்
சொல்மூன்று தேவதையின் ஜென்மபூமி
வயம்வாயு வெளிவிடுதல் ரேசகந்தான்
வாயுவையு மேற்றிடுதல் பூரகந்தான்
பயம்போக வுள்ளடக்கல் கும்பகந்தான்
பாலகனே இவ்வுண்மை பரிந்துபாரே. (13)

பாரப்பா பிங்கலையைப் பிடித்துநீயும்
பாங்காமிச் சரீரத்தி லிருக்கும்வாய்வை
நேரப்பா யிடையெட்டா முருச்செபிக்கும்
நேரம்வரை ரேசிக்கப் பின்னீரெட்டுச்
சீரப்பா பூரிக்க வுருநாலெட்டுச்
செபித்துமே கும்பிக்கச் செய்ததன்பின்
மாரப்பா வந்ததுபோல் திருப்பிக்கொள்ளும்
வகைவிபரம் நன்றாக வழுத்துவேனே. (14)

வேணப்பா கும்பித்த தைத்திருப்பி
விடும்போது நீபதினா றுருச்செபித்துத்
தானப்பா பிங்கலையில் விடுமெண்போலச்
சமயிடையைப் பிடித்துப்பிங் கலைபூரித்துத்
தேனப்பா செப்பெண்ணான் குருவதாகச்
செபிக்கும்வரை கும்பித்துத் திருப்பும்போது
ஈனப்பா யீரெட்டா முருச்செபித்து
இடையிலே விட்டுவா வின்னும்பாரே. (15)

பாரப்பா யிடையும்பிங் கலையுஞ்சேரப்
        பாரிரண்டு தரம்விடவோர் பிராணாயாமம்
பூரப்பா யிடையிடையி லேரேசித்துப்
        பூரித்துக் கும்பித்துக் கொள்வாய்நீயும்
சாரப்பா பிங்கலைரே சிக்கும்போது
        சந்திரனைத் தியானித்து விடவேவேண்டும்
தேரப்பா பிங்கலைரே சகத்திறோடு
        சேரும்பூ ரகமுங்கும் பகமும்பண்ணே. (16)

பண்ணியே யிடையில்ரே சிக்கும்போது
        பானுதனைத் தியானமது பண்ணிவிட்டால்
கண்ணிமையைக் காத்ததுபோ லுன்னைக்காக்கும்
        கற்பாந்த காலம்வரை நீளுமாயுள்
எண்ணரிய பிறவிமய லெல்லாம்போகும்
        ஈசனே இவனுமென் றெவருஞ்சொல்வார்
மண்ணிலே வாழ்ந்தாதா ரொருவருண்டோ
        வாயுவைநீங் காமலதைச் செய்குவாயே. (17)

செய்குவா யிப்படியே மூன்றுமாதம்
        செய்துவர நாடிமிகச் சுத்தமாகும்
உய்குவாய் வியாதியறும் புசித்ததெல்லாம்
        ஓர்நிமிடந் தன்னிற்சீ ரணமதாகும்
துய்யனா தந்தெளிய மயக்கமில்லை
        துவாதசம்பி ராணயம் செய்புங்காலம்
அய்யனே பிரத்தியா காரமொன்றும்
        அப்படிப்பன் னிரண்டோர்தா ரணையுமாமே. (18)

ஆமப்பா தாரணைபன் னிரண்டுகொண்ட
        தாந்தியா னந்தானவ் விதமானால்
ஓமப்பா சமாதியெனச் சொல்வார்மேலோர்
        உயிர்க்குயிரா யெங்கும்வியா பகமாய்நிற்கும்
தாமப்பா பிர்மத்தைக் காண்பார்கண்ட
        தக்கோருங் கெற்பம்பின் னடையமாட்டார்
போமப்பா நல்வினைதீ வினையிரண்டும்
        பொசுங்கிவிடும் மாயையறும் புகழுண்டாமே. (19)

உண்டாகுஞ் சூரியனைப் போல்நிறந்தா
னுற்றுடம்பு பெற்றுமிகப் பிரகாசிக்கும்
கண்டாகும் பிரத்தியா காரம்பண்ணுங்
காலத்தி லாமையுறுப் படங்கினாற்போல்
கொண்டாகு மிந்திரிய மடங்கும்பாரு
குறுமுனியே யின்னமொரு குறிப்புக்கேளு
பண்டாகும் பிர்மாந்த ரத்திருக்கும்
பாலமுதச் சந்திரனைப் பார்க்கலாமே. (20)

பார்க்கவதோ முகமாயுண் ணாக்கின்பாதை
பாலமிர்தந் தான்துளிக்கு மதனைநாபி
பூர்க்கவிடத் திருந்துகதி ரோன்புசிப்பன்
பூலோக தெரிசனந்தான் காணவென்றால்
நேர்க்குதலை கீழாகக் கால்மேலாக
நின்றுவாய் காகத்து மூக்குப்போல
கோர்க்கையாய்க் குவித்துடனே வாசங்கூடிக்
குளிர்ந்துவரும் வாயுவையும் புசிக்கத்தானே. (21)

தானான நரைதிரையும் வாராதப்பா
தனக்குளவுண் ணாக்குத்து வாரத்தூடே
தேனான நாக்குநுனி யேத்தினாக்கால்
தெள்ளமிர்த விந்துண்டாம் ஆறுமாதம்
வேனான தகைப்பானம் பண்ணினாலே
மிருத்துவையும் விரட்டியதைத் தான்செயிப்பான்
மானான மங்கைமய லணுகாதப்பா
வந்தாலும் வன்னியெதிர் பன்னல்போலே. (22)

போலாம்நாக் கதனாலுண் ணாக்கின்வாயில்
பொருந்திநெருங் கிடவாறு மாதகாலம்
மேலாம்பா ரீஸ்வரியைத் தியானஞ்செய்தால்
மேதினியிற் கவித்துவமும் வருந்தானப்பா
சீலாமூன் றுண்டிந்தப் படியேசெய்தால்
சிவசிவா அவனமிர்த ரூபமாவான்
தாலாமீர் பிளவுடைய அஷ்டநாகம்
தானிவனைக் கடித்தாலும் விஷமேறாதே. (23)

ஏறாது நீண்டுவிஷ மெதுவானாலும்
இப்படியே பிரத்தியா காரம்பண்ண
மாறாது சித்திக்கு வந்ததானால்
மைந்தனே தாரணையைப் பழக்கம்பண்ணு
தோறாது தாரணையைத் துலகிலுண்டு
சொல்பூமி தாரணைபொன் னிறமதாகும்
பேறாது நாற்கோணம் நகாரங்கூடிப்
பிரமனே ஆதிதே வுடையதாமே. (24)

ஆமந்தத் தாரணையை அகந்தரிக்க
அய்யஜல தாரணையும் பிறையாங்கோணம்
தாமந்த நிறம்வெள்ளை மகாரங்கூடிச்
சனார்த்தனனும் விஷ்ணுஅதி தேவதாகும்
நாமந்தக் கண்டத்தி லேதரிக்க
நலமாகும் அக்கினிதா ரணைமுக்கோணம்
க்ஷேமந்தான் சிவப்புநிறம் சிகாரங்கூடித்
தேவதைருத் திரனென்று செப்பலாமே. (25)

செப்பலாம் உண்ணாக்குத் துவாரத்தூடு
சேரவிதைத் தரிக்கமிக நலமதாகும்
உப்பலாம் வாயுதா ரணையின்கோணம்
ஓராறு கருப்புநிறம் வகாரங்கூடி
ஒப்பலாம் மயேஸ்பரன்தே வாயிருக்கும்
உண்மையாம் புருவமத்தி யிலதுதரிக்க
வெப்பலாந் தீர்ந்துவிடும் வினையுமில்லை
மேலான தேவனென்று விளங்குவானே. (26)

வானான ஆகாய தாரணைக்கு
வட்டமாம் புகைநிறம்ய காரங்கூடிக்
கோனான சதாசிவதே வாயிருக்கும்
கூர்பிர்ம ரந்திரத்தி லேதரித்து
மோனான மவுனமஞ்ச ளாழிமட்டும்
முன்னிருந்து தன்னுயிரைச் சொக்கினாலே
தானான முத்திகபா டந்திறக்கும்
தநயனே யிதனுண்மை தேறினோமே. (27)

தேறினோம் பூமிதா ரணையினாலே
திரஞ்செலதா ரணை தன்னால் நணையுமப்பா
தாறினோம் அக்கினிதா ரணையினாலே
தகனமாம் வாயுதா ரணையினாலே
ஆறினோம் ஜீவனழி யாதுகாண்பாய்
ஆகாய தாரணைச மானமாகும்
மீறியிந்தத் தாரணைகை வந்தபின்பு
வேண்டிநீ தியானமது பண்ணுவாயே. (28)

பண்ணிதய தத்துவத்தை மனத்தியானம்
பண்ணியசை யாதுசலி யாதிருத்தல்
எண்ணரிய தியானமதி லிரண்டுண்டப்பா
எழில்சகுண நிர்க்குணமென் றதற்குப்பேரு
நண்ணுசகு ணத்தினுரு வுடனிருக்கும்
ஞானமா மூர்த்தியைத்தான் தியானம்பண்ணல்
அண்ணல்பரப் பிர்மத்தைத் தியானஞ்செய்தல்
அரியதொரு நிர்க்குணத்தி னழகிதாமே. (29)

அழகிந்தப் படிதியா னங்கைவந்தால்
ஆகுமைந்து நாழிகைதா ரணையின்காலம்
பழகிந்தத் தியானமறு கடிகையாகும்
பன்னிரண்டு நாளேநற் சமாதிகாலம்
உழலுப்புச் சலந்துடனே கலத்தல்போல
உன்மனமோ டுயிர்கூடல் சமாதியென்பர்
எழுமான்மா வுளத்துடன்சேர் தலுஞ்சமாதி
யெனவுமிரு நிலத்தினுளோ ரியம்பினாரே. (30)

ஆரப்பா ஆன்மாவைப் பிரமந்தன்னில்
அயிக்கியந்தா னாக்குவது சமாதியாகும்
தேரப்பா இந்தசமா தியையடைந்தால்
திறமதிக சுகதுக்கா திகளைநீக்கி
வீரப்பா சகலமுமே பிர்மமல்லால்
வேறில்லை யென்றிருப்பான் சமாதிசெய்வோன்
பாரப்பா அவனுக்குத் தீர்நோவு
பலமிருக மாயுதத்தாற் பயந்தோணாதே. (31)

தோணாது யோகங்கை வந்தபோது
தூயமன வாக்குக்கு மெட்டாதாகிக்
காணாது தனித்தவஸ்து வாயிருக்கும்
கண்மணியை ஆவின்பா அம்பாலொன்றாய்
நாணாது சேர்ந்ததுபோற் கூடிவாழ்வன்
நவிலுமிந்த யோகம்வந்த பேர்களுந்தான்
கோணாது முத்திரையுந் தரிக்கவேணும்
குருமுனியே யிதன்விபரங் கூறுவோமே. (32)

ஓமப்பா முத்திரைதா னைந்துண்டு
உகந்தமகா முத்திரையும் நபோமுத்திரையும்
தாமப்பா உட்டியானஞ் சலந்தரமுத்திரையும்
சார்மூல பெந்தமுத்ரை தெரிந்தோன்யோகி.
ஆமப்பா மகாமுத்ரை யாவதென்றால்
அப்பனே வலதுகா லதனைநீட்டி
வாமமிடக் காலைமல வாயிலாக
வைத்தழுத்திக் கொண்டதன்பின் வழுத்துவேனே. (33)

வழுத்துநெடுங் காலையிரு கரத்தாற்பற்றி
வல்லதொரு நாடிகளை வளைத்துக்கொண்டு
இழுத்துவிடும் பிராணனையும் மாறிமாறி
என்மகனே விட்டிடநா வுலரச்செய்யும்
அழுத்தமுள நாடிசோ தனையுமாதல்
ஆதித்த னம்புலியைக் கூட்டிவாங்கி
பழுத்தபான வாயுவையு மேலேயேற்றி
பார்த்திடுமின் விபரமதைப் பகருவாமே. (34)

ஓமப்பா பிராணனைய பானவாயுவையும்
ஒன்றுடனொன் றெதிர்த்திரண்டு கூடினக்கால்
வேமப்பா மலமூத்தி ரங்களற்று
விருத்தனுமே எவ்வர்ன மாவானப்பா
நாமப்பா நபோமுத் திரைதான்சொல்வோம்
நாவைஅபா லத்தின்மத்தி யதனிலேற்றித்
தாமப்பா புருவமத்தி கண்ணைக்கொண்டு
தான்பொருத்தி யிருத்தலோ டின்னங்கேளே. (35)

இன்னங்கேள் முதுகுவயி றுந்திமேலே
இயம்புபிரா ணனைத்தரித்த லுட்டியானம்
என்னுமிந்த முத்திரையின் பெயரதாகும்
இதனாலே வானிற்சஞ் சாரஞ்செய்வன்
பின்னமிலா சலந்தரமுத் திரைபின்மார்க்கம்
பேசவாய் வதனாலும் நரம்பினாலும்
தன்மலத்தைத் தானிருக்கிக் கீழேயுள்ள
தணலினால் மதியினிருந் தமிர்தந்தானே. (36)

தானப்பா ஒழுகாது பிராணவாய்வும்
தன்னைவிட்டுப் புறம்போகா தின்னங்கேளு
வேனப்பா யிருகுதியுங் குதத்தியக்கி
மேனுமல வாயிலையு முள்ளேவாங்கி
தேனப்பா அபானவாயு வைமேலேறச்
செய்தாற்பி ராணவா யுவுமெதிர்த்து
மோனப்பா அபானவாய் வுடன்சம்பந்தம்
முன்னாகில் மலஜலங்க ளடையாதென்னே. (37)

என்னமுத்தி யோரிளமைப் பருவமாவர்
இதுமூல பெந்தமுத்தி ரையாமென்பர்
பின்னமிலாப் பிராணவாயு மேலிழுக்கப்
பிசகாத பானவாயு கீழிழுக்க
மன்னியதாற் றுன்பவா தனைபுறாமல்
வல்லநிஷ்டை புரிபவனே யோகியாவன்
அன்னகா சகாரவெழுத் துக்குட்செல்லும்
அசபாவின் மந்திரத்தை யறிவிப்போமே. (38)

அறிகுறியா மிருபத்தோ ராயிரத்து
அறுநூறும் ஜீவனுரு வேற்கவேண்டும்
செறிவான சூத்திரமெல் லாமுணர்ந்து
ஜெகமுழுதும் க்ஷணப்பொழுதிற் சஞ்சரித்துச்
சிறிதாகப் பெரிதாகத் தேகந்தன்னைச்
செய்தொளிகண் மனந்தெரிய வெத்தேசத்தும்
நெறியான பாஷையுடன் நயனபாஷை
நிகழ்த்துவதோ டாகாயத் துலவுவானே. (39)

உலவித்து ரத்திலுள பொருளைக்காணல்
　　உற்றுலகத் தூற்றபிர காசமெல்லாம்
பலவிதச்செய் கையுமறிவா ரிலேசதாகப்
　　பார்த்தாலுஞ் சாதனத்துக் கிடையூறென்று
புலனடக்கிக் கொண்டுசெயஞ் சோதிபாதம்
　　போற்றிபி ரேழுலகு மிருப்பானென்று
கலசமுனிக் குபதேச வுண்மையோகங்
　　கந்தவே ளுரைத்ததெனக் கண்டுகொள்ளே. (40)

சுப்பிரமணியர் சிவயோகம் சஙு.

முற்றிற்று.





மதுரை திண்டுக்கல்ரோட்டில் வசிக்கும் தம்புசாமிநாயுடு அவர்கள் குமாரர் வித்வான் குப்புசாமிநாயுடு அவர்களிடமிருந்த ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

இருபத்தேழாவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானம் ௩௩.



சீர்மேவும் முப்பொருளு மொன்றதான
சிறந்தபரா பரத்தினுட அடியில்நின்று
பார்வளருங் கேசரத்தி லாடந்தன்னிற்
பஞ்சகோணந் தன்னையுந்தா னொன்றாய்ச்சேர்த்துக்
கார்வளருஞ் சிவகெங்கை தன்னில்மூழ்கிக்
கங்குல்பக லற்றவிடங் கடந்தப்பாலே
தார்வளருங் குண்டலியாந் தீர்த்தமான
தந்தியையும் பணிந்துமிகச் சாத்துவோமே. (1)

சாத்துகிறேன் பெருநூலா யிரந்தான்சொன்னேன்
சத்தியமாய்க் குறுக்கியைஞ் ஞூறுஞ்சொன்னேன்
வாத்தியே அதைக்குறுக்கி யிருநூறுமைந்தா
மார்க்கமுள்ள கற்பமெல்லாம் மகிழ்ந்துசொன்னேன்
போத்தியே இருநூறைக் குறுக்கித்தானும்
புத்திரனே நூறாகப் புகழ்ந்துசொன்னேன்
மாத்திலையு மதிகமடா யிந்தநூலில்
மனமகிழ்ந்து மவுனமெல்லாங் கண்டுபாரே. (2)

பாரடா யோகமுடன் மவுனந்தானும்
பாலகனே வாதமுடன் வைத்யந்தானும்
ஆரடா அஞ்சனமுந் திலதப்போக்கும்
அப்பனே மறைப்போடு கெவுனமார்க்கம்
நேரடா யிதுவெல்லாம் வெளியதாக
நிகழ்த்துகிறேன் மனமகிழ்ந்து நேர்மையாகக்
கூரடா அகத்தியமா முனியேகேளு
கோபமற்றுப் பூரணத்தின் குறியைப்பாரே. (3)

பாரப்பா சாகாத காலைப்பாரு
பாலகனே வேகாத தலையைக்காணு
ஆரப்பா சொல்வார்க ளடிமுடியை
அகஸ்தியனே உந்தனக்கே அருளேசெய்வேன்
வீரப்பா தானடங்கிக் காலைக்கண்டு
வெட்டவெளி யானபரா பரத்தினாலே
சாரப்பா அனுவாசற் குள்ளேசென்று
சாதகமா யனுதினமும் நிறுத்திக்காணே. (4)

காணப்பா பராபரத்தி னடியைக்கேளு
கண்டுபார் கண்மூக்கு மத்திதன்னில்
தோணப்பா ஒருகாலை யுயரத்தூக்கித்
தொங்கேதாமென் றுடிநிற்குந் துரியந்தன்னில்
ஆணப்பா அண்ணாக்கு *மரத்துக்கப்பால்
ஆதிவஸ்தின் சிரசுநிற்கும் அறிந்துபாரு
வீணப்பா திரிந்துமிக அலைந்திடாமல்
வேகாத தலையிதுவாம் விரும்பிப்பாரே. (5)

விரும்பியே அண்டவுச்சி நடுவிலேதான்
மேல்நோக்கிப் பாய்ந்திடவே வெளியதாகுந்
திரும்பியே போகாது வாசிதானுந்
திரையேழு மதியாலே யெரிந்துபோகுங்
கரும்பிலையும் ருசிநனையடா மதுவுண்டாகுங்
கால்மாறி யிருசுடரை ஒன்றதாக்கிச்
சுரும்பெனவே ஒருமனதாய் நிறுத்திக்கொண்டு
சுத்தசலந் தன்னிலையு மூழ்கிப்பாரே. (6)

பாரப்பா அண்டவுச்சி மேருதன்னிற்
பரிதிமதி சுடர்மூன்றுஞ் சுத்தியாடும்
ஆரப்பா நட்சேத்ரக் கிரகமொன்பான்
அடுக்கடுக்காய்ப் பதினாலு லோகமெல்லாம்
நேரப்பா நிறைந்திருக்கும் பாதந்தன்னில்
நிற்பதினா லதினுடைய நேர்மையாலே
வீரப்பா பதினாலு குலமுண்டாக
வீற்றிருக்கும் அண்டவுச்சி வெளியிதாமே. (7)

*மரம் கொடிமரம்

தாமென்ற சொல்லற்றுப் பிர்மந்தன்னிற்
 சார்ந்துமிக அனுதினமுந் தவமேசெய்து
ஓமென்ற பிரணவமே அண்டவுச்சி
 உத்தமனே ஆதிமகா மூலமாகும்
ஆமென்ற அகாரமுடன் உகாரங்கண்டு
 அருளான அருளையுந்தா னடுத்துச்சென்று
நாமென்ற சொல்லற்று மேருவிற்சென்று
 நந்திதனி லேயிருந்து நாட்டுவாயே. (8)

நாட்டியே பார்த்திடுவாய் ஊழிமட்டும்
 நலமாக அனுநேரந் தவறிடாமற்
பூட்டியே யிருக்கவே சட்டைதள்ளும்
 பொறிகளைந்தும் ஒன்றாகிப் போதமாகுங்
காட்டியே திரியாதே யிந்தநூலைக்
 கதிர்போலே அவர்தேகங் காந்திமீறும்
பாட்டிலே சொன்னதென்று யெண்ணவேண்டாம்
 பாலகனே கவனம்வைத்து யிந்நூல்பாரே. (9)

பாரப்பா ஆதியிலே பராபரமும்
 பாலகனே முக்குணத்தைப் படைக்கும்போது
ஆரப்பா மூவரென்று நாமமாச்சு
 ஆதிசத்தி அதின்பேரில் நாட்டமாகி
நேரப்பா சமுத்திரங்கள் பூமிதானும்
 நிலையான நட்சேத்ரம் பொறிகளைந்தும்
சீரப்பா ரவியோடு மதியுமாகிச்
 சிறந்திடவே சீவசெந்து அநேகந்தானே. (10)

தானென்ற ஐந்துவகை யோனியாச்சு
 சத்தியமா யெழுவகைத் தோற்றமாச்சு
ஊனென்ற மலைகாடு பூண்டுபுற்கள்
 ஓகோகோ அனந்தமடா தெய்வமாச்சு
கோனென்ற குருக்களென்றுஞ் சீடரென்றுங்
 கொடியமறை வேதமென்றுங் குணமுண்டாகி
தேனென்றும் உயிர்தோறும் பிர்மந்தானுஞ்
 சீவனுக்குச் சாட்சியா யிருந்தவாறே.

வாறான பிர்மமே ஒன்றதான
வலுமைதனை யறியாம லுலகந்தன்னிற்
சீரான தெய்வமென்றும் பூதமென்றுஞ்
செகந்தனிலே அனந்தமடா தீர்த்தமென்றுங்
கூறாகப் பூசையென்றுங் குருக்களென்றுங்
கொடியமறை வேதமென்றும் புராணமென்றும்
வீறாக நாகமென்றும் உலகத்தோர்கள்
வெவ்வேறாய் நினைத்ததினாற் பிறவியாச்சே. (12)

ஆச்சப்பா செய்கையெல்லாம் பிர்மமென்றும்
அவனியிலே தெரியாமல் மதங்கள்பேசி
நீச்சப்பா அறிந்தார்கள் லோகத்தோர்கள்
நிலையறிந்த பெரியோரைக் கோடிக்கொன்று
வீச்சப்பா அவனன்றி அணுத்தானுண்டோ
வீராண்மை உங்களுக்கு வருவதேதது.
மூச்சப்பா அடங்கிநின்ற முதலைப்பாரு
முத்திக்கு வித்தான முனையைக்காணே. (13)

காணப்பா விந்துவிலே முளைத்தமுளை
கண்டறிந்து பார்த்தவர்க்கே மவுனமாகுந்
தோணப்பா யெங்கெங்கும் நிறைந்துநின்று
துன்பமற்றுப் பேரின்பந் துடர்ந்துகூடும்
வீணப்பா சமுசாரத் துக்கத்தாலே
விந்துவிலே முளைத்ததொரு முளையனான
ஆணப்பா பெண்ணாகி அலியுமாகி
அடங்கிநின்ற கூற்றுவனை ரருளைப்பாரே. (14

அருளான அருளறிந்து யிருளைநீக்கி
ஆறுமுக வேலனென்று அருளும்பெற்று
திருவான உச்சியின்மே லடங்கிநின்று
சீவாத்மா தங்களுக்குச் சாட்சியாகிக்
குருவாகி லோகமெல்லாந் தானாய்நின்று
குன்றுமலைத் துளைத்துமிகக் குகனுமாகித்
தருவாகி யுருவாகித் தந்தியாகிச்
சாகாத காலாகித் தலையுமாச்சே. (15)

ஆச்சப்பா மணியாகி வொளியுமாகி
அரனருக் குபதேச மருளிச்செய்தேன்
பேச்சப்பா தேவனுக்குத் தேவனாகிப்
பின்கலையும் முன்கலையும் பிரிவுமானேன்
வீச்சப்பா செந்தியிலே யிருந்துவாழ்ந்தேன்
வெட்டாத சக்கரத்தின் பேருங்கொண்டேன்
நீச்சப்பா மாயைபல பேதமானேன்
நிலையான அசுரர் தன்னை வதைத்தேன்பாரே. (16)

பாரடா கேசரத்தி லிருந்துகொண்டு
பன்னிரெண்டு முகத்தினுட வன்னியாலே
ஆரடா செந்தீயைப் பார்க்கும்போது
ஆகாச கெங்கையுட அமுதமுண்டேன்.
நேரடா நிருவிகற்ப சமாதியாகி
நெற்றிக்கண் பார்வையினால் நிலைத்ததாலே
வீரடா அடங்கிமிகக் கெவுனமாகி
வேலெடுத்து வீதிசுத்தி வந்தேன்காணே. (17)

காணப்பா ரவிமதியுஞ் சுடர்மூன்றாலே
கால்வாங்கி விந்துவிலே யிருந்துகொண்டு
தோணப்பா சஞ்சார சமாதியாகித்
துரியமா தீதமதிற் றுலங்கிவாழ்ந்து
வீணப்பா காலமதைப் போக்கிடாமல்
வேலிருக்கு மிடந்தனிலே மிகவேசென்று
நாணப்பா நாற்பத்து முக்கோணத்தில்
நந்தியுட பார்வையினால் நாட்டம்பாரே. (18)

பாரேநீ வேசையர்மே லாசையற்றுப்
பலநூலைத் தள்ளியே பரத்தில்மேவி
ஆரேநீ அகாரமொடு உகாரஞ்சேர்த்து
அண்டத்திற் றனேறி யருளும்பெற்று
ஊரேநீ உலகத்தா ராசையற்று
ஒழுமுடிந்த பட்டணத்தி லொடுங்கிவாழ்ந்து
சீரேநீ சாகாத மலரைச்சாத்திச்
சிறுவீடு தனைநோக்கிச் செபந்தான்செய்யே. (19)

செய்யப்பா பலகாலம் மனதொன்றாகித்
திருவாசி தனைப்பூட்டிச் செபந்தான்செய்ய
மெய்யப்பா வுன்தேக மழியாதையா
மெய்ஞ்ஞான தீபமென்ற வெளிச்சத்தாலே
பொய்யப்பா சொல்லவில்லை மவுனம்பாரு
பூலோகத் தாருடன்போ ராடவேண்டாம்
கையப்பா கால்மாறி வாசிபூட்டிக்
கண்மூக்கு மத்தியிலே கருதிப்பாரே. (20)

பாரடா உப்புவகை யெட்டுமொன்றாய்ப்
பாலகனே சுத்தசிவர் தன்னிலேதான்
ஆரடா கரைத்ததையுந் தெளியவைத்து
அப்பனே யிருத்திடுவாய் பாண்டத்துள்ளே
நேரடா அடுப்பேற்றிக் கணேசன்றன்னை
நீமகனே பூசைசெய்து நினைவாய்க்காச்சு
வீரடா உப்பதுதான் வெளுப்பதாகும்
வேகமுடன் பத்துமுறை காச்சுகாச்சே. (21)

காச்சியடா உப்பதனைப் பார்க்கும்போது
கடுங்கார உப்பதுதான் வெளுப்பதாகும்
தாச்சியடா வையாம லருக்கன்பாலாற்
சாமமுந்தான் நாலுமட்டு மரைத்துச்சேரு
வாச்சுதடா வில்லைசெய்து உலரவைத்து
வளமான பழச்சாற்றாற் பின்னுமாட்டி
ஆச்சுதடா உலரவைத்துப் புடத்திற்போடு
அழகான சுண்ணமடா கட்டாக்தானே. (22)

தானென்ற சுண்ணமதை யெடுத்துமைந்தா
சத்தியமாய்த் தில்லைப்பால் மாதளஞ்சார்
கோனென்ற குமரியுட சாறும்விட்டுக்
கூறுகிறே னொருசாம மரைத்துக்கொண்டு
தேனென்ற வில்லைசெய்து உலரவைத்து
ஸ்ரீநமசி வயமென்று ஜெபமேசெய்து
நானென்ற ஆணுவமும் போக்கித்தானும்
நலமான குக்குடத்திற் புடந்தான்போடே. (23)

போடப்பா ஆரவைத்து எடுத்துப்பாரு
புத்திரனே செந்தூரங் காந்திமீறும்
ஆடப்பா வேதையெல்லாங் கைக்குள்ளாகும்
அப்பனே காயசித்தி அதீதமாகும்
தேடப்பா உப்பினுட வித்தைதன்னைச்
சிவப்ரகாசந் தனையறிந்தாற் சித்தியாகும்
நாடப்பா முக்கோண வீட்டினுள்ளே
நந்தியுட கொலுவிருப்பு நடனம்பாரே. (24)

பாரப்பா கேசரத்தி லிருந்துகொண்டு
பஞ்சவர்னப் பரிதனிலே பாயும்போது
ஆரப்பா அண்டமுட்டி வுயரத்தூக்கும்
அப்பனே காயசித்தி அதீதமாகும்
நேரப்பா கெவுனமணி கட்டிப்போகும்
நிமிஷத்திற் றொழிலெல்லாம் நிமைக்குமுன்னே
வீரப்பா ஆடுமடா வேகமாக
விட்டகுறை தொட்டகுறை தெரியுந்தானே. (25)

தெரியுமடா அந்தரங்க மானவுண்மை
தீராத வினைகளெல்லா முன்னைக்கண்டால்
பரியுமடா ஓடியே பறக்கும்பாரு
பரப்பிர்ம கிருபையுட அருளினாலே
முறியுமடா யெதிர்த்தோர்கள் தேகந்தூளாய்
மூளுமடா கர்மவினை வந்துசூழும்
விரியுமடா பூரணத்தின் மலரினாலே
வேகாத தலையறிந்தால் மிச்சந்தானே. (26)

மிச்சமடா பூதலத்தில் ஞானிமெத்த
மிரட்டுவா னுருட்டுவான் மெலிந்துபோவான்
பச்சம்வைத்துப் பிர்மத்தில் நிறுத்தமாட்டான்
பலசாத்தி ரம்படித்துப் பலனுங்காணான்
நிச்சயமாய் மனதொன்றாய் நிறுத்தமாட்டான்
நிருவாணி தன்னையுந்தா னடக்கமாட்டான்
பச்சமதிற் கிரகநிலை யறிவான்பாவி
பரதேசி யென்றுமிகப் பகருவானே. (27)

பகருவான் வேடமிட்டுக் காவிபூண்டு
பாடுவான் காவிலே குறடுமிட்டு
அகருவான் மனதொன்றாய் நிறுத்தமாட்டான்
ஆலயங்க ளுக்கருச்ச னைகள்செய்யச்
சிகரகோ புரம்போலே மலர்கள்கொய்து
செத்தசவந் தனைப்போட்டுத் தீபஞ்செய்வான்
நகருமணி யைம்புலத்தை யொன்றதாக்கி
நாதனையும் போற்றாத நாய்கள்தானே. (28)

நாயென்று சொன்னாலு மறிவுமெத்த
நாதனுட மணிவாச லறியாத்தோசி
தாயென்று சிற்பரையை அறியாப்பாவி
தந்தையென்று பிர்மத்திற் கூடாத்தோசி
ஓயந்தக் கவலைகொண் டிருந்தபாவி
ஓரமாய் வழக்குகளை யுரைத்ததோசி
மாயமாய்ப் பணம்படைத்து மீயாப்பாவி
மறுமனையாள் தனைமருவுந் தோசிதானே. (29)

தோசியடா காயாச மறியாமற்றான்
துவைத்திடுவான் காவிமண் தன்னால்மைந்தா
வாசியடா காயாச முந்தனுள்ளே
வடிவான சுத்தசெலந் தன்னில்மைந்தா
மாசியினிப் படாமற்றான் தோய்த்துத்தோய்த்து
மந்திரமா முதலெழுத்தின் வடிவைப்பார்த்து
ஊசியின்மேற் கால்நிறுத்தித் தலைகீழாக
உற்றுணர்ந்து பார்த்தவர்க்கே முத்திதானே. (30)

முத்தியடா முக்கோண மறிந்தாற்சித்தி
மூவிரண்டாங் கோட்டிலே முளைத்தலிங்கம்
சத்தியடா மாவிடையு மானலிங்கஞ்
சஞ்சார சமாதியிலே அமர்ந்தலிங்கம்
பத்தியே பெரியோர்க்காய் வந்தலிங்கம்
பரப்பிர்ம மாகவுந்தா னிருந்தலிங்கம்
நித்தியமும் நிருவிகற்ப சமாதியாகி
நிர்மலமாய் நிறைந்தெழுந்த லிங்கந்தானே.

போச்சடா குருவான மனதொன்றாகப்
புத்திரனே நிறுத்தாட்டாற் புலன்களாலே
ஏச்சடா யெழுநரகில் வீழ்வான்மைந்தா
யெட்டிரண்டுந் தெரியாத கன்மத்தாலே
மூச்சடா மூச்சந்தி தன்னில்மாறி
முழுதுமடா திருக்கூத்தைக் கண்டானானால்
வாச்சடா வன்னியுந்தான் பிர்மந்தன்னில்
வாடாத தீபமதாய் வளரும்பாரே. (32)

பாரப்பா நான்சொன்ன இந்நூல்தன்னிற்
பரிபாஷை சொல்லவில்லை மைந்தாகேளு
ஆரப்பா லாடத்தில் மனந்தான்நிற்க
அகிலாண்ட பிர்மாண்ட மெல்லாம்நீதான்
வீரப்பா செய்யாதே யென்னைப்போலே
வேல்வாங்கி அண்டவரை மேவவேணும்
சாரப்பா யிந்நூலைச் சார்ந்துபாரு
சார்ந்தவர்க்கே முப்பத்து மூன்றும்முற்றே. (33)

சுப்பிரமணியர் ஞானம் ௩௩.

முற்றிற்று.





மதுரை வடக்குமாசிவீதியி லிருக்கும் பாத்திர வியாபாரம் ந. ரா. ம. கணபதியாபிள்ளை யவர்களிடமிருந்த ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

இருபத்தேட்டாவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானக் கக்கிஷம் ருரு.

கார்பொழில் மூலவட்டக் கணபதி பாதம்போற்றி
சீர்பொழில் மறைநூல்வேதந் தெரிந்துமுள் மவுனம்நோக்கிச்
கூர்பொழி யதிதசூக்ஷம் கொள்சிவ சத்திகக்கிஷம்
சார்பொழி சாக்ஷியான தாண்டவம் விரித்துச்சொல்வேன். (1)

சொல்வது ரேகைபத்து தொகுத்திடுங் குறுக்கேபத்து
சொல்வது மறையெண்பத்தோ ரெண்ணமாம் வீதிதோறும்
சொல்வது கேளுமைந்தா சுருக்காகக் கிரகபீசம்
சொல்வது மாறிமாறிச் சூட்டிடு மின்னுங்கேளே. (2)

கேளெண்பத் தொன்றுலெக்கங் கெட்டியாய்ச் சொல்வேன்மைந்தா
மீள்பதி னொன்றுமேழும் விமரிசை யீராறெட்டும்
ஆள்பதி மூன்றுமொன்பான் அஞ்சுமீ ரஞ்சிஞேடு
கீழரை யாறும்போடக் கெட்டியா மெண்பத்தொன்றே. (3)

ஒன்றான சக்கரத்தை உலகினி லுரையாதேநீ
நன்றான பஞ்சபீசம் நாட்டிடும் வகைகேள்மைந்தா
மன்றான வெளிச்சுத்தெங்கும் வழங்கிடு மயேசன்பீசம்
தொன்றான கீழ்ச்சுத்தெங்கும் துலங்கிட வன்னிபோடே. (4)

போட்டிடு வன்னியின்கீழ் பொருந்தநற் றிருமாலின்கீழ்
சூட்டிடு பிர்ம்மாவின்கீழ் சொல்லொணு யகாரமிட்டுப்
பூட்டிடு ஓம்ஹ்றீங்கென்று பூரண மாகக்கூட்டி
நீட்டிடு ரேகைசூலம் நிலக்கெலாஞ் சூக்ஷங்கேளே. (5)

கேளுமே கும்பயோனி கெட்டியா யிட்டுக்கூட்டிச்
சூளுமே வட்டமிட்டுச் சுத்தநிற் சத்திபீசம்
வாளுமே சத்திபீசம் வகைசொன்ஞர் போகநாதர்
மூளுமே சத்திரேகை மூன்றிடு வாசல்தானே. (6)

வாசல்தான் காலுமிட்டு மகிழ்ந்துநீ கேளுமைந்தா
பூசல்தான் செய்யும்பாவி பொல்லாதார்க் குரைக்கவேண்டாம்
பேசத்தா னெண்ணுதப்பா பிறர்களி னுறவும்வேண்டாம்
மாசத்த மவுனம்நோக்கி மதியுமொன் ருகநில்லே. (7)

ஒன்றுள சிவன்மேலாணை யுலகருக் குரைக்கவேண்டாம்
நன்றுள பிள்ளைகட்கும் நவிலொணு திந்தச்சூட்சம்
தொன்றுள நால்களெல்லாம் தோய்ந்துளந் தெளிந்துகொண்டு
கன்றுள யீசன்சத்திக் கக்கிஷ நடனம்பாரே. (8)

பார்த்திட வெளியதாச்சு பார்தனில் மொழியவேண்டாம்
ஏத்திடு மவுனமுன்னி யியங்கிய முப்பாழ்க்கப்பால்
சேர்த்திடும் அறிவுமேலே சிதம்பரக் கயிலைமேவி
போத்திடு தீபமேத்திப் பூரணக் காட்சிபாரே. (9)

பார்த்திடும் வித்தைநன்ரு பாவஞ்செய் வதுவும்நன்ரு
போத்திடும் எந்தன்மைந்தா புகலெனக் கேட்டபோது
காத்திடும் அடிமைதன்னைக் காரணக் குருவின்பாதம்
சேர்த்திடு மூலத்துள்ளே சிவசிவா பரமகோவே. (10)

கோபமே வந்ததேது குருபர ஞானமூர்த்தி
தாபமே உன்மேல்வைத்துச் சத்திகக் கிஷத்தைப்பார்க்கச்
சாபமேன் சொன்னீரையா சக்கரம் சித்தியாமோ
கோபமே னுலகிற்பொல்லாக் குலாமர்க்குச் சொல்லொணுதே. (11)

சொல்லொணு தப்பாகேளு சூக்ஷகக் கிஷத்தையார்க்குஞ்
சொல்லொணு தயன்மால்தேவேந் திரன்சுரர் தெற்குமூர்த்தி
சொல்லொணு ரிஷிகள்தானுந் துவாரபா லகரேகந்தன்
சொல்லொணு சண்டகேசன் சூழ்வீரவ் வடுகன்ருனே. (12)

தானென்ற கிழக்குத்தொட்டு தப்பாமற் பீசம்போடு
கோனென்ற போகர்பாலர் கொங்கணர் முக்காண்டத்துள்
மானென்ற ஆவிசொல்ல வழுத்திநு ரொளிப்பில்லாமல்
பாலென்ற வடமேலாயி வாசலிற் போட்டுக்கேளே. (13)

கேளுநீ அஷ்டநாகம் கெசமெட்டுப் பாலரோடு
கூளுநீ அஷ்டகன்னி சுவானவா பீசமிட்டு

வாளுநீ அஷ்டவெற்பு வாசல்முன் நந்திகம்பம்
ஆளுநீ பெலிகளெட்டும் அடைக்கச்சக் கரமதாச்சே. (14)

சக்கர வாசல்தெற்குச் சங்கமாம் நதியாந்தீர்த்தம்
சக்கரம் வடக்குக்கும்பம் தரும்நதி பொய்கையோடும்
உக்கிர மாச்சுசக்கிரம் உயரவே பூதபீசம்
சக்கிர முழுதுஞ்சொன்னேன் தாண்டவ மாடுங்காலே. (15)

ஆடுமே ஓம்கிலிலாம்அவ்வும் அரன்சத்தி யென்றநாமம்
போடுநீ சிவயநம புகழ்ந்து ஆயிரந்தானோதே
நாடுமே மாரணந்தான் நான்முகன் விதித்ததெல்லாம்
தேடும்பூ லோகமன்னர் தேவலோ கங்கள்பாரே. (16)

பார்க்குமுன் மாரணத்தைப் பகர்ந்திடக் கேளுமைந்தா
ஆர்க்குமீ துரைக்கவேண்டாம் அரனாணை சத்தியாணை
ஏர்க்குமுன் கோபமாகா எழுநூறு குற்றஞ்செய்தாற்
பார்க்குளே மாரணஞ்செய் பாவங்க ளில்லைத்தானே. (17)

பாவமே வருகநன்றோ பரமோக்ஷம் சேரனன்றோ
கோவந்தான் வேண்டாம்மக்காள் கொடியசக் கரமேசெய்யும்
தாவந்தா னறிந்துநோக்கு சத்துரு வானபேர்கள்
நாவுந்தான் புழுத்துச்சாவான் நவிலொணாச் சூக்ஷந்தானே. (18)

சூச்சதே பார்க்கவேண்டாம் தொடுமுனே ஆடும்பாலா
வாச்சுதே யென்றுநூலை மானிலந் தன்னிற்காட்டிற்
போச்சுதே யெல்லாச்சித்தும் பூரண யீசனாணை
காச்சுதே அடக்கமானாற் கைகண்ட சித்திபாரே. (19)

சித்தியும் பொருளுமுண்டாம் சிவபதந் தானுமுண்டாம்
முத்தியும் மோக்ஷமுண்டாம் மோகனம் வசியம்பேதம்
வெத்தியும் அழைப்புவித்து வேசனந் தம்பனந்தான்
பத்தியுச் சாடனத்தைப் பார்த்துநீ நிலையில்நில்லே. (20)

நில்லென்ற சேதிகேளு நிசவித்தை மறப்பில்லாமல்
சொல்லென்ற மார்க்கந்தானுஞ் சோதித்துச் சித்தர்வந்து
வில்லென்ற அம்பையுன்னி வெளிதோணப் போடுவாயே
கொல்லென்று சண்டையிட்டுக் கூவென யெழும்பினானே. (21)

எழும்பியே சித்தர்முன்னே யெழுந்துயான் பேசும்போது
தொழும்பிய கயிலைமேவிச் சொன்னார்க ளரனார்முன்போய்
வழும்பிய ரிஷிகள்தேவர் மாதவத் தோர்கள்கூடி
யெழும்பிய சண்டையிட்டு யிந்தநூ லொளித்தார்பாரே. (22)

பாரங்கற் குகைக்குள்வைத்துப் படர்கல்லி னாலேமூடி
நீரங்கற் கையுமேயிட்டு நிஷ்டத்தி லென்முன்வந்தார்
மாரனென் செய்தீர்நீங்கள் வாக்குக்குத் தவமாம்போது
சோராமல் லீசன்தேவ ரிஷிகளும் வந்திட்டாரே. (23)

வந்திட்ட யீசன் றன்னை வணங்கியே நிற்கும்போது
முந்திட்ட நூல்வி டாதே மோசங்கள் செய்வார் பார்த்தோர்
பந்திட்ட வித்தை போலே பாடிநீ ரகத்தி யோனே
இந்திட்டின் னூலீயாதே யென்றரன் சொன்னார் பாரே. (24)

சொன்னதோர் இந்நூல்யார்க்கும் சூக்ஷமாய்க் கிட்டாதப்பா
சொன்னதோர் இந்நூல்தங்கும் குன்றிரம் யோகிக்கப்பா
சொன்னதோர் மொழியேசாபம் துஷ்டருக் கிந்தார்சாவர்
சொன்னதோர் தேவியானை சிறுவர்க்குச் சொல்லாவாறே. (25)

வாறுகேள் ஓம்லீயும்ஐயும் வசிமயை யென்றுமெட்சம்
சீறுகேள் வசியமேட்டும் மெதனாற்றிலே வசியமாகும்
வேறுகேள் பேதனந்தான் லிலம்புவோம் கிலியும்ஐயும்
தேறுகேள் வயநமசிவென்று செபித்திட வினையமாமே. (26)

வினையமாந் தொழிலையார்க்கும் விளம்பிட வேண்டாம்பாரு
வினையமாய் விளங்கும்லோக வித்தையைக் கேட்போர்க் கெல்லாம்
வினையமாய்ச் சாக்குப்போர்க்கு விண்டிடா தவரைநீக்கு
வினையமீ தாகும்மைந்தா விளங்குதம் பனத்சொல்வேனே. (27)

சொல்வது ஓம்ஆம்அவ்வும் தொடியவ சிவாவென்று
சொல்வது லட்சமேபோது சுருக்குதம் பனமேயாச்சு
சொல்வது வித்துவேஷ னத்தையுஞ் சொல்லக்கேளு
சொல்வது ஓம்ஆம்அவ்வும் தொடியம வசியென்னே. (28)

என்னவுச் சாடனத்தை யியம்புவேன் மைந்தாகேளு
உன்னமே கிலியும்அவ்வும் உவ்வும்முன் சுழினசன்றுலவ்

நன்னமே வசிமநயவென்று நாமமும் சொல்லலெட்சம்
முன்னமே பிரிவாஞ்சொன்னேன் மோகனம் ஓம்அவ்வாமே. (29)

ஆமப்பா கிலியுங்கூட்டி அதினொடு நயவசிமவென்று
ஓமப்பா நாமஞ்சொல்ல உனைக்கண்டாற் சருவமோகம்
தாமப்பா ஆகிருஷ்ணத்தைச் சாற்றுதற் கெளிதோசூக்ஷம்
வேமப்பா கிலியும்அவ்வும் விரட்டவுஞ் சிவயமென்னே. (30)

என்னவே அஷ்டகர்மம் இயம்பிய சூட்சமெல்லாம்
சொன்னவன் புழுத்துச்சாவான் சொல்லாதே தோஷம்பாவம்
நன்னவே தனித்துக்கொண்டு நடனசக் கரத்தைப்பார்த்துப்
பன்னவே மவுனம்நோக்கிப் பார்த்திடும் வித்தைதானே. (31)

தானென்ற வித்தையெட்டுந் தாக்குமுன் பிடிக்கும்பாரு
கோனென்ற மீசன்நூலுங் கூடிய சித்தர்நூலும்
வானென்ற இந்தநூற்கு வாராது மைந்தாமைந்தா
நானென்ற பேர்க்கெய்யாது நல்லோருக் கெய்தும்பாரே. (32)

பாரிந்த முறைபொய் யென்றுற் பாவங்க ளனேகஞ்சுத்தும்
வாரிந்த யேமனன்று வாங்குவா னுயிரைத்தானும்
போரிந்த முறைபொய்யென்றுற் புழுத்துடற் றாளதாகும்
காரிந்த நூலைப்பார்த்துக் கர்மமெட் டெட்டும்பண்ணே. (33)

பண்ணவே மோக்ஷமெய்தும் பார்தனில் மொழியவேண்டாம்
திண்ணவே வாசிமூலத் தெளிவெளி மவுனம்விட்டால்
நண்ணவே செய்யாவிட்டால் நாயினுங் கேடதாவார்
எண்ணவே பலியாதப்பா யெய்திடும் மவுனந்தானே. (34)

தானென்ற சக்கரத்திற் சாற்றுவோம் ஒன்றுகேளு
வானென்ற யகாரத்தோடு வகும்பெறக் கணேசன்மூலம்
மானென்ற திருமாலோடே வைத்திடு இகாரந்தன்னைக்
கோனென்ற வேதன்தன்பால் கூடவே அகாரம்போடே. (35)

போட்டிடு வன்னியோடே புகழ்ந்திடும் உகாரந்தன்னைச்
சூட்டிடு வாய்வினோடே சொல்லொணு எகாரம்போடு
நாட்டினில் ஒன்றுபொய்யா நல்லோர்கள் செய்யும்வித்தை
காட்டிட வேண்டாஞ்சொன்னேன் கைமுறை குருவைக்கேளே. (36)

கேளப்பா மவுனமாலை கெணேசன்முன் னுகவோதில்
தேளப்பா மாரணங்கள் செவ்வையாய்ச் செபித்தாயானால்
கோளப்பா வியாதிதீரும் கூடின வுறவும்போகும்
நாளப்பா மோகத்தோடு நளினமா யெட்டெங்காணே. (37)

காணவே கேட்டதெய்வம் கன்னிமார் சிவாலயங்கள்
பேணவே மாதா அய்யன் பிடாரிகள் நிலைத்தவண்ணம்
ஊணவே லெட்சமோதில் உக்கிர மாகவந்து
தோணவே யாடும்மைந்தா ருக்ஷத்தைப் பாருபாரே. (38)

பார்த்திடும் போதுவுன்னைக் கண்டவர் பணிவார்சொன்னேன்
காத்திடும் நாளெட்டுக்கும் கக்கிஷம் திரும்பவாங்கிச்
சேர்த்திடும் பதியிற்றானும் செபிவசிய தம்பனங்கள்
கோர்த்துநீ செபித்தாயானாற் குபேரன்றன் பொருளுண்டாமே (39)

உண்டாகும் வாதவித்தை உதையமா மதமேபொங்கும்
தண்டாகும் பிரிவுமோகம் தம்பனந் தாக்கில்காந்தல்
விண்டாகும் வசியவித்து வேஷண முள்நின்றாடும்
திண்டாகும் பேதமோகம் செபித்திட வினையமாமே. (40)

ஆகுமா ரணமுந்தம்பம் அறவிழி பிசாசொடுக்கும்
ஆகுமா ரணமுந்தம்பம் ஆகிரு ஷணமுமாகில்
ஆகுமா ரணமுந்தம்பம் ஆகிரு ஷணமுமோதில்
ஆகுமே யெதிர்நின்றாடும் அறிவுடன் தாக்குவாயே. (41)

தாக்கும்வசீ கரமும்மோகம் சகலரும் வணங்குப்பாரு
நோக்கும்தம் பனமும்மோகம் றுதலழ குண்டாம்பாரு
வாக்கும்பே தனமுந்தம்பம் வசீகர மூன்றுமோதில்
பார்க்கும்பேர் பேசமாட்டார் பார்தனில் விள்ளொணாதே. (42)

ஒண்ணாதே யார்க்குந்தானும் உரைத்திடில் நசித்துப்போவாய்
கண்ணான பேர்க்குந்தானும் கக்கிஷ மீயவேண்டாம்
பண்ணான சிவன்மேலாணை பார்வதிதேவியாணை
விண்ணான தேவராணை வேதமா லாணைபாரே. (43)

பாருமே ஆணையிட்டுப் பாருளோர்க் கீந்தாயானால்
சேருமே வெகுபாவங்கள் செந்தணற் போலேசூழும்

ஊருமே புழுவாய்ப்போவான் உண்ணவுங் கிடைக்கமாட்டா
பேருமே கருமஞ்சூழும் பிறர்களும் நகைத்தவாறே. (44)

வாறுகேள் சாகரன்றே வசியமெட் டெட்டுவித்தை
தேறுகேள் செய்யநன்றே சிவசிவா சொன்னேன்சாபம்
கூறுகேள் வாசிமூலன் குண்டலி முப்பாழ்தாண்டிப்
பேறுகேள் மவுனம்வைத்துப் பிழையுங்க ளறியாதென்னே. (45)

யென்னவே யிந்தநூலை யெடுத்துநீ பார்க்கவேண்டாம்
சொன்னதே தென்றால்மைந்தா துடுக்கதா யிந்தவித்தை
பன்னவே யகாரம்நோக்கிற் பந்துபோ லெழுந்துபத்தும்
கன்னவே சொல்லிச்சொல்லிக் கர்வியும் பதனஞ்செய்யே. (46)

செய்வது உலகுக்குள்ளே சிவசத்தி வடிவன்பூசை
செய்வது யில்லையாகிற் சிவசம்பு வாணைசாவாய்
செய்வது பதனஞ்சொன்னேன் சிவன்தான் போகும்போது
செய்வது குகைக்குட்சென்றால் சிவசிவா மோட்சந்தானே. (47)

மோச்சமும் புகழுமுண்டாம் மூடுவமூ பிறவிதோறும்
சூச்சமுந் திருவுந்தோணும் தொடுத்தவன் கிஷத்துக்கெல்லாம்
மாச்சலு மில்லையில்லை மரணநற் சாவுண்டாகும்
பேச்சது புகழுஞ்சொல்வார் பிரமறி யாமலீயே. (48)

ஈய்வது சமயமில்லை யென்றபோ துரைக்கக்கேளு
கூய்வது சுவடிதன்னைக் கூர்மையாய்ச் சீவிசீவி
ஆய்வது பூமிதானும் அடக்கிடு மக்காள்மோட்சம்
ஓய்வது யிந்தநூலை ஒருவர்கா ணாமற்செய்யே. (49)

செய்யவே குருவைக்காட்டிற் சிறந்துபார் வித்தையெல்லாம்
செய்யவே சொன்னேன்மைந்தா தெளிந்துபூ ரணத்தைநோக்கிச்
செய்யவே யில்லாவிட்டாற் சிவசிவா நடுக்கமெத்த
செய்யவே நடுக்கம்வேண்டாம் சீர்மேகம் பொழிந்தவாறே. (50)

பாறான யீசன்சத்தி வடிவுக்கு ளேதோவென்னிற்
கூறான தேகஞ்சத்திக் குள்ளுயிர் வாய்வேயீசன்
வேறான ரெண்டுமொன்றாய் நிலைத்திடிற் சித்திமுத்தி
பேறான கக்கிஷத்தைப் பிடித்தவர்க் காளுங்காணே. (51)

காணப்பா மவுனத்தின் வீடுதன்னைக்
காட்டுகிறேன் மன்றாகக் கேளுகேளு
பூணப்பா அகாரத்தைக் கீழேதூக்கிப்
புரிந்துநின்ற உகாரத்தை மேலேசேர்த்து
ஊணப்பா மகாரத்தின் நடுவேசென்று
உத்துப்பார் கேசரியாஞ் சுழினைவீடு
தோணப்பா ரவிகோடி ஒளியதாக்கு
துக்குமிகா தங்களங்கே முழங்குந்தானே. (52)

முழக்கமாய் நயனம்மூடி முழிக்குளே கருக்குமென்று
வழக்கமா யீசன்சத்தி மவுனத்தின் வீடுசொன்னேன்
பழக்கமாய்ச் செய்யவேணும் பத்தியா யாதியாதம்
கழக்கமாய்ச் செய்யவேண்டாம் கண்ணொளி விள்ளொண்ணாதே. (53)

ஒண்ணான சிவனுஞ்சத்தி யுள்நின்று நடனமாடும்
கண்ணான பொருளென்றெண்ணிற் காட்டினிற் புழுத்துச்சாவாய்
விண்ணான வெளிபோல்வட்டம் விளக்கொளி மின்னுந்தீபம்
பண்ணான தருளேமோட்சம் பத்தியா யுத்துப்பாரே. (54)

பாரப்பா உத்துஉத்துப் பார்க்கவே வொளிதான்பாழாம்
சேரப்பா பத்திமுத்தி சித்தியுங் கொடுக்கும்பாரு
காரப்பா யிந்தப்பாடல் கக்கிஷச் சூட்சமெல்லாம்
நேரப்பா உண்மைசொன்னேன் நீயுமிந் நூலைப்பாரே. (55)

சுப்பிரமணியர் ஞானக் கக்கிஷம் ருரு

முற்றிற்று.



சத்திகிரி சிவகிரி திருவாவினங்குடி யெனத்தழைத்தோங்கும்திருப்பழனிமலையிலெழுந்தருளிய ஸ்ரீகைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீனஆச்சிரமம் ஆதீன மகாகைலாசபரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீகைலாச தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்துவாங்கிய எட்டுப்பிரதிபின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

கடவுள்துணை.

இருபத்தோன்பதாவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# சுத்த ஞானம்.



ஆதியும் நடுவுமாகி யந்தமு மனாதியாகி
அண்டமும் பிண்டமாகி யருவமு முருவமாகிச்
சோதிமுச் சுடருமாகிச் சொற்குறி குணமுமாகிச்
சொல்லொணாப் பிரமமாகிச் சுத்தநின் மயமதாகி
நீதிநா தாந்தமாகி நிலத்துள வஸ்துவாகி
நிட்களமும் நிராமயமும் நீங்கா தாகி
ஓதுவே தாகமங்கள் சமைய கோடி
உட்புறமு மொன்றானாள் பாதங் காப்பே.

சீரப்பா ஆகாயப் பெருமைசொல்வேன்
செப்பார்கள் ஜெகந்தனிலே சித்தரெல்லாம்
ஆரப்பா என்னைப்போற் சொல்லப்போறார்
ஆதியந்த மிரண்டுமொன்று யறியச்சொல்வேன்
பேரப்பா கங்குல்பகல் திடமேயாச்சு
போராக வந்ததுவே அகாரமாச்சு
சேரப்பா இதுவல்லோ ஞானமாச்சு
செப்பாமற் சித்தரெல்லா மறைத்திட்டாரே. (1)

மறைத்திட்ட பொருளெல்லாம் வெளியாய்ச்சொல்வேன்
மாசற்ற பூரணத்தின் மார்க்கங்கேளாய்
உரைத்திட்ட நிற்குணத்தின் வெளியினாலே
உத்தமனே வாயுவென்ற உறவுமாச்சு
திரைத்திட்ட மாகிநின்ற அக்கினிக்குள்
ஜெலமாச்சு மண்ணாச்சு மிருகமுமாச்சு
கரைத்திட்ட மாகிநின்ற வாருதிக்குள்
ண்காலி தென்றலுமாய்க் கலந்தவாறே. (2)

கலந்துநின்ற இருண்டவெளி வானம்முட்டிக்
கைலாய மென்றவொரு காமமாச்சு
மலர்ந்துநின்ற மூலமென்ற வட்டந்தானே
வளமான பிர்மாவின் லோகமாச்சு
செலந்திரண்ட அப்பதுவே சிகையாய்நின்று
திறமான விஷ்ணுவுட லோகமாச்சு
குலந்திரண்ட சுக்கிலத்தால் மூன்றுலோகம்
குறிப்பாகச் சொல்லிவிட்டேன் குவிந்துபாரே. (3)

பாரப்பா யிந்தவட்ட மூன்றுவிட்டிற்
பரிவாகச் சொல்லுகிறேன் னன்றாய்க்கேளு
நேரப்பா மும்மூர்த்தி பிறந்திறந்தார்
நீதியுள்ள பெரியோர்கள் பிறந்திறந்தார்
வீரப்பா தேவதைகள் பிறந்திறந்தார்
மேதினியில் மனுமாந்தர் பிறந்திறந்தார்
சேரப்பா யானைமுத லெறும்பனந்தம்
செடியெல்லாம் முளைத்தெழுந்து திரண்டவாறே. (4)

வாறான உலகத்தில் மனுக்களெல்லாம்
வரிசையுட னுண்டுடுத்தி மயக்கஞ்செய்வார்
மாறான பாவங்க ளனந்தஞ்செய்வார்
வரிசையுட னெட்டெழுத்தின் வகையுங்காணார்
பேறான சிவயோகப் பெருமைகாணார்
பேருலகில் மனுவென்று பேருஞ்சொல்வார்
கூறான ஓரெழுத்தின் கூத்தைக்காணார்
குறியாகச் செபஞ்செய்வார் குருட்டுமாடே. (5)

மாடென்று லோர்நினைவா யிருக்குமப்பா
மனிதருக்குப் பலபுத்தி மாயையுண்டு
வீடென்றால் துணையிருக்கும் சுவானமானால்
வீடின்ன இருள்கண்டால் குலைத்துக்கொள்ளும்
காடென்றால் வெகுவுயிர்கட் குதவியுண்டு
கானலிலே போவார்க்கு நிழலுமுண்டு
மேடென்றால் வெகுதூரந் தோணச்செய்யும்
மெய்யுள்ளோ ரிவ்வளவும் விரும்பார்தானே. (6)

விரும்பென்றால் விட்டகுறை அடிக்கவேண்டும்
வெகுகாலம் பெரியோர்க ளிரங்கவேண்டும்
கரும்பென்று இனிக்குதோதான் கருத்தினுள்ளே
சுரும்[illegible] ரசை யின்பங்காணும்
பெருங்காசை யறியவென்றால் கிண்ணைப்பார்த்தே
பேறுமேவார் பெரியோர்கள் பதனஞ்செய்வார்
அரும்பாருங் குழல்மடியாள் சிவனுங்கூட
அகத்தியருஞ் சொன்னதில்லை யறிந்துபாரே. (7)

பாரப்பா யான்செய்த படியேசொல்வேன்
பார்விகம்பின் பெரியோர்முன் பகரக்கேளாய்
நேரப்பா உச்சியென்ற வட்டமீதில்
தெளிவாக ஓங்கார பீடமென்றும்
வாரப்பா அகாரமென்ற வெழுத்தைதுன்றி
வாவாவென் றேசொல்லி மனத்தினுள்ளே
கூரப்பா விதையறிந்து பூசைசெய்தேன்
குருபரன்றான் எனக்குபதேசித்தவாறே. (8)

உபதேச மனமாக அறிவுமாக
உற்றுணர்ந்து பார்த்ததினால் வெளியுமாக
தபதேச முச்சியிலே மார்க்கஞ்சொல்லச்
சதாசிவனு முன்பின்னாய்த் தயங்கினின்றார்
சிபதேசங் கற்குல்பகல் திடத்தைச்சொன்னேன்
சித்தையுள்ளே தெளிந்தமுறை செப்பலுற்றேன்
அபதேச மாந்தர்களெப்போய்ப் பூசைசெய்து
அலைந்தார்க ளருநெறி யழுந்தினாரே. (9)

அழுத்தமுள்ள யோனிக்குள் அழுந்திக்கொண்டு
அழும்புமிகச் செய்வார்கள் அகத்தையாக
வெளுத்தவெள்ளை பொய்யென்று காவிகட்டி
மேதினியில் மிலேச்சர்களே விரும்பிக்கேளீர்
பழுத்தபழம் போலிருக்கப் பருவமேது
பாராபரனை அறியாத பாவிமாரே
கழுத்துதனில் மேலாறுக் கப்பால்நின்ற
கைலாச வெளியதனைக் கண்டுதேறே. (10)

கண்டுடனே மனந்தேறுங் காட்சிகாணும்
கைலாசந் தான்முழுதும் காணியாகும்
வண்டுடனே ஊறுமந்தத் தேனுஞ்சிந்தும்
மாசற்ற ரவிகோடி காந்திகாணும்
தெண்டுடனே நின்றதோ ரெழுத்துங்காணும்
சிவசிவா பூரணத்தின் திறத்தைக்காணும்
பண்டுடனே உன்மனதே சேர்ந்ததானால்
பராபரனே நீயாவாய் பரிந்துபாரே. (11)

பரிந்துநின்ற கேசரியின் மையங்காணப்
பண்புடனே புருவமத்தி பாருபாரு
விரிந்துநின்ற தாருத்திதனை யூதும்போது
மேல்நோக்கி வாயுவது வெளியிற்சேரும்
அரிந்துகொண் டந்தமுறை செய்வாயானால்
அரனருளை நீயறிவா யறிவுள்ளோனே
தெரிந்தபடி யான்சொன்னேன் செகத்திலோரே
தேருட்டா லொன்றுமில்லை தெளிந்துபாரே. (12)

தெளிந்துநின்ற மேலாறின் வகையைக்கேளு
திறமுடனே நாசிநுனி நடுவேபாரு
சுழிந்துநுனி தீபமது போலேகாணும்
துடியிடையாள் ஞானசக்தி யுச்சிமேலே
மொழிந்துநின்ற தசநாதம் பத்துவிதங்கேட்கும்
முன்னணையில் ரவிகோடி காந்திதோணும்
பிழிந்தரசம் போலமதி யமிர்தமுண்டு
பேரான வெட்டவெளி காணும்பாரே. (13)

காணப்பா மேலேபதி மூன்றும்வீடு
கருகுல்பக லற்றவிடங் காலாம்வீடு
ஊணப்பா இதனுள்ளே மனத்தையுன்ன
உத்தமனே ஒன்றுமில்லை வெளியுமாச்சு
பூணப்பா ஓரெழுத்தும் அதுவேயாச்சு
புகழுள்ள ஐம்பத்தோ ரெழுத்துமாடும்
வீணப்பா மனம்போச்சு நினைவும்போச்சு
மெய்ஞ்ஞான வீடதனில் மேவும்போச்சே. (14)

மேவுவதோர் மனத்தாலே தவமுமாச்சு
வேதாந்த நாதாந்த மிரண்டுமாச்சு
கூவுவதோர் சொல்லடர்ந்த விடமுமாச்சு
குண்டலியாள் ஞானசத்தி மனையுமாச்சு
பூவுவதோர் வாசியென்ற மலருமாச்சு
புருவமையம் நின்றசுழிக் கதலியாச்சு
நாவுவதோர் கலைக்ஞான மநேகநூற்கள்
நால்வேத மாறுசாஸ் திரமுமாச்சே.

ஆச்சப்பா மூச்சற்று முனையுமற்று
அடிமுடியு மிரண்டற்று அகிலமற்று
வாச்சப்பா அல்லுமற்றுப் பகலுமற்று
வண்மையுள்ள வானற்று வெளியுமற்றுப்
பேச்சப்பா இருளற்றுப் பேதமற்றுப்
பெண்ணற்று ஆணற்று அலியுமற்றுப்
பூச்சப்பா என்றவொரு மகிமையில்லை
புலனில்லை புகழில்லை புலியோரே.

புலியோரே இவ்வளவு மற்றுநின்றால்
புண்ணியவா னென்னப்பன் நந்தியீசர்
கலியோரே வகைவகையாய்த் தமிழைக்காட்டிக்
காரணத்தைக் கண்டவர்போற் கருதிக்கொள்வீர்
குவியாத மனத்தாலே தவமோயில்லை
குவித்திருந்தா லருளாடுங் குறியுமுண்டு
தவியாத மனத்தாலே மயங்கிநின்று
சற்குருவின் பாதத்தை வணங்கிநில்லே.

வணங்கிநின்றா லுபதேசம் முன்னேசொல்லி
வலமிடமா யேறுகின்ற பாதைகாட்டி
இணங்கிநின்ற குருபரனின் மையங்காட்டி
யெல்லோரு மடங்கிநின்ற பாதைகாட்டி
புணங்கிநில்லா நிர்க்குணத்தின் பூசைகாட்டிப்
புகழ்பெரிய வேதாந்த சாரங்காட்டி
குணங்கிநின்று வாடாமல் அறிவிலேற்றக்
கூசாப லுபதேசஞ் செப்புவாரே.

செப்புவதோ ரறிவாலே மனமேதேறிச்
சிறுபிள்ளாய் ஞானத்தின் தெப்பமேறி
உப்புபடி யொன்றுசலம் படிதானென்று
உண்மையுடன் கலந்திருந்தா லொன்றேயாச்சு
அப்புடனே மண்கலந்த அகிலம்போலே
அண்டத்தில் மனம்நின்றால் வெளியுமாச்சு
தப்புமேற் கோலடித்த தொனியைப்பாரு
தாசர்களே இக்கருவை விண்டபாரே. (19)

விண்டவுடன் உருவமில்லை அருவமில்லை
வேதாந்த நாதாந்த மிரண்டுமில்லை
கண்டவுடன் காட்சியுண்டு கருமமில்லை
கசடற்ற விடமப்பா கண்டுபாரு
அண்டர்கோ னெனைப்போலே யிருந்தாரையா
அழியாத குருமூர்த்தி அறிவுள்ளோனே
வண்டாருங் குழலுமையென் மனமேதயாகி
வடிவாகி வீற்றிருந்த வண்மைகேளே. (20)

வண்மையிலு மிச்சமப்பா தயவுமுள்ளான்
வளமான வாசியதா யிருந்தாளாத்தாள்
பெண்மையிலும் ரூபமிது பெருகச்சொல்வேன்
பேயரோ யிதையறிந்து பேணிக்கூடு
தண்மையுடன் சுழிமுனையாம் வழியினுள்ளே
சற்குருவின் பதம்போற்றி நிலையில்நில்லு
வண்கையிலுந் தூலமென்ற ரூபந்தன்னை
வளமாகச் சத்தியென்றே வசனிப்பாரே. (21)

வசனிப்பா ராதியந்த மறியாமற்றான்
வழக்குரைக்கு மனுப்பதரே வரிசைகேளு
நிசனிப்பா ராகாய வாயுந்தானே
நிர்மலமாய் நிராமயமாய் நேரேநின்று
விசனிப்பார் தூலமதை விரும்பிக்கொண்டு
வீணர்களா யருநரகில் மூழ்கிநின்று
கசனிப்பார் யோனிதனை மானமென்று
கட்டுமிகச் செய்துநன்றாய்க் காப்பார்தானே. (22)

காப்பார்கள் வாசலிலே யானைவைத்துக்
கருவான நரகமதை மூடிவார்கள்
சேர்ப்பார்கள் திரவியத்தை அனந்தமாகச்
சேட்டைமிகச் செய்வார்கள் செகத்தினோர்கள்
ஏர்ப்பார்கள் குடித்தனமும் நிசமேயென்று
இறங்குவார் நாற்றமென்ற குழியைநம்பி
பார்ப்பார்கள் மோகமென்ற முகமுந்தன்யம்
பசப்பென்ற வுடல்நடையைப் பத்துவாரே. (23)

பத்துவார் மனமயங்கி மயக்கங்கொண்டு
பலகாலும் சாஸ்திரங்கள் பார்த்திருந்தும்
சுத்துவார் சுணங்கனைப்போற் பிலுக்கிக்கொண்டு
சுடுகாட்டிற் போகுமட்டுந் துடர்ந்துபோவார்
கத்துவார் கழுதையைப்போற் பெண்டுசெத்தால்
கருவறியா மானிடர்க்குக் கருணையேது
எத்துவார் தத்துவங்கள் மிகவேபேசி
ஏந்திழையை மயக்குதற்கே இருப்பார்தானே. (24)

இருப்பார்கள் மோகமும்விட் டொழிந்தேனென்று
இகத்திலே சித்தர்செய்யு மிகத்தாளங்கேள்
பருப்பார்கள் புசிப்புமிக வசனம்பண்ணிப்
பாருலகிற் சடைகட்டி வேடம்பூண்டு
அருப்பார்கள் மங்கையைத்தான் கழுத்தைக்கட்டி
அழுந்துவார் நாற்றமென்ற குழியைநம்பி
வெறுப்பார்கள் ஞானமதைக் கசப்பாயெண்ணி
விரும்புவான் மாயமென்ற பிரபஞ்சத்தே. (25)

பிரவஞ்ச வாதிகளே சொல்லக்கேளீர்
பேருலகில் நாதவிந்து வுப்பின்வித்தை
திரவஞ்சி ஓங்காரி ஈன்றவித்து
திரிகோண மௌனத்திற் பிறந்தவுப்பு
பரவஞ்சி வுப்பைவிட்டால் வாதமில்லை
பலவிதமாய்ச் சரக்கென்று பகர்வார்மூடர்
வரவஞ்சி வேதாந்த வாலைபூசை
மறைவாகச் செய்துகொண்டு வருந்திப்பாரே. (26)

வருந்தாமற் சூதமென்றுங் கெந்தியென்றும்
வளமான சவுக்காரம் சாரமென்றும்
திருந்தாமல் நின்றதொரு லிங்கமென்றும்
திறமுள்ள பாஷாணத் துருசியென்றும்
பொருந்தாமல் நின்றதொரு துத்தநாகம்
புகழ்பவளக் கால்மனோ சிலைதானென்றும்
மருந்தாக இந்துப்பு வெடியுப்பென்றும்
மகத்தான வளையலென்றும் வழங்குவாரே. (27)

வளமான வயித்தியங்கள் செய்யும்பேரே
வண்மையுடன் மருந்துவகை சொல்லக்கேளீர்
பளபளென நின்றதொரு மெய்யினுள்ளே
பருங்குமரிக் கெந்தகந்தா னிருந்துதப்பா
களவாக இந்தவகை மருந்துகொண்டால்
கருவான நோய்களெல்லாந் தீரும்தீரும்
உளதான படிசொன்னே னுலகத்தோர்க்கு
உத்தமனே இந்தமுறை யுரைத்துப்பாரே. (28)

உரைத்துநின்ற காயசித்தி யாகத்தேகம்
உத்தமனே சொல்லுகிறேன் கற்பமார்க்கம்
மறைத்துவைத்த வழலைதனைத் திறந்துவிட்டேன்
மதியமிர்த மானகற்ப மள்ளியுண்ணு
திரைத்துமே நின்றதொரு தேகஞ்சித்தி
செகமறிய யோகசித்தி வாசிசித்தி
விரைத்துவிட்டே னமிர்தத்தை யள்ளியள்ளி
மெய்ஞ்ஞான கற்பமிது மேவிப்பாரே. (29)

மேவியதோர் சமாதிதனைப் பாடிப்போட்டேன்
மேதினியில் மனுப்பதர்கள் சமாதிசெய்வார்
கூவியதோர் சொல்லடர்ந்த இடத்தின்மேலே
கூற்றன்நின்ற வாசனத்துக் கப்பாலேகித்
தாவியநா லெழுத்துமோ ரெழுத்தேயாகிச்
சக்கரம்போ லோங்கார வட்டத்துள்ளே
ஏவியதோர் வெளியதனிற் கலந்திருந்தால்
எந்நாளுஞ் சமாதியது நிலைத்துப்பாரே. (30)

நிலைத்துநின்ற அஷ்டாங்க மாடச்சொல்வேன்
நீதியுள்ள வோரெழுத்தை யறிந்துணர்ந்தால்
மலைத்துகர்ம மெட்டும்வாய்ப் பேச்சிலாடும்
மைந்தனே இந்தமுறை வணங்கிப்பாரு
கலைத்துநின்ற மனங்கெட்டி யுறுதியாகுங்
கைலாயங் காணியுமாங் கண்டுதேறு
அலைத்துநின்ற தேகமது சொர்க்கமாச்சு
அப்பனே யிதுவல்லோ ஞானமாச்சே. (31)

மாச்சென்ற வேதமதைச் சொல்லக்கேளு
மனவெளிதான் கடந்தப்பு வெளியேயாச்சு
வாச்சென்ற தெய்வுவெளி மேலேயப்பா
வாயுவெளி யாகாய வெளியின்மேலே
பாச்சென்ற ஞானக்கண் அகாரவெளியாச்சு
பண்பான ஓங்கார வெளிச்சிகைமேலேறி
காச்சென்ற ஞானமென்ற சுழலாம்வீட்டிற்
கரையற்ற தொன்றுமில்லா வெளியும்பாரே. (32)

பாரப்பா இதுவல்லோ தெய்வமாச்சு
பார்தனிலே பெரியோர்கள் மறைத்துச்சொன்னார்
நேரப்பா இந்தமுறை வணங்கிப்பாரு
நேர்மையுள்ள வெட்டவெளி காணலாகும்
ஆரப்பா எனைப்போலே சொன்னாரில்லை
ஆதியந்த மிரண்டுமொன்று யறிந்துசொன்னேன்
காரப்பா உச்சிநின்ற வாலைதன்னைக்
காண்பிப்பா ளெட்டாத வெளியைத்தானே. (33)

வெளிதானே நீயாகி இருந்தகாலம்
மேதினியி லுயிரெல்லாம் நீயேயாச்சு
விழிதானே உயிராகி யுடலுமாகி
வேதமது சாத்திரமுந் தானேயாகி
மொழிதானே நாதமது விந்துவாகி
மும்மூல வட்சரமும் மூலமொன்றாய்ச்
சுழிதானே மாலாகி யரனுமாகிச்
சுந்தரியாள் நின்றபடி சொல்லொண்ணாதே. (34)

சொல்லொண்ணா மந்திரத்தைச் சொல்லப்போமோ
துறந்துவிட்டாற் றொல்புவியிற் றுயின்றோர்பாவி
நில்லொண்ணாப் பேயர்களுக் குரைக்கொண்ணாது
நீதியுள்ள பெரியோருக் குரைக்கவேணும்
கல்லொண்ணா மடையருக்கு விள்ளொண்ணாது
கருத்தில்லாச் சீஷருக்குக் காட்டொண்ணாது
செல்லொண்ணா மனுப்பதர்கள் ஞானம்பேசி
செகத்தினிலே நாய்போலத் திரிவார்பாரே. (35)

திரிகின்ற வாய்ஞானத் திருடரப்பா
செகத்திலே பெண்கள்தனை மயக்குவார்கள்
பரியென்ற குதிரையைப்போல் நடந்துகொண்டு
பார்சுற்றி வந்தனென்று பசப்புவார்கள்
குரியென்ற குணங்காணார் கோயிற்காணார்
குருக்களென்று பெயரிட்டுக் குறிப்பேசொல்வார்
அரியென்ற வெழுத்துமுத லெழுத்துங்காணார்
அனுஷ்டானம் பூசையென்று அலைவார்பாரே. (36)

அலைந்தலைந்து பூவெடுத்து நேமஞ்செய்து
ஆறுதனில் மணல்பரப்பிப் பலகைமீது
விலையென்ற வஸ்திரத்தை மடித்துவைத்து
மேதினியில் வண்டினுட பட்டைச்சாத்திச்
சிலையென்ற கல்லதனை லிங்கம்பண்ணிச்
சிலையின்மேல் வைத்துமிகச் செபங்கள்செய்வார்
குலையென்ற புட்பமதைக் கொண்டுநித்தம்
கொடிதாகப் பூசிப்பார் குருடர்தானே. (37)

குருடர்தா னானாலும் புத்தியுத்தி
குறித்தந்த நினைவாலே கூடிப்போவார்
திருடர்தா னானாலுங் கன்னக்கோலால்
திறமுள்ள மனைசென்று களவுசெய்வார்
கெருடன்று னானாலும் அறிவைப்பற்றிக்
கெதியுள்ள திருமால்வா கனமுமாச்சு
நெருடன்று னானாலும் பாட்டைக்கற்பான்
நேர்மையுள்ள ஞானமதைக் காணார்தானே. (38)

காணாத வுலகத்தா ரலைந்துகெட்டுக்
கண்மூடி யிருப்பார்கள் பெரியோர்போலக்
கோணாத சிவனதை யெய்துமெத்தக்
குலதெய்வம் கும்பிடுவோ மென்பார்பாவி
தோணாத சாஸ்திரத்தை நிசமேயென்று
தொல்புவியி லலைவார்கள் தோழிமாந்தர்
பூணாத பணிதியெல்லாம் பூண்டுகொண்டு
புண்ணியவான் போலமிகப் புலம்புவாரே. (39)

புலம்புகின்ற சங்கமரே லிங்கங்கட்டி
புலித்தோலின் மேலிருந்து வசனஞ்சொல்வீர்
சிலம்புகளை விருதென்று காலிற்கட்டிச்
சிகைச்சடையைக் கட்டித்தாழ் வடமும்பூண்டு
பலம்பெறவே காவிகட்டி யோகதண்டும்
பட்டையது மேற்போட்டு நடக்குமாடே
அலம்புகின்ற வரைக்குடமே யலைந்துகெட்டாய்
அருமையுள்ள ஞானமதை யறியார்தாமே. (40)

அறியாத மடையர்களே சோகியாண்டி
அகந்தையாய்க் கல்லதனைப் பூசைசெய்வீர்
குறியாத வேடங்கள் மிகவேபூண்டு
கூசாமற் பரதேசி யென்பார்பாவி
தெரியாத விண்ணதனைப் பார்த்தாயானால்
திருடர்களே வுங்களுக்குத் திறங்களேது
பிரியாத மனமறிந்தாற் றெய்வங்காணும்
பேதையரே யிதைவிட்டுப் பிழைக்கின்றீரே. (41)

பிழைக்கின்ற சைவர்களே சொல்லக்கேளீர்
பேருலகிற் சிவபூசை தானஞ்செய்வீர்
கழைக்கின்ற உன்னுயிரை மாற்றிவைத்துக்
கைதனிலே மணியையெடுத் தசைப்பாய்பாவி
தழைக்கின்ற உன்குலமே அழிந்துபோகும்
தம்பிரான் மாடுகளே சவங்கல்மாடே
துழைக்கின்ற தும்பியைப்போ லறிந்தாயானால்
தொல்புவியில் முத்தியுண்டு தோய்ந்துபாரே. (42)

தோய்ந்தறியா வைணவரே ஐயாகேளீர்
சொன்னமொழி மறவாத நாமத்தோரே
ஈய்ந்துநின்ற நாமத்தின் விபரங்காணீர்
இருதயமாய் நின்றதொரு வுயிரைக்காணீர்
காய்ந்துநின்ற ஞானக்கண் விபரங்காணீர்
கருந்துளசி பூண்டுமிகக் கதறுகின்றீர்
தேய்ந்துமிகப் போவதற்குப் பாடஞ்செய்வீர்
தெளிவாக வுங்கள்மனம் தேரீர்தானே. (43)

தேருத சன்யாசி யென்றுசொல்லிச்
செயங்கொள்ளப் போறவர்போற் றிரிவான்மட்டை
கூறுத பேச்செல்லாங் கூறிக்கொண்டு
குடியானோன் வாசலிலே காசுகேட்பான்
பாராத வபிமானந் தெரியச்செய்து
பலவிதமாய்க் கோலங்கள் பண்ணிக்கட்டிச்
சோராத பெண்கள்தனைச் சேர்ந்துநித்தம்
சேட்டைமிகச் செய்வர்செத்த சவமதாமே. (44)

செத்தசவம் அந்தணரே செப்பக்கேளீர்
செகத்திலே உங்கள்நெறி பெரிதாமென்பீர்
சுத்தவர்போல் மிகப்படித்துக் கல்விபேசிக்
காசினியி லாறுதனில் ஸ்நானஞ்செய்வீர்
சித்தமதை யறியாமற் பூசைசெய்வீர்
திருடர்களே உங்களுக்குச் செபங்களேது
பித்தர்களே சாதியினிற் பெரியோரென்பீர்
பித்தவுடல் விண்ணுமோ பேணிப்பாரே. (45)

பேணியென்ற மகமதிய மார்க்கத்தோரே
பேருலகில் நீங்களெல்லாம் வேதஞ்சொல்வீர்
காணியென்ற பூமிமுட்டிக் கால்மடித்துக்
கைநீட்டிக் கண்காட்டிக் கத்தும்பேரே
பாணியென்ற தெய்வமதைக் கண்டதுண்டோ
பகருகின்ற சொல்லுண்டோ பட்சமுண்டோ
கேணியென்ற யோனிதனில் மயங்கிநின்று
கெதியான அறிவதனைக் கேளாய்தானே. (46)

கேளாத ஏசுடைய வேதத்தோரே
கேள்வியினாற் சொல்லுகிறேன் நன்றாய்க்கேளும்
பாளான நெற்றிதனைப் பெரும்பாழ்பண்ணிப்
பரிசுகெட்ட முகத்தோரே பாவிமாரே
கோளான வேதமதை நிசமேயென்று
கூறுகிறீர் மெய்ஞ்ஞானம் வந்தாப்போல
மாளாத வுயிராலே அபயம்போட்டு
மாறுகிறீர் வெகுதூரங் கேட்கத்தானே. (47)

கேளப்பா ஐந்தெழுத்தும் நீயேயாச்சு
கேசரத்தின் மேல்நின்ற வெளிநீயாச்சு
பாளப்பா மற்றதெல்லாம் ஒன்றுமில்லை
பண்புடனே சொல்லுகிறேன் பாரினோரே
வாளப்பா மனமென்ற சஞ்சலத்தால்
மயங்கிநின்று போகாதே மைந்தாகேளு
சோளப்பா சாஸ்திரத்தைப் பார்க்கவேண்டாம்
குறியான வேதமதைப் பாருபாரே. (48)

பாருநீ யென்னப்பா புத்தியெல்லாம்
பரனாதி பரையந்த மிரண்டுங்காணும்
பூருநீ வாசியென்ற குதிரையேறிப்
பூலோகஞ் சிவலோக மிரண்டுங்காட்டும்
பேருநீ பேருபெற்றாய் ஐயாகேளு
பேருலகில் மனுப்பதர்க ளுனக்கீடில்லை
தேருநீ மௌனத்தைத் தெளிந்துபாரு
செகமெலாந் தானாகி யிருந்தாய்காணே. (49)

காணவே கோயிலென்றுந் தீர்த்தமென்றும்
காசினியில் மாவிளக்கு நைவேத்யமென்றும்
தோணவே திதியென்றும் விரதமென்றும்
தோணுமல் மாட்டுகிற விவாகமென்றும்
நாணவே கலைகட்டு மானமென்றும்
நல்லநிதி நிலமென்றும் மனையாளென்றும்
பூணவே யாபரணம் ஆடுமாடும்
புத்திரரும் பொய்யப்பா பொருந்திப்பாரே. (50)

பொருந்திநின்ற அடிவயிற்றில் நகாரம்நிற்கும்
புகழான வுந்தியின்மேல் மகாரம்நிற்கும்
வருந்திநின்ற நெஞ்சதிலே சிகாரம்நிற்கும்
வண்மையுள்ள கண்டத்தில் வகாரம்நிற்கும்
திருந்திநின்ற சிரசதனில் யகாரம்நிற்கும்
திரியமுது கண்ணிலுண்டு தெளிந்துபாரு
குருந்தியென வுச்சியின்மேல் வெளியாம்வீட்டிற்
கூத்தனுமே வீற்றிருந்த குணத்தைப்பாரே. (51)

குணமென்ற வாகாயந் தலையுமாகிக்
குறியுள்ள பூமியதே காலுமாகி
மணமென்ற மேற்கதுவே முதுகுமாகி
வளமான கிழக்கதுவே முகமும்கண்ணும்
சணமென்ற தெற்கதுவே வலக்கையாகிச்
சதிருள்ள வடக்கதுவே யிடக்கையாகிப்
பணமென்ற வாய்வதுவே சுவாசமாகிப்
பண்பான வெளியறிவா யிருந்தார்தானே. (52)

தானென்ற ஆதியிலே வெளியாய்நின்றார்
சாதியில்லை சமயமில்லை சைவமில்லை
வானென்ற வைம்பூத முயிருமில்லை
வரையில்லை செகமில்லை மனுவுமில்லை
பானென்ற ரவிமதியும் வாய்வுமில்லை
பகலில்லை யிரவில்லை பாருமில்லை
ஏனென்ற சொல்லுமந் திரமுமில்லை
எட்டெழுத்தி லோரெழுத்தா யிருப்பார்பாரே. (53)

இருப்பத்தோ ரடையாளஞ் சொல்லக்கேளு
இருதலைமா ணிக்கமிருந் திடத்திலேயே
சருப்பருந்த மதியமிர்தஞ் சிந்துஞ்சிந்தும்
சக்கரமா முக்கோணச் சதுரின்மேலே
பொருப்பாகுங் கைலாய வெளியின்வீட்டிற்
பொன்மதியுஞ் சூரியனும் விளக்காயேற்றி
விருப்பமுள்ள ஞானமதைச் சூட்சத்துள்ளே
வெறுவெளியாய் வீற்றிருந்த யின்பந்தானே. (54)

இன்பத்தி லிவனின்ப மொருவர்க்கில்லை
இகத்திலே யின்பமில்லை யியம்பக்கேளு
துன்பத்துக் காரப்பா இவனேயாகும்
தொல்லுலகி லாளில்லை சுத்தின்கோலம்
அன்பத்தோ ரெழுத்தெல்லா மோரெழுத்தேயாகி
அண்டபிண்டந் தானாகி யமர்ந்தநாதன்
எண்பத்து நாலுலட்ச முயிரேயாகி
எகமது தானாகி நின்றார்பாரே. (55)

நின்றிலங்குந் தன்னறிவே தேகமாக
நிச்சயந்தொண் ணூற்றோர்நாள் தியானஞ்செய்து
நன்றிலங்கும் வாயுவுமக் கினியுங்கூடி
நலமான வாகாய மூன்றுங்கூட்டி
மன்றில்நிற்கும் விந்துவது தானுங்கூடி
வளமான தொண்ணூற்றோர் நாளிற்பாய்ந்து
என்றிருக்கு மண்ணப்பு மிரண்டுங்கூட்டி
எகமெனும் மனதாலே யாச்சுதானே. (56)

ஆச்சப்பா கண்ணோடு செவியும்மூக்கும்
அண்டபிண்ட மிரண்டால்சோ டிசையுமாச்சு
வாச்சப்பா அஞ்செலும்புந் தூணதாக்கி
வளமான விட்டமஞ்சு மேலேபோட்டு
பாச்சப்பா நரம்பெல்லாங் கைகளாகிப்
பசப்புள்ள இரத்தமதே யாணியாகிப்
பேச்சப்பா வென்றதொரு தோலேதாள்வாய்
பெருமையுள்ள வீட்டில்பிர பலத்தைக்கேளே. (57)

கேளப்பா சிறுகுடலும் பெருங்குடலுமுண்டு
கெதியுள்ள கொழுப்பீரல் தானுமுண்டு
வாளப்பா பதினாறு வாசலுண்டு
மகத்தான விளக்கெட்டின் வகையுமுண்டு
வேளப்பா அஞ்சுகட்டு அரண்மனையுமுண்டு
மெய்யஞ்சு சிவமஞ்சு கன்னியுண்டு
ஏளப்பா வெழுமலமுந் தானேயுண்டு
ஏற்றமுள்ள ரோமமது முளைக்குந்தானே. (58)

முளைக்கின்ற தேகந்தான் வயிற்றில்நின்று
 மூன்றாறு நாளிருந்து பிறக்கும்போது
புளைக்கின்ற கீழேகால் நிழலேயாகிப்
 பொருமையுள்ள யோனிவழி பிறந்துதப்பா
கிளைக்கின்ற விருட்சமது போலத்தானுய்க்
 கெதியுடனே வளர்ந்திருந்து கேள்விசொல்லும்
தழைக்கின்ற செல்வனிருந் தவனுமீசன்
 தரித்திரவான் போலவிருந் தவனுந்தானே. (59)

இருந்திடுந் தேகமெல்லா மிறந்தபின் சிவமேயாச்சு
திருந்திட நின்றநந்தி திரும்பியும் பிறப்பானப்பா
பொருந்திடும் ஞானமின்றிப் போனவர் பிறப்பாரென்பார்
வருந்திடும் மறிவின்வித்தை மாயத்தைக் காணூர்தானே. (60)

மாயத்தைக் கண்டசித்தர் மதியதைப் பெருக்கிக்கொண்டு
காயத்தி லிருக்கும்போது கர்த்தனைக் கலந்துகொள்வார்
நேயத்தை விட்டபோது நேர்சிவந் தன்னிற்சேரார்
மாயத்தைக் கண்டுசூட்ச வாசியில் வாழுவாரே. (61)

வாழ்வதோ ரறிவாலே இரவிசந்திரன்
 வண்மையுடன் பிறந்திருந்த வகையைக்கேளு
கேள்வியதோர் மனத்தாலே விருப்பமாகிக்
 கெதியுள்ள சத்திசிவ மிரண்டுமாணூர்
கோள்வதோர் தூலத்தா லிறந்துபோச்சு
 குறியாகச் சொல்லுகிறேன் கூர்ந்துகேளு
நாள்வதோ ரனுதியிலே யொன்றுமில்லை
 நானென்றுந் தெய்வமென்றும் ரவியிலாச்சே. (62)

ஆச்சப்பா மூச்சதிலக் கினிபிறந்து
 அதின்பிறப்பு சிவமாகி விந்துவாகிக்
காச்சப்பா விந்துவது கருவுஞ்சேர்ந்து
 காரணமாய்ப் பூரணமாய்க் கலந்துநின்று
வாச்சப்பா சமுத்திரமுந் தெய்வமாச்சு
 வளமான வாயுவதாய் மகிழ்ந்துநின்று
பேச்சப்பா வெளியாலே பிறந்திருந்த
 பெருமைதனை யென்னாலே பேசொணாதே. (63)

என்னாலே பேசவுண்டு அறிவாரில்லை
இயம்புகிறேன் ஞானமென்ற வீதிதன்னைப்
பொன்னாலே மினுக்குகின்ற வொளியுமல்ல
பொய்யல்ல மெய்யல்ல புகழுமல்ல
தன்னாலே பிறந்திருந்த வுடலுமல்ல
சகலவுயி ரெடுத்துநின்ற வாயுமல்ல
சொன்னாலே யறிவுவருஞ் சுழுத்திக்கப்பாற்
றோற்றுமங்கே மெய்ஞ்ஞான வெளியுந்தானே. (64)

வெளியாகி நின்றதுவே வெளியாய்விட்டேன்
விளைவுள்ள புத்தியினால் மெய்யைப்பாரு
அழியாத பாதமதை யையாகேளு
அபத்தமாய்ப் போகாதே அறிவுள்ளோனே
தெளிவாகச் சொல்லுகிறே னறிவின்மார்க்கஞ்
சிரசின்மேல் நின்றுதப்பா தெளிந்துபாரு
வழியிதுதான் பெரும்பாதை அறிந்தாயானால்
மக்களே உங்களுக்கு முத்தியாமே. (65)

முத்திக்கு வித்தாகி விரையுமாவாய்
மும்மூல வட்சரமும் நீயேயாவாய்
பத்திக்கு உந்தனைப்போற் சித்தரில்லை
பராபரையும் பராபரனும் பட்சம்வைப்பார்
எத்திக்கும் பார்த்தாலும் நீயாய்க்காணும்
எல்லோரில் மிச்சமப்பா நீயேநந்தி
வத்திக்கு முன்னறிவு என்றென்றைக்கும்
மகத்தான பூரணமாய் மகிழ்ந்தாய்தானே. (66)

மகிழ்ந்துசிருட் டிப்பாய்சங் காரஞ்செய்வாய்
மாசற்ற தெய்வமதின் வடிவுங்காண்பாய்
மிகுந்துநின்ற முறையிதுதா னுரைத்துப்பாரு
விபரமுடன் சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
நெகிழ்ந்துநின்று போகாதே சீடாகேளு
நேர்மையுள்ள முறையிதுதா னிலைத்துச்சொன்னேன்
முகிழ்ந்துநின்ற அறிவாலே சொன்னவேத
முறையதனை யறிவாலே குவித்துப்பாரே. (67)

குவித்தறிவு வெளிதானே யாண்பெண்ணுகிக்
கூடியபின் சேய்பிறந்த விபரங்கேளு
செவித்தசலம் வழுவியதால் நாதவிந்து
செயமாகக் கலந்திருந்தால் பிண்டமாச்சு
புவிதலத்தில் முன்பிறந்தான் ருத்திரனேயாதி
பிறகல்லோ அனந்தமுயிர் பிறந்துதப்பா
தவித்தமறை சாஸ்திரத்தில் நிசஞ்சொல்லாது
தப்பாது என்வேதஞ் சாற்றினேனே. (68)

சாற்றினதோர் ஜெனனங்க ளெடுக்குமுன்னே
சகலவுயி ரான்மாக்கள் வெளியேயாச்சு
தோற்றினதோர் தேகங்கள் பிறந்திருந்து
தொல்விட்டுப் போறவுயிர் வெளியிற்சேரும்
மாற்றினதோ ருயிரும்வான் பிறப்பேயாகி
மதியுடனே வாழ்ந்தவிண்ணின் வரிசைகேளு
ஏற்றினதோர் சாதிகளை யிகழ்ந்துபேசா
தெல்லாருஞ் சரியப்பா யேகந்தானே. (69)

ஏகமது பிறக்கையிலே யிரவிதானும்
இகந்தனிலே பிரகாச மாகவேணும்
பாகமென்ற சோமன்வளர் பிறையாய்நின்றால்
பண்பாக நூறுவய திருப்பானப்பா
தாகமென்ற சூரியனு முதியாவிட்டால்
தனுவான சந்திரன்தேய் பிறையாய்நின்றால்
போகவுயிர் வழிபார்க்கும் வயதோகொஞ்சம்
பொருமையுடன் சொல்லுகிறேன் பொருந்திப்பாரே. (70)

பொருந்திநின்ற பெண்ணதுவும் ருதுவாங்காலம்
புடவையிலே ஒருதுளிதான் பட்டதானால்
திருந்திநின்ற வாழ்வுமிகச் செல்வமுண்டாம்
சேயதனைப் பெற்றெடுப்பாள் தாலிவலுவுண்டு
வருந்திநின்ற புடவையிலே மூன்றுதுளிபட்டால்
வண்மையுட னறுத்திடுவாள் வரிசைகேளு
மருந்திட்ட மாயைவிப சாரஞ்செய்து
மாண்டுதப்பா வந்தவுடல் வணங்கிப்பாரே. (71)

வணங்குதற்கு ஆதியந்த மறிந்தாயானால்
மகத்தான கருவியெல்லாந் தானேதோற்றும்
இணங்குதற்கு வேதாந்தக் கருவைநோக்கி
ஏகாந்த மாதியென நம்பிநின்றால்
குணங்கிநின்ற மனக்குரங்கு சுத்தனாகிக்
கூட்டைவிட்டு மெய்ஞ்ஞானி வெளியாய்ப்போவான்
சுணங்கிநின்ற நாயதுபோ லிடங்கள்தோறும்
சுற்றுவா னறிவில்லா மூடன்றானே. (72)

மூடனென்ற குருவப்பா ஆசானென்று
முட்டோடே வந்தவன்போல் மெச்சிக்கொள்வான்
பாடனென்ற பேரைப்போற் படித்துக்கொள்வான்
பண்பில்லாப் பாப்போலே பகர்வான்மட்டை
கேடனென்ற ஏடுகெற்ற பெயர்களெல்லாங்
கெதியாக நம்பியவன் கேள்விகேட்டு
நாடனென்ற சிவஞானம் வந்தாப்போலே
நலமாகத் தர்க்கித்து நடப்பான்தானே. (73)

நடப்பார்க ளறிவுநின்ற நிலைமைகாணார்
நாட்டிலவர் பெரிதுஇவர் பெரிதேயென்பான்
கடப்பார்கள் ஞானம்விட்டு உலகமீதில்
கனியென்ற ருசியதுபோற் கருதிக்கொள்வார்
செடப்பார்வை குறியதனை நம்பிக்கொண்டு
செகத்திலே யலைவார்கள் திருட்டுவாமி
திடப்பார்வை ஞானக்கண் விபரங்காணார்
சிந்தையுள்ளே நின்றறிவைத் தெளியார்தானே. (75

தெளிந்தவர்கள் பதினெண்பேர் சித்தரையா
செகமதனி லெவர்களென்றாற் செப்பக்கேளு
பிழிந்தரசப் பத்ரகிரி பட்டணத்துப்
பிள்ளையொடு அருணகிரி மூத்தானந்தர்
களிந்தகடு வெளிச்சித்தர் குதம்பைச்சித்தர்
நல்லபாம் பாட்டிசித்தர் அகப்பைச்சித்தர்
மொழிந்தவண்ண ரழுகண்ணிச் சித்தர்சிவவாக்யர்
முறைமையுள்ள கொங்கணசி வாயந்தானே. (75)

தானென்ற தத்துவத்தை யறிந்தசித்தன்
சந்திரசே கரனருளு மைந்தனாகி
வானென்ற அரியெழுத்தின் விபரஞ்சொன்னேன்
மகத்தான அகத்தியனே சொல்லக்கேளு
பாரனென்ற நால்வரொடு முனிவர்சித்தர்
பதினெட்டுப் பெயர்களுட நாமஞ்சொன்னேன்
கோனென்ற பெரியோர்க ளிவரேயையா
கோடிமறை வேதத்தைப் பாடினாரே. (76)

பாடலென்ற தமிழெல்லாம் பாடம்பண்ணிப்
பசப்பியே ஆண்டியர்கள் படித்துக்கொள்வார்
ஆடலென்ற ஆட்டமெல்லா மாடிக்கொண்டு
அழுக்கறுக்க மாட்டாம லலைந்தார்பாவி
நாடலென்ற சுயவாக்குச் சொல்லமாட்டார்
நான்பெரியோ னென்றுமெத்த நாட்டஞ்செய்வார்
தேடலென்ற அறிவுவந்தாற் சுயமேசொல்வான்
தெரியாத மூடனைத்தான் குருவென்பானே. (77)

குருவென்று சொன்னசொல் லாருக்காச்சு
குருபரனை யறிந்தவர்க்குச் சொல்லலாச்சு
திருவென்று சொன்னசொல் லாருக்காச்சு
சிந்தைதனை யறிந்தவர்க்குச் செப்பலாச்சு
தருவென்று சொன்னசொல் லாருக்காச்சு
தயாபரியாம் வாலைதனை யறிந்தோர்க்காச்சு
கருவென்று சொன்னசொல் லாருக்காச்சு
கர்த்தனென்ற சதாசிவனுக் காகுந்தானே. (78)

ஆகுமந்த வெளிதனிலே திவலைசென்று
ஆணென்றும் பெண்ணென்றும் இரண்டுமாகிப்
பேகுமந்த மனமறியா மயக்கத்தாலே
பெண்பெரிது ஆண்பெரிது என்பார்மாந்தர்
வேகுமந்த மண்ணதனைப் பெரிதேயென்று
விளம்புவார் வேதாந்த சாரந்தன்னில்
ஆகுமந்த ஆண்பெரிதே வெளியாய்நின்று
ஆதியந்தந் தானாகி யிருக்கும்பாரே. (79)

இருக்கின்ற வெளிதானே சிவமுமாகி
இயல்புள்ள வாயுவதே சத்தியாகிச்
சுருக்கின்ற ரவியதுவே ருத்திரனாகிச்
சுகமுள்ள அப்பதுவே மாலுமாகிக்
குருக்கின்ற பிருதிவியே பிரமாவாகிக்
கோடிமறை வேதமதாய்ப் பிறந்தநாதன்
பெருக்கின்ற வுலகமெல்லாந் தானே தானாய்ப்
பிரமமாய் நின்றபடி பேணிக்கானே. (80)

பேணியதோ ரடிவயிற்றைப் பார்வைசெய்வார்
பிலமுள்ள மேல்வயிற்றைத் தியானஞ்செய்வார்
பாணியதோர் நெஞ்சதனை நியாயஞ்செய்வார்
பகருகின்ற கண்டத்தை நிசமேசெய்வார்
காணியதோர் கபாலநில வரமேயென்பார்
கருத்துள்ள நெற்றிக்கண் காணச்சொல்வார்
ஆணியதோர் மூக்குமுனை யதீதமென்று
அழகுள்ள விருகண்ணும் பார்வையாமே. (81)

பார்வையென்ற திக்கமுறை யதீதமென்பார்
பண்பில்லா மூடரப்பா நியாயஞ்செய்வார்
சேர்வையென்ற குருசீஷ ரிருவர்கெட்டார்
செகந்தனிலே நோய்பிறந்தே உழன்றுபோவார்
கோர்வையென்ற வைம்பூதக் கவனமாகிக்
கொடிதான துயரத்தால் மாண்டுபோவார்
ஏர்வையென்ற ஞானம்வந்து என்னசெய்யும்
எட்டிரண்டு மறியாத மூடர்தானே. (82)

மூடர்களே இதுவெல்லாம் வருத்தமப்பா
மூலமென்ற உச்சியின்மேற் பார்வையாகுங்
கேடர்களே யிதுநிசமே பொய்யோயில்லை
கெதியுள்ள புத்தியினாற் றேணியேறு
தேடர்களே இதுதேட்டு ஞானமாகும்
ஜெகஜால வித்தையிலே வீழவேண்டாம்
காடர்களே இக்கருவை நாட்டிப்பார்த்தால்
நலமான சிவயோகம் வருகுந்தானே. (83)

வருவதற்கு அடையாளஞ் சொல்லக்கேளு
வரையற்ற விசும்பதனி லேணிசாத்தி
இருபத்தோ ராயிரத்து அறுநூறுலே
யேணியென்ற பழுவதுவாய்ச் சேர்த்துக்கொண்டு
குருபரத்தி னருளாலே யறிவையேற்றிக்
கூசாமல் மனமுறைத்து வெளியிற்சேர்ந்து
பருவநல மிதுவென்று மவுனத்துள்ளே
பண்பாகப் பெரியோர்கள் பலன்பெற்றாரே. (84)

பலன்பெற்ற தேதாலே பிராணன்றானும்
பண்பான அபானங்கே சரியிலேறிச்
செலமென்ற வழலையதைப் பானம்பண்ணிச்
செங்கதிரோன் சந்திரனிற் சேர்ந்துநின்று
தலமென்ற ஆறாறுக் கப்பால்நின்ற
சச்சிதா னந்தமென்ற அறிவிலேறி
நலமென்ற பேருபெற்ற வழியீதப்பா
நன்மையுடன் சொல்லுகிறேன் நாட்டிப்பாரே. (85)

நாட்டியதோர் திசைக்கம்பந் தன்னைக்காணார்
நாட்டில்குரு வென்றுமுப தேசஞ்சொல்வார்
ஏட்டிலே யெழுதியமந் திரத்தையெல்லாம்
யியம்புவான் மட்டுசொன்ன விதத்தைக்கேளு
போட்டியதோ ரரியென்றும் அகாரமென்றும்
பொருமையுள்ள உவ்வென்றும் மகாரமென்றும்
பூட்டிநின்ற ஓமென்றும் நகாரமென்றும்
பூவின்மா வெழுத்துமரி யெழுத்தென்பாரே. (86)

எழுத்தற்ற வெளியதுவே வெளியுமாகி
இகமெல்லா முளைத்தெழுந்து ஏகமோனம்
வழுத்துகின்ற சித்தர்களே வரிசைகேளு
வகையுடனே மறுபிறப்புப் பிறந்தாயானால்
அழுத்தமுள்ள யோனிதனிற் பிறப்புமில்லை
அரனுடனே சேர்வதில்லை யையாகேளு
பழுத்தபழம் வித்துவினிற் சேர்த்தாயானாற்
பார்மீதிற் பிறவியதா யிருக்கின்றாயே. (87)

இருக்கின்ற அறிவதுவே பரமாயெண்ணி
இருதயத்தின் நினைவாலே வெளியேசென்று
பருக்கின்ற தேகமதைப் பொய்யென்றெண்ணிப்
பரலோக ஞானமதிற் பாய்ந்தேயேறி
சுருக்கின்ற ஐம்பூத மொன்றேயாகும்
சூடில்லை மதியில்லை தோற்றமில்லை
திருக்கின்ற சுழலதுவாம் ஞானவீட்டில்
திறமாகப் பெரியோர்க ளிருந்திட்டாரே. (88)

திட்டமென்ற ஈரேழு லோகமெல்லாந்
திரைக்குள்ளே நின்றிலங்கு மிரவியல்ல
வட்டமாய் நின்றதொரு மதியுமல்ல
வளர்கின்ற வன்னியதாய் நின்றதல்ல
பொட்டலாய் நின்றதொரு வெளியுமல்ல
பூதலத்தி லுயிரெல்லாந் தானுமல்ல
கட்டான கயிறல்ல காலுமல்ல
கருவான தலையுமல்ல கருத்தாய்நில்லே. (89)

கருத்தென்ற அறிவதுவே தூலமண்ணைக்
கருவான சூட்சமண்ணைத் துயர்ந்துபோகும்
திருத்தென்ற காரணமண் சோமன்மேலே
திசையான மகாகரண நாதனுகி
நிருத்தென்ற விம்மண்ணிற் பெரியோரெல்லாம்
நிலையாக வாழ்ந்திருந்த நிலைமைசொன்னேன்
பொருத்தென்ற மண்ணதனை நிசமேயென்று
புலம்புகின்ற வாய்ஞானி பேயன்றனே. (90)

பேயரே பட்டணத்தின் பெருமைசொல்வேன்
பேரான கேசரிமேற் பிலத்தைக்கேளும்
வாயரே மூலராட் சசனுமாகி
வளமான விருகாலும் பூமியாகி
நேயரே வானமது தலையுமாகி
நிலைக்குள்ளே நின்றபின் விதானமாகி
வாயரே தென்வடக்கு இருகையாகி
வடிவான மேற்குமுது காய்நின்றரே. (91)

நின்றதொரு கிழக்கதுவே முகமுமாகி
நிலையான கதிர்மதியே கண்ணுமாகிச்
சென்றதொரு வன்னியதே நெற்றிக்கண்ணாய்த்
திறமுள்ள பூமிக்குள் பூமியுண்டு
குன்றதொரு மலையெல்லாந் தன்னியமாகி
குறிப்புள்ள கடலெல்லாம் புடவையாகி
சென்றதொரு வாயுவதே கரமுமாகிச்
செயமுள்ள வெளியெல்லா மறிவதாமே. (92)

அறிவான பிறப்பற்றுப் பரத்திற்சேர்ந்தால்
அரனாரைப் போலாவா ரனந்தங்கோடி
குறியான பிரபஞ்சஞ் சேர்ந்தாரானால்
கூட்டோடே பிறந்திடுவா ரென்பார்கோடி
பறிவான விரண்டுபர மேதுசொல்லும்
பசாசர்களே யிப்படியே பகரப்போமோ
நெறியான மறுபிறப்பின் விபரஞ்சொல்லும்
நிலையறியா மூடர்களே பரம்ரெண்டாமோ. (93)

பரத்தோடே சேர்ந்தவர்கள் பரமேயாவார்
பரப்பிர்மப் பிறவியதா யெங்குந்தோன்றும்
வரத்தோடே யருள்பெற்று மனமுந்தேறி
வாசியென்ற குதிரையினால் வீடுகட்டிச்
சரத்தோடே மனையதனி லறிவிற்சேர்ந்தால்
தயவான மறுபிறப்பு யிதுதானப்பா
திரத்தோடே இந்தவகை யறிந்தாயானால்
சிவத்தோடே சேருவதிற் செயம்பெற்றாயே. (94)

செயம்பெற்ற ஞானமது நூறுஞ்சொன்னேன்
தேசத்தி லிதைப்படித்தோர் பெரியோராவர்
நயம்பெற்ற என்னூலின் விபரங்கண்டால்
நானென்ற பிறவியற்றுத் தெய்வமாவர்
வயம்பழித்த பேர்கள்பெரு வயிறுமாவர்
வானரங்கள் பன்றியதாய்ப் பிறப்பான்மட்டை
சயமென்ற நோய்பிறந்தே இறந்துபோவான்
தப்பாது யென்வாக்குச் சாற்றினேனே. (95)

சாற்றியதோர் வாக்கதனைப் பொய்யென்றெண்ணித்
தலைநெறித்துப் போகாதே சண்டிமாடே
சேற்றுமத்தி லீப்போலே தியங்கிப்போவாய்
ஜெகஜால நரகத்தி லழுந்திவீழ்வாய்
ஆற்றுக்குள் துரும்பதுபோ லலைந்துபோவாய்
அலட்சியமாய்ச் சொல்லாதே இந்தநூலை
தூற்றிவிட்ட களம்போல்வங் கிஷங்கள்போகும்
சுயவாக்குத் தப்பாது சூட்டினேனே. (96)

சூட்டினதோர் குலந்தனிலே பெரியோராகில்
சுக்கிலத்தின் வழியிருபத் தொன்றுமுத்தி
கூட்டினதோர் சுரோணிதத்தின் வழியிருபத்தொன்றும்
குறியாக மோக்ஷமுத்தி பெறுவாரையா
நாட்டினதோர் சீஷர்களும் முத்திபெற்றார்
நலமான பாதையிது அப்பாகேளு
பூட்டினதோ ரடையாளம் பூரணமேயாகும்
பூட்டதனைத் திறந்துபோன் மனதினாலே. (97)

பொன்வெள்ளி செய்கிறவன் பெரியோனல்ல
புகழான அஷ்டசித்தி பெரியோனல்ல
முன்னின்ற வயித்தியனும் பெரியோனல்ல
மூச்சடக்கி யெழும்பினவன் பெரியோனல்ல
சின்னமுள்ள குழியிருப்போன் பெரியோனல்ல
திறமுடனே கெவனமிட்டோன் பெரியோனல்ல
தன்னிலையை அறிந்தவனே பெரியோனையா
தனையறியான் வகைகெட்ட சண்டிமாடே. (98)

சண்டியென்ற மாடப்பா நூலைக்கற்றுச்
சகலகலை வல்லவன்போற் பேசிக்கொள்வான்
கொண்டியென்ற கோளுமிகச் செய்துகொண்டு
கொலைகளவுக் கஞ்சார்க்கு ஞானமென்ன
தெண்டனைசெய் கின்றோர்கள் வேதம்பார்த்துச்
செகத்திலே பெரியவன்போற் புலம்பிக்கொள்வான்
வண்டினங்கள் கத்துவது போலேகத்தும்
மடையர்களே யுங்களுக்கு நரகந்தானே. (99)

நரகமென்ற மனுப்பதரே சொல்லக்கேளாய்
நன்மையுள்ள பரிபொய்யே கரியும்பொய்யே
கிரகமென்ற மனைபொய்யே கிளையும்பொய்யே
கெதியுள்ள சதுரங்க சேனைபொய்யே
கரகமென்ற உந்தனுட சரீரம்பொய்யே
கருவான பெண்பிள்ளை பொய்யேயாகும்
துரகமென்ற ஈதெல்லாம் நிசமேயென்று
தூலமகிழ்ந் திருப்பதறி யாமற்றுனே. (100)

அரியென்ற வெழுத்ததனை அறியமாட்டார்
அவனிதனி லென்னூற்குச் சரிநூலில்லை
பரியென்ற வாசியீரா றுங்கடந்து
பரமதிலே கலந்தவர்க்குப் பயனும்விள்ளும்
வெறியென்ற மூடருக்குத் தெரியாதப்பா
விரைந்தோடி நாய்போலே போகஞ்செய்வான்
குறியென்ற ஞானமிது நூறினுள்ளே
குருசொன்ன விபரமெல்லாங் கூறினேனே. (101)

சுப்பிரமணியர் சுத்தஞானம் ௱

முற்றிற்று.





சத்திகிரி சிவகிரி திருவாவினன்குடியெனத்தழைத்தோங்கும்திருப்பழனிமலையிலெழுந்தருளிய ஸ்ரீகைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீனஆச்சிரமம் ஆதீன மகா கைலாசபரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீகைலாச தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்துவாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

முப்பதாவது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# தசதீட்சை சூத்திர மென்னும்

# ஞான சைதன்யம் ௱அ.



## கலித்துறை.

ஆமா அடிநடு வந்தமுங் கூடியொன் றானதுவாய்த்
தாமாதி யண்டமும் பிண்டமு மாகிச் சகவுருவாய்ச்
சேமாதி முச்சுடர் தானே குறிகுணம் சுத்தமுமாய்
ஓமாதி வேதங்க ளானவள் தன்பத முண்மையிதே.

சந்திர னாகிய விந்துவுஞ் சண்டனிற் றான்கலந்து
மந்திர மான பிரணவ மாகி மவுனமதாய்
இந்திரர் வானவர்க் கெட்டா தரும்பொரு ளின்பமதா
தந்திர மாகிய ஞானசை தன்யமுந் தானிதுவே. (1)

நாலுஞ் சுழியென நாமம் பலவென நற்பிரமம்
பாலுங் கனியென வொன்றா கிடுமந்தப் பண்பதுபோற்
காலுந் தலையென ஐயம தாகக் கலந்திருக்கும்
ஆலும் விழுதென அசையு மெய்ஞ்ஞான மானதுவே. (2)

அசையும் அசையா திருந்தது ஆமை யெழுத்ததுவாம்
இசையும் இசையா திருதலை மாணிக்க மென்பதுவும்
தசையுந் தசையில நாளுந் தமையறிந் தார்தமக்கு
நசையில நாட்டிற் கொலுவிருந் தாரெந்தன் நந்தியுமே. (3)

இருந்தவக் காரணம் மாலயன் தேடியு மென்னகண்டார்
அருந்தவ யோகியும் நான்மறை வேத மறியவொ ண்ணா
திருந்த முறைகளைத் தேர்ந்தறிந் தோர்க்குநான் செப்புகிறேன்
பொருந்துமெய்ஞ் ஞானம் பெறத்தசை சொல்லப் பொருளிதுவே(4)

பொருளு மருளிது போனவர் கண்ட புதுமையென
அருளுங் கருணையுந் தானே யெழுந்தது அம்பரத்தில்
இருளு மணுகி யிருக்கா தெனச்சொல்வ ரிப்புவியில்
மருளும் பெருகிடும் மாவது மாகுமம் மத்தியிலே. (5)

மத்திச் சிதம்பர மாயிரத் தெட்டு வரையதனில்
சத்தி யொருத்தி மவுனப்பெண் ணாகிச் சதிரிருப்பாள்
புத்தியி னாலவள் பாதமும் போற்றிப் புகழ்ந்துநின்றால்
முத்தியைக் காட்டியு முன்னறி வோடே முடிப்பிப்பளே. (6)

முடிமீதி லான மவுனிய வீட்டினின் முப்பொருளைப்
படிமீதி லேறி மனத்தா லறிந்திடப் பக்ஷம்வைக்கும்
அடியார்க ளுள்ளத் தனுதினந் தான்நின்று அன்புவைக்கும்
கொடியான கம்பத்தில் தசதீட்சை யான குலதெய்வமே. (7)

தெய்வமெய்ஞ் ஞானத் திருவுள மாகிய தேசிகரை
ஐவரைப் பொய்யென் றவரருட் பாத மடிபணிந்தாற்
சைவமு மகனுஞ் சங்கற்பம் போகுஞ் சகலமுமே
கைவச மாகு மவுனிய வீடது காணியதே. (8)

காணிய காரம் உகாரமுஞ் சேர்ந்து ஓகாரமதாய்
வாணிவ காரம் இகாரமுஞ் சிகாரங் காணுமிட்டுப்
பாணிவ காரம் நகாரம்ஓங் காரத்திற் பாயுங்கட்டி
ஏணிறீங் காரம் பழுவே சகாரமு மிம்மிடுமே. (9)

இம்முடன் கூடக் கிலியும் உகாரமு மீரெழுத்தில்
அம்மென்ற லாடத் தெழுகோடி மந்த்ர மடங்கிநிற்கும்
உம்மென்ற வீட்டி லுபாயத்தி னாலே உணர்ந்திருக்க
நம்மென்ற பாதை யான்செய்த மார்க்க நலமிதுவே. (10)

நலத்தை யறிந்து நமனணு காமலே நாடிநின்றார்
புலத்தைச் செயித்துமே புண்ணிய ராவரிப் பூமிதனில்
குலத்தைத் தரித்து நற்கோமா னிடத்தினிற் கூடிநிற்பார்
தலத்தை விடாமற் சதாகால நம்பித் தழைத்தவரே. (11)

தழைத்தவன் றன்னைத் தழையாதான் கண்ட தகமையைப்போற்
பிழைத்தவன் றன்னைப் பிழையாதான் கண்டு பிதற்றுதல்போல்

உழைத்தவன் றன்னை யுழையாதான் கண்ட உவமையைப்போற்
களைத்தவன் றன்னைக் களையாதான் கண்ட கதையிதுவே. (12)

கதையை யறிந்துநற் கால்மீதி லேறக் கண்டுகொண்டால்
அதையே யிவனுவ னவரைச் சொன்னவ னேகமத்தான்
மதையே கறந்தது மாவேகம் தீர்ந்திடும் மாசுமற்றாய்
இதையே யறிந்தின்ப ரூபம தாக விலங்குவையே. (13)

இலங்கு மனத்துக்கு ளேறிடு மேனி யிதனைச்சொன்னேன்
துலங்கு மிருபத்தொ ராயிரத் தறுநூறு தொகைவிபரம்
பிலங்கு மிருபங்கு பேணிய தாகிப் பிரபலமாம்
புலங்கொரு பங்கு பழுவது வாகப் பொருத்திடுமே. (14)

பொருத்திச் சுழிமுனை மீதினிற் சாத்திப் புருவமையத்
துருத்தி யடைத்துநற் றாணதி லேறித் துலக்குமனம்
நிருத்திடம் பண்ணி வெளியது வாக நிதஞ்செலுத்த
ஒருத்தி மவுனத் துண்மையைக் கண்டுநீ யுகந்துகொள்ளே. (15)

உகந்துநீ யம்மென்ற வீட்டதில் நின்று வுறுதிபண்ண
நகந்துநீ சென்றிடு நந்திதன் வீட்டையும் நாட்டம்வைத்து
உகந்துநீ தெளிந்திடு முண்மைதன் பாலை யுகந்துவுண்ண
செகந்துநீ யேறிடுஞ் சின்மயப் பாதத் திருவடிக்கே. (16)

திருவடி யான தசதீக்ஷை யாகிடிற் சித்திபெற்றுக்
குருவடி வான பிரணவ வீட்டிற் கூடமனங்
கருவடி வான பிறவிகள் போகுங் கருணைபெற்றுத்
தருவடி வான நிசாகரன் வீட்டிற் சாருவையே. (17)

சாருவ தெப்படி யென்றே பணிந்து தடையறவே
பூருவ மான மெய்ஞ்ஞான வீட்டின் பொருளதனைத்
தேருவ தாக அருள்தர வேணுநற் றேசிகரே
மேருவ தான குருவை வணங்கியான் வேண்டினனே. (18)

வேண்டினேன் மெத்த மனமே யுருத்த மிகப்பயந்தேன்
ஆண்டெனை யாளு மருள்தெய்வ மேமதி யத்தொய்தமே
தூண்டின கம்பப் பெருவெளி யாகுஞ் சுழல்மவுனம்
தாண்டின வேத முடிவா யிருந்த தயாபரமே. (19)

தயாபர மேயும்மை நம்பின பேர்க்கொரு தாட்சியுண்டோ
மயாபர மேயென் பிறவிக் கடலின் மருந்துசொல்லுந்
தியாபர மேயுன் னிருதாள் வணங்கத் திருவருளும்
செயாபர மேயுந்தன் சேவடியே நம்பிச் சேவிப்பனே. (20)

சேவித் திடவெனைப் பரவெளி யாயம்மை செய்தவுடன்
பாவித் திடவெந்தன் பிதாவே யெனைப்பெற்ற பாக்கியமே
தாவித்த பஞ்சகக் கருவிக ளொன்றதிற் சார்ந்துநிற்கக்
கூவித் தருள்ஞானக் குருவே குறையறச் சொல்லுவரே. (21)

சொல்லிய வார்த்தையைக் குருமிகக் கண்டு சோதிமுகம்
அல்லியுந் தாமரை போலே மலர்ந்தவ ரன்புவைத்து
சல்லிய மான பிறவிக் கடலதைத் தானகற்றி
லவல்ல வுபாயங்கள் சொல்லுவன் கேள்விடை யென்மகனே. (22)

என்மக னேயுந்தன் றிராப் பிறவி யினையகற்ற
தன்மம தான அகார உகாரமுந் தான்கலந்து
வன்மம தான மவுனிய வீட்டை வணங்குதற்குச்
சின்மம தான தசதீக்ஷ யாலேநீ சேர்ந்துகொள்ளே. (23)

சேர்ந்துநீ போகப் பேசுகிறே னதைத் தெளிந்துகொள்ளு
தேர்ந்து சுணங்க னெழுந்ததின் கூத்ததைச் செப்புகிறேன்
ஏந்து குழந்தையைப் போலே மலர்ந்து எழுந்திருக்குந்
தீந்திரை யுங்கட லாழத்தின் றைமைத் திரமிதுவே. (24)

திரத்தா லெழுந்தயர் யானைய தாகிடுஞ் சேடனது
சிரத்தா லெழுதிய அட்சர மாகிடும் சிரமதுவாம்
கரத்தா லெழுந்து வெக்காலமும் போற்றக் கருணையுண்டு
பரத்தா லெழுந்தவெண் கோணம தாகிடுங் கார்முடியே. (25)

முடியா மவுன வீட்டின் மகிமையை முழங்குகிறேன்
கெடியான ஆலினில் வவ்வாலைப் போலங் கெதிரிருக்கும்
கொடியென்ற கம்பச் சுழலாம் பெருமைக் குறித்துச்சொன்னேன்
வடிவோ ரெழுத்தி னுண்மையின் மத்தியை வழுத்தினரே. (26)

வழுத்துஞ் சுருதி முடியூ சரத்தை மகிழ்ந்திருந்து
கழுத்துக்கு மேல்நின்ற முப்பாழுந் தாண்டிக் கரையதன்மேல்

வெளுத்த வெள்ளுப்பென்று மேலா னதுநீல வீடுமொன்று
பழுத்த சிகப்புங் கருப்பொன்று மஞ்சட் பரவெளியே. (27)

பரவெளி மேலே ரகசிய மொன்றுண்டு பாடுகிறேன்
வரவெளி யாகு மதினுட கூத்தை வகுத்துரைக்கத்
திரவெளி யான மயேஸ்வர னும் திரங்கள்பெற்ற
சுரவெளி யாலும் அரியயன் காணுஞ் சோதியிதே. (28)

சோதி பெரிது அரிதான பேர்க்கதைச் சொல்லுகிறேன்
நீதி பிரணவ வீடதி லேறியே நேர்ந்திருக்கத்
தேதி விவேக மனத்தா லறிந்துநீ சேர்ந்துகொள்ள
மேதி மவுன முடியால் வணங்கியே வேண்டுவையே (29)

வேண்டும் அகார முடியாகப் பாவித்து வீரமுள்ள
தூண்டும் உகார மவுனத்தி லேற்றிச் சுகம்பெறுவாய்
மீண்டும் வராது பிறவிக் கடலின் விபரஞ்சொன்னேன்
ஆண்டும் படைக்கின்ற பிர்மத்தின் வீடு அதிசயமே. (30)

அதிசய மின்னமுஞ் சொல்லுகி றேன்கே ளதிகமுள்ள
மதிசய மான பிரணவ வீட்டை மனவறிவால்
துதிசெய மான மயிர்ப்பாலத் தேறியத் தோணிசென்றால்
நிதிசெய மாம்வகை வல்லியின் வீடது நேருமதே. (31)

நேரும் படிக்கு உபாயத்தைச் சொல்கிறேன் நீதியுடன்
பேரும் பிரபல அத்தொய்த நேர்மையே யாவதற்குக்
கூறும் படியென்ற ஆமை யெழுத்தைக் கூட்டிக்கொண்டு
யேறும் பிரணவத் தூடே மவுனமி ருக்கலுமே (32)

இருக்கச் சுருதி முடிமீதி லேறவே யேணியது
வுருக்க மனமென்ற கம்பத் தெழுத்தை யூன்றிடவே
குருக்க ளிருந்த அரண்மனை மீதேறிக் கொண்டவுடன்
பெருக்க விருந்த பிறவிகள் தீர்ந்ததைப் பேசுறனே. (33)

பேசுற அட்சர மனமது வாகும் பேச்சுமில்லாத்
தாசுந் தொனியே மவுனியமாகுந் தயாபரத்தைப்
பூசும் புகழுஞ் சவாது மணிந்துநீ புஞ்பமிட்டு
மாசுமஞ் ஞான மகற்றி மெய்ஞ்ஞான மருளுவிரே. (34)

மருளு மனத்தையும் வானத்தி லேற்றி வழிப்படுத்த
அருளு மெய்ஞ்ஞான வகண்டத்தி லேற்றி யனுதினமுந்
தருளு மதில்நின்று தானவ னூடதிற் சார்ந்துநின்றால்
இருளும் விலகி யிருப்பாயென் றேற வியம்புவனே. (35)

இயம்புமவ் வார்த்தையை யானே யறிந்தென்று மேறிவிட்டேன்
சுயம்புயி ராமென்ற செய்கை யடிமைக்குச் சொல்லுமென்று
பயம்புற வேயஞ்சி வாய்பொத்திக் கட்டிப் பணிந்துநின்று
நயம்பெற வேசொல்லும் நாட்டமு மச்சரம் நன்றெனவே. (36)

நன்றெனக் கேட்டிடு மென்மகனே புத்தி நாட்டுகிறேன்
குன்றென மூலத்தில் ஓங்காரம் நின்ற குகைக்குமப்பாற்
பன்றென வீட்டில் நகாரமு நின்றது பாதையின்மேல்
என்றென வீட்டின் மகாரமும் நன்றதை யென்றுவையே. (37)

என்றிவை ருத்திரன் வீடதி லங்கிஜ னிக்கவைப்பால்
நன்றிவை வீடதில் வாசி யெழுந்து நடப்பனென்று
கன்றிவை வீடதில் யகாரமு மாகுங் கண்டுசொன்னேன்
பன்றிவை வீடதின் மேலாறு நிற்கப் பகருவனே. (38)

பகருமுன் ஞேனைக் கருப்புக் கலையது பண்பைச்சொன்னேன்
இகரும்வி தாதா மஞ்சட் கலையதி னிடத்தைச்சொன்னேன்
நுகருங்கோ பாலன் பச்சைக் கலையதி னிடத்தைச்சொன்னேன்
உகருமு ருத்திரன் பானுவ தாக வுரைத்தனனே. (39)

உரைக்கின்ற வார்த்தை மயேஸ்வரன் தீப வொளிக்குமப்பால்
விரைக்கின்ற மூர்த்தி சதாசிவன் சோமன் விபரமதைத்
துரைக்கின்ற ராஜன் இவனே ஜகத்திற் றுலங்குமதி
பரைக்கின்ற வென்னிடந் தானே யிருந்ததைப் பாடுவனே. (40)

பாடுற சேதியை யான்கண்டு கொண்டேன் பராபரமே
நாடுற வானதும் விண்ணதி லாரையும் நாடச்சொன்னீர்
தேடுற வீட்டுக்கு அச்சர மேசொல்லித் தெளிந்துறையும்
கோடுற வானது கோமா னெனது குலதெய்வமே. (41)

தெய்வ மியங்குங் குருவுள் மகிழ்ந்துற்ற செய்தியைக்கேள்
கைவச மாகிடச் சொல்லுகி றேன்கேளுங் கண்மணியே

சைவங் கணபதி அட்சரம் ஓமென்று சாற்றுகிறேன்
செய்வ துறும்படி வேதனுங் காணுத் திருவருளே. (42)

திருவருள் மாயன் எழுத்தது இம்மென்று செப்புகிறேன்
தருவரு ளான வுருத்திரன் றிம்மென்று சாற்றுகிறேன்
பொருவரு ளான மயேஸன் உவ்வென்று பொருத்துகிறேன்
பெருவரு ளான சிவமே அகாரத்தைப் பேசினனே. (43)

வேறு.

பேசிய குருவே அய்யா பிரபல மின்ன மொன்று
ஆசிய மந்தி ரத்தை யடியனுக் கருளல் வேண்டும்
தேசிகர் முகம லர்ந்து செப்புவேன் கேளு மைந்தா
நாசிமேல் நுனிக்கம் பத்தில் நாற்சுழி மவுனந் தானே. (44)

நாற்சுழி யென்றீ ரய்யா நான்கண்டு கொள்வ தெப்போ
கால்தலை யொன்றாய் நின்ற கருணையைச் சொல்ல வேண்டும்
பால்மதை யின்ன தென்று பகுத்துநீ ருரைக்க வேண்டும்
போல்மனப் பேதை யேற்குப் பொருந்தியே விளம்பு வீரே. (45)

விளம்பவே சொன்னாய் பிள்ளாய் வேதாந்த முடிவ தற்குக்
களம்பர நின்ற விண்ணிங் காணாது பேத மாகும்
இளம்பிறை நடுவில் நின்ற யேகாந்த லிங்க மாகும்
தளம்பாத யானை போலத் தருங்கழிக் கோல தாமே. (46)

கோலதா மென்று சொன்னீர் குறைகளப் படியே தீரும்
மேலதாம் பிரம மூர்த்தி மெய்யதை யருள வேண்டும்
ஞாலதாம் பூமி நீதி நன்றாக வுரைக்க வேணும்
போலதாம் காய னாலே பொருந்தியே காண்ப தேதோ. (47)

காண்பதெப் படியோ வென்று கருதியே வணங்கிக் கேட்டாய்
தூண்பிறக் கம்ப மீதில் துலங்கிய மவுனக் கூத்தைப்
பாண்பர மனம தற்ற பரலோக ஞான வீட்டை
மாண்பற மனத்தி னாலே யதுசெய்தி வழுத்தப் போமோ. (48)

சொல்லாத போது லெந்தன் தோஷபா வங்கள் போமோ
கல்லாத மடைய னேனைக் கருதியே யெடுத்துக் கொண்டீர்
பொல்லாத பிள்ளை பெற்றார் போற்றியா தரிக்க வேணும்
செல்லாத வீட்டின் பேச்சைச் செப்பியே யருளுவீரே. (49)

அருளென்று சொன்ன பிள்ளாய் அதிகமாய்ச் சேதி தன்னைத்
தெருளூறும் பெரியோ ரெல்லாந் தேடியே காண வில்லை
யிருள்நின்ற மலையிற் றேனை யெனக்குநீ தெரியச் சொல்லு
பொருள்நின்ற போகந் தன்னைப் புனிதமாய்ப் போற்றினேனே. (50)

இந்தப்பாட்டுமுதல்

வேறுசந்தம்.

போதித்த குருநாதா ஞானமூர்த்தி
போக்கடியாற் சொன்னுக்கால் விட்டுப்போமோ
ஆதித்தன் தானாகி யமர்ந்தநாதா
அண்டபிண்ட மொன்றாகி யமர்ந்தமாலே
சாதித்த மவுனமது தெரியாதுண்டோ
சண்டியற்குச் சொல்லொண்ணா தென்றுசொன்னீர்
நீதித்த நிர்மலநிர் மயமேவிண்ணே
நேர்மையுட னெந்தனுக்குச் சொல்லுமென்றான். (51)

மென்றான பாதத்தைத் தொண்டுகொண்டு
மெய்யுருகி மனந்ததும்பி யழுதுநின்று
ஒன்றான பொருள்தானே மனுவாய்வந்து
உதவியெனை ரக்ஷிக்க வந்தநாதா
தொன்றான பாரேழும் விண்ணுமேழும்
தோன்றவே படைத்தழிக்குந் தெய்வமேநீ
நன்றான மவுனமது விபரஞ்சொல்ல
நடுநடுங்கிப் பயந்துநின்று தெண்டனிட்டான். (52)

தெண்டனிட்ட படிகண்டு குருவுஞ்சொல்ல
சேதியுள்ள மனத்தாலே கேளுமென்றார்
பண்டான மவுனத்தின் விபரந்தன்னைப்
பக்ஷம்வைத்துச் சொல்லுகிறேன் பரிந்துபாரு
உண்டான படியப்பா அகாரமீதில்
ஓரெழுத்தாய் நின்றதுவு முரைக்கக்கேளு
கெண்டான ஓங்கார வட்டத்துள்ளே
கெதியான உம்மெழுத்தே மவுனமாச்சே. (53)

மவுனமென்ற சேதியிது கூடிப்பாரு
மகத்தான சித்தர்களுஞ் சொல்லார்சொல்லார்
கெவுனமுட னிதையறிந்து பூசைபண்ணு
கெதியுண்டு மோசமில்லை கேளுகேளு
கவனமென்ற மனத்தாலே கண்டுகொள்ளு
காசினியில் மனுப்பதர்க ளுனக்கீடில்லை
சவுனமென்ற சுருதிவெளிச் சேதிதன்னைச்
சாற்றுகிறேன் குருமுறையைச் சார்ந்துதானே. (54)

சார்ந்துகொண்டால் பிறவியறும் துன்பமில்லை
சாதிகுல முறையில்லை சங்கையில்லை
நேர்ந்துகொண்டா லஞ்ஞானம் விலகிப்போகும்
நேர்மையென்ற மாய்கையெல்லா மாண்டுபோகும்
தேர்ந்துகொண்டால் நீயவனே யாவாயப்பா
திறமுடனே சொல்லுகிறேன் வாசிநேர்மை
கூர்ந்துகொண்டு கேசரியி லடங்கிப்போனால்
குறையாத ஞானமனை கொள்ளையிட்டாய். (55)

கொள்ளையிட்டாய் அத்துவித வெளியேயெல்லாங்
குருபரனே நீயாவாய் கூர்ந்துகேளு
பிள்ளையென்று னுன்னைப்போல் பிள்ளையுண்டோ
பேய்மகனே யிந்தறிவைப் பேணிக்கூடு
தள்ளையிலே மதியமுத முண்ணலாகுஞ்
சாயுச்சிய பதவியிலே சாரலாகும்
வள்ளையிலே மனவேகம் கோபம்போகும்
மாசற்ற பளிங்கொளிவாய் மகிழ்ந்தாய்தானே. (56)

மகிழ்ந்துகொண்டேன் குருநாதா இன்னுமொன்று
மறந்திருந்தேன் சொல்லுகிறேன் வணக்கமாக
மிகழ்ந்துநின்ற பிரபஞ்சம் வந்தவாறும்
மேதினியி லுயிரெல்லாம் பிறந்தவாறும்
முகிழ்ந்துமன வறிவோனே சொல்லவேணும்
மூடனென்ற பிள்ளையது தேறவேணும்
இகழ்ந்துமனம் போயுந்தன் பாதம்போற்றி
யேகாந்த நந்தியென நம்பிநின்றேன். (57)

நம்பிநின்ற வணக்கமது நினைவுங்கண்டு
நன்மையுடன் சொல்லுகிறேன் கேளும்பிள்ளாய்
தும்பியென்ற அக்ஷரமாம் ஆகாசத்திற்
றடியான பிரபஞ்சம் பிறந்ததப்பா
தம்பியென்ற சதாசிவத்தில் விந்துதோன்றித்
தனுவான வுயிரெல்லாம் பிறந்ததப்பா
எம்பிரான் என்குருவே சொன்னேன்சேதி
இயம்பினே னுந்தனுக்கு இயலாய்த்தானே. (58)

இயலென்ற குருநாதா இன்னுமொன்று
இத்தேகம் விட்டுமுயி ரெங்கேசேரும்
கயலென்ற தேயுவிலே தேயுசேரும்
கருவான அப்புவிலே அப்புசேரும்
வயமான வாயுவிலே வாயுசேரும்
வகையான பிரிதிவி லஃதேசேரும்
செயலென்ற வெளிதனிலே வெளியேசேரும்
செப்பினேன் நீயறிந்து தெளிந்துகொள்ளே. (59)

தெளிந்திருந்த பிரமமது இருந்தவாறைத்
திறமுடனே யடிமைக்குச் செப்புமென்ன
மொளிந்திருந்த மணலல்ல தண்ணீரல்ல
முனையான தேயுவல்ல வாயுவல்ல
எளிந்திருந்த ஆகாயந் தானுமல்ல
இருதயமாய் நின்றதொரு வுயிருமல்ல
ஒளிந்திருந்த ரவிமதியும் வன்னியல்ல
வுறக்கமொடு ஆங்கார மல்லத்தானே. (60)

மல்லாகி நின்றதொரு கயிலையல்ல
வளர்கின்ற வைகுண்டந் தானுமல்ல
அல்லாகி நின்றதொரு பிரமலோகம்
அதற்கடுத்த ருத்திரன்றன் லோகமல்ல
சொல்லாகி நின்றடங்கு மயேசன்லோகம்
சொற்கடந்த பதினாலு லோகமல்ல
கல்லாகி நின்றதொரு மலைகளல்ல
காசினியில் சாகரமு மல்லத்தானே. (61)

தானென்ற ஆணல்ல பெண்ணுமல்ல
தனித்துநின்ற அலியல்ல ஒளியுமல்ல
வானென்ற போதமல்ல வரையுமல்ல
வளர்கின்ற ரவிமதியும் செந்தீரல்ல
தேனென்ற வழலையல்ல நாதமல்ல
சேர்ந்திருக்கும் விந்துவது தானுமல்ல
கோனென்ற வெளியல்ல வாயுவல்ல
குருபரன்றான் நின்றநிலை கூறினேனே. (62)

கூறினதோர் சொல்லல்ல மலமுமல்ல
கொள்கையைம் பூதவுட லுயிருமல்ல
ஏறினதோர் வாசியென்ற குதிரையல்ல
ஈரேழு பதினாலு லோகமல்ல
தேறினதோர் மேலாறு கீழாறல்ல
திரையாகி நின்றசுழி தானுமல்ல
கீறினதோர் ஆறுவரை மூவரையுமல்ல
கெதியுள்ள அத்துவிதம் நின்றவாறே. (63)

நின்றதோ ரடையாளஞ் சொல்லக்கேளு
நீதியுள்ள பிர்மாவே பலகையாகிச்
சென்றதோர் திருமாலுங் கரனும்ருத்ரன்
செயமான மயேஸ்வரனுங் காலுமாகி
நின்றதோர் சதாசிவனு சனமுமாக
நிலையான பராபரையுங் கமலமாகித்
தென்றதோர் தராமஞ்சள் உலகமாகித்
திருவென்ற விம்மண்ணின் சேதிகேளே. (64)

கேளப்பா படிகமென்ற வீட்டுக்குள்ளே
கெதியுள்ள கங்குல்பக லற்றுநின்ற
வாளப்பா விவரல்லோ தெய்வமாச்சு
வரைதனிலே பெரியோர்கள் மறைத்துச்சொன்னார்
வேளப்பா முப்பதுமுக் கோடிதேவர்
விதமான ரிஷிகள்நாற் பதுநாற்கோடி
தாளப்பா தும்புருடர் சண்டேசுவரர்
சதிர்வெளியிற் கொலுவிருந்த தன்மைதானே. (65)

தன்மையென்ற குருநாதா அகண்டமூர்த்தி
சாதகமா யின்னமொரு சேதிகேட்க
வன்மையென்ற மனத்தாலே பிறந்திருந்தேன்
மாநிலத்தில் மைந்தர்களும் பிறக்கும்நேர்மை
மென்மையுடன் எந்தனுக்கே யுரைக்கவேணும்
வெளியான ஓங்கார மவுனநாதா
நன்மையுடன் வணங்கிநின்று கைகுவித்து
நலமான குருவடியைப் போற்றினேனே. (66)

போற்றினதோர் என்மகனே அறிவுள்ளோனே
புகக்கிறதோர் விவரமதைப் புகழ்ந்துகேளு
சாற்றினதோர் பெண்களுக்குத் தூரமாகிச்
சாதகமாய் மூன்றுநாள் நீரில்மூழ்கி
யேற்றினதோர் நாலாநாட் புருடன்சேர்ந்தால்
இதமான பிள்ளையது வயிற்றிற்சாரும்
மாற்றினதோ ரைந்தானாட் சேர்ந்தாளுகில்
வலுவில்லை பிள்ளைக்கு வயதுபத்தே. (67)

பத்தென்ற ஆறுநாட் சேர்ந்தாளுகில்
பரிவான பிள்ளைவய திருபதாகும்
கத்தென்ற வேழானாட் சேர்ந்தாளுகில்
கருவான பிள்ளைவய தைம்பதாகும்
சித்தென்ற வெட்டாநாட் சேர்ந்தாளுகில்
சேர்வயதெண் பதுவாகுஞ் செப்பக்கேளு
வத்தென்ற வொன்பானாள் சேர்ந்தாளுகில்
மைந்தனே தொண்ணூறு வயதென்றே. (68)

வயதென்ற பத்தாநாள் சேர்ந்தாளுகில்
வளர்பிள்ளை வயதுநூற் றிருபதாகும்
செயலென்ற அறிவாலே யறிந்துசொன்னேன்
செகத்திலே யிதையறிந்தால் கருவிகாண்பாய்
நயமென்ற விவரமது நன்றாய்ச்சொன்னேன்
நந்திசொன்ன நூலிவிதை நாட்டவில்லை
பயபக்தி ஆசாரப் பிள்ளையென்று
பண்புடனே பாடிவிட்டேன் பணிந்துகொள்ளே. (69)

பணிந்துகொண்டேன் சற்குருவே யின்னுமொன்று
பராபரையின் பூசையது சொல்லுமையா
அணிந்துநின்ற கடம்தனைப் பூசிப்பேது
அரிவையரை நிறுத்திவைத்துப் பூசிப்பேது
துணிந்துதிரு வாணமதாய்ப் பூசிப்பேது
சொல்லுகின்ற சக்கரங்கள் பூசிப்பேது
தணிந்துநின்ற வென்மகனே சொல்லக்கேளு
சாதகமாங் கிரிகையென்ற வாமமாமே. (70)

வாமமென்ற யோகத்தின் வாமங்கேளு
வண்மையுள்ள தீபத்தை யேற்றிவைத்து
சோமமென்ற வக்ஷரம்போற் கீறிக்கொண்டு
சுகமாக வதினுள்ளே வாசியிட்டு
நாமமென்ற அக்ஷரத்தால் தியானம்பண்ணு
நலமான பூசையது நன்றாய்க்கேளு
ஏமமென்ற வித்தையிது கைக்குள்ளாகும்
யோகாக்ஷர பூரணத்தைக் காணலாமே. (71)

காணலாம் பூசையிது பிர்மத்துக்குக்
கயிலாய கிரிக்கப்பாற் கடந்துசென்று
ஊணலாங் கணவாயின் மேலேவிண்ணில்
ஓரெழுத்தாய் நின்றதுவே கீறிக்கொண்டு
பூணலா மதினுள்ளே வாசியேற்றப்
புகழுள்ள ஞானமனே யிதுதானையா
தோணலாம் ஞானமென்ற வாமமாகும்
சொருபமென்ற வெளியதனைச் சொல்லினேனே. (72)

சொல்லியதோ ரென்குருவே ஐயாவென்தன்
அயர்தீர்க்க வந்தடிமை கொண்டமூர்த்தி
வல்லியதோர் பிறவிதனைத் தீர்க்கவந்த
மறுசட்டை மிகப்பூண்டு வந்தாட்கொண்டு
மெல்லியதோர் மவுனவிண் ணப்பமொன்று
விளம்புகிறேன் விரித்தெனக்குச் சொல்லவேணும்
சொல்லியதோர் குருசீஷ ஞனவாறைச்
சுயமாகச் சொல்லுமெனப் பணிந்துநின்றான். (73)

நின்றதோர் குருவப்பா நன்றாய்க்கேளு
நீதியுடன் சொல்லுகிறேன் விபரமாக
அன்றதோர் குருவினது காவேலிங்கம்
அதிகமுள்ள சீஷனது காதேயோனி
சென்றதோர் குருவினுப தேசம்விந்து
சிறப்புடனே கேட்கிறதோர் சீஷன்நாதம்
என்றதோர் அறிவுமன மறிந்தாலின்பம்
ஏகமெல்லாம் ஞானகெற்பம் பிறந்தவாறே. (74)

பிறந்ததப்பா மனமதுவே அறிவிற்சேர்ந்து
பேரான மவுனம்பே ரின்பமாகி
யிறந்ததப்பா தேகமென்ற தோலேபோச்சு
இதமான சுழுமென்ற தேகமாச்சு
கறந்ததப்பா கைவல்லிய பதவியாச்சு
காசினியி லிதையறியார் சீடரெல்லாஞ்
சிறந்ததப்பா ஐயோனி பிறப்பின்மார்க்கஞ்
சேதிதனை யுன்றனக்குச் சொல்லினேனே. (75)

சொல்லியதோர் குருவையா புருடனுக்குந்
தோத்திரமாஞ் சீடனுமே பாரியாகும்
அல்லியதோ ரவர்வார்த்தை லிங்கமாகும்
அப்பனே சீடன்மனம் ஆவிடையேயாகும்
மல்லியதோர் குருதானே வித்துமாகும்
மகிழ்கின்ற சீடனது நிலமுமாகும்
சொல்லியதோர் குருதானே விண்ணேயாகுஞ்
ஜெயமுள்ள சீஷனது நிலமுமாமே. (76)

நிலமறிந்து கண்டுகொண்டால் ஞானம்வாய்க்கும்
நிலமறியா மூடருக்கு ஞானமேது
சலமறிந்து உண்டுகொண்டாற் பிறவிபோகுஞ்
சலமறியா மாட்டுக்குப் பிறவிபோமோ
கலமறிந்து கைக்கொண்டாற் காட்சிகாட்டும்
கலமறியா மூர்க்கருக்குக் காட்சியேது
பொலமறிந்து தேகத்தைத் தள்ளிப்போட்டுப்
பொன்மதியாந் தேகமதைப் பொருத்திக்கொள்ளே. (77)

பொருத்தியே யிப்படியே சொன்னீரையா
பொற்பாத மகிமையினு லறிந்துகொண்டேன்
ஒருத்தியே மவுனப்பெண் ணொளியைக்கண்ட
வுத்தமனே காரணனே அறிவானந்தா
நிருத்தியே வாசிதனை விண்ணிற்சேர்த்த
நிறத்தானே சொரூபமதே நீதியோனே
வருத்தியே நித்திரையுங் கோபமான
வார்த்தைதனை யெந்தனுக்கு வழுத்துவீரே. (78)

வழுத்துகிறே னென்மகனே அறிவுள்ளோனே
வகையாகக் கேளப்பா வரிசையாகக்
கழுத்துக்குக் கீழ்நின்ற ருத்ரன்வீட்டிற்
கருவான நித்திரையுங் கோபமாச்சு
எழுத்தற்ற அக்கினியால் வீட்டினுள்ளே
யிதமாங்கொட் டாவியும்விக் கலுமேயாச்சு
பழுத்துநின்ற அக்கினியாங் கூறுதன்னைப்
பக்ஷம்வைத்து வுந்தனுக்குப் பகர்ந்திட்டேனே. (79)

பகர்ந்திட்ட வென்குருவே பரமேயையா
பாரிலுள்ள மனுடரெல்லாம் அஞ்சிற்சேர்ந்தாற்
அகந்திட்ட மெய்ஞ்ஞானத் தியானஞ்செய்து
அர்ச்சித்தே விட்டுவிட்டால் சேர்வதெங்கே
யிகந்திட்ட தேகம்பொய் யென்றுநீக்கி
யிதமாம்பஞ் சரமவுனி யத்திற்சேர்த்து
மகிழ்ந்திட்ட அமுதமதைப் பானம்பண்ணி
மவுனமென்ற ஜெயவீட்டில் விருந்திட்டாரே. (80)

விருந்திட்ட விபரமதைச் சொல்லவேணும்
வேதியனே வேதாந்த வேதமூர்த்தி
பொருந்திட்ட புலனைந்தும் ஒடுங்கவேணும்
பொருந்தாமல் வெளியேறும் வாசிதன்னைத்
திருந்திட்ட மனமதுவே அறிவிற்சேர்ந்து
ஜெயமென்ற சீவன்முத்தா னானவாறும்
வருந்திட்ட விதங்களெல்லாம் ஒழுங்கதாக
மனமகிழ வெந்தனுக்கு வகைசொல்வீரே. (81)

வகையென்ன வென்குருவே பரமேயையா
வன்பிறவி தீர்க்கவந்த மதியுள்ளோனே
மூகையென்ன தமிழோனே பெருமையோனே
மும்மூல மொன்றான முடியேவாழி
விகையென்ன ஈவதினால் மோட்சமுண்டோ
விவரமதை யெந்தனுக்கு விளம்பவேண்டும்
பகையென்ன அறிவோனே ஞானவானே
பலமாகச் சொல்லுகிறேன் அகாரங்கேளே. (82)

அகாரந்தான் பரவெளியி லொளியுண்டாச்சு
அதில்நின்றே காற்றுடனே நெருப்புண்டாச்சு
இகாரந்தான் தண்ணீர்மண் ணிரண்டதாச்சு
இதில்நின்றே ஜீவாத்மா தோன்றலாச்சு
உகாரந்தான் பூமிபரு வதமதாச்சு
உகந்ததொரு நான்குவித யோனியாச்சு
ஒகாரசுழி வட்டமெழு தோற்றமாச்சு
உண்மைபரா பரத்தினுட செயல்தானுதி. (83)

ஆதியுமாய் நடுவுமாய் முடிவுமாகி
அருபவுரு வற்றதோ ரகண்டாகாரச்
சோதிசுயப் பிரமமொன் றதனில்நின்றே
தோன்றிடுமே பலபேத சொரூபமாகி
நீதியுட னுதித்துப்பின் னொடுங்கும்போது
நிர்மலமாம் சுத்தசின் மயமதாகும்
சேதியா வித்துள்வஸ்து வொடுக்கம்போலத்
தெரியவிதை யறியமன திருந்தாற்கேளே. (84)

இருந்தாற்கேள் வித்தையெட்டு சாதனங்கள்
இதமாகச் சரியையொடு கிரியைக்கெல்லாம்
பொருந்தாமா றுட்டமில்லை யொன்றேசூட்சம்
புகன்றிடுவேன் யோகமுதல் ஞானத்திற்கும்
வருந்தாம லெவ்விதத்து மொன்றேசூட்சம்
வழுத்துதற்கு ஆணுவத்தை நீக்கிப்போடு
அருந்தவசி யாகமன தொடுங்கவேணும்
அதின்பிறகு ஆதிநிலை யறிந்துநில்லே. (85)

நில்லடா ஞானவழிக் கென்னசூட்சம்
நிலையற்ற அறிவல்லோ ஆதிமூலம்
சொல்லடா யோகத்துக் கேதோவென்னில்
சுந்தரமாய் நாக்குமுனை தொட்டால்நன்று
வல்லடா வாதவழிக் கேதோவென்னில்
வளமான பூவழலை குருவதாகும்
செல்லவே கிரியைக்கு ஞானானந்தச்
செயல்நிலையைப் பேசும்நூ லதனைப்பாரே. (86

பாரப்பா சரியைக்குக் கள்ளமின்றிப்
பரனருளால் நீதிநிலை நின்றதாகும்
சேரப்பா பிண்டாண்ட உப்பைப்பார்த்துத்
திடமற்றுக் கூசியே நின்றிடாமற்
காரப்பா புருவநடு வதனிற்றானே
கருத்திருத்திப் பெண்மாயை தன்னைநீக்கு
நேரப்பா நாதமணி நாதகீதம்
நீகண்டு மதியமுத மதனையுண்ணே. (87)

உண்ணப்பா மோனவெளி தன்னைக்கண்டு
உலாவலாம் வாசியெனும் புரவியேறிப்
பண்ணப்பா அண்டத்திற் குள்ளேயோட்டப்
பரதநட னம்புரிந்து முனைகடந்து
தண்ணப்பா நந்திவழி யதனைக்கண்டு
தயங்காமற் பூரணத்தில் நின்றாயானால்
கண்ணப்பா கண்மணியும் நீயேயானாய்
கருத்தொடுங்கு மிடத்துமந் திரமதாமே. (88

மந்திரமுஞ் சொல்லிவைத்தேன் ஞானம்நூறில்
மகத்தான ரோமரிஷி மகிழ்ந்துதானும்
சொந்தமதா யதைப்படித்து முனிவோர்கட்குச்
சுத்தநல்ல ஞானமென்று பேருமிட்டார்
தந்திரமா யிந்தநூல் நூற்றெட்டாகத்
தான்சொன்னேன் முனிவர்களுந் தானேசூழ்ந்து
விந்தைதச தீட்சைசூத் திரமீதென்றார்
மிக்கநந்தி சைதன்ய மென்றார்கேளே. (89)

கேளப்பா வென்மகனே ஞானமூர்த்தி
கேசரத்திற் சிற்றறிவு நீயுமிச்சம்
வாளப்பா திரவியத்தை யீயும்வேதும்
வளமான நவதானம் வழங்குவேதும்
நாளப்பா தினந்தோறு மமுதுபோடல்
நலமான சத்திரத்தி லன்னம்போடல்
கோளப்பா திருவாசல் தாகந்தீர்த்தல்
கொடியான நந்தவனங் கோடிதானே. (90)

கொடியான கோதானம் வஸ்திரதானம்
கொள்கையென்ற வாபரண தானமெல்லாம்
படியான கலியாண தானமென்றும்
பண்புள்ள கோவில்குளந் தானமென்றுங்
குடியான அக்கிரார தானமென்றுங்
கூறியதோர் மடங்கள்கட்டுந் தானமென்றும்
முடியான நிலதானஞ் சொர்னதானம்
முழுக்கும்விக் கிரகபூசை யதுவும்பொய்யே. (91)

பொய்யப்பா யீவதெல்லாம் வீணதாகும்
புரப்பதற்குச் செய்வார்கள் தேசமாந்தர்
பையப்பா சொலப்பாரில் நெல்லையிட்டால்
பருவமுட னதுகாலம் நெல்லேயாகும்
கையப்பா வீவதுகண் டிப்பாயீந்தால்
கண்டிப்பாய் வந்திடுவா ரென்றுதோணூர்
மெய்யப்பா சொன்னேனின் னூலினுள்ளே
விவரமதை யுந்தனுக்கு விளம்பினேனே. (92)

விளம்பியதோர் செய்தியதை யறிந்துகொண்டேன்
மேதினியி லீவதெல்லாம் வீணேயென்றீர்
தளம்பியதோர் மனமதனைச் செயமேபண்ணிச்
சச்சிதா நந்தமதிற் சார்ந்தவல்லோர்
குளம்பியதோர் அறுசுவைப்பா லன்னத்தோடு
கொடுத்தாக்கால் மோக்ஷமுண்டோ குறியைச்சொல்லும்
கிளம்பியதோ ரறிவுவந்து பெரியோர்க்கையா
கேட்டதெல்லாங் கொடுத்தாக்கால் கெதியுண்டாமே. (93)

கெதியுண்டோ மென்றுசொன்னீ ரையாவுந்தன்
　　கெதிகொடுக்க வாட்கொண்ட கிருபையோனே
மதியுண்டாம் பெரியோர்க்குக் கொடுத்ததாலே
　　வன்பிறவி நீங்குமோதான் வகையைச்சொல்லும்
பதியுண்டாந் தேகமதைப் பொய்யென்றெண்ணிப்
　　பஞ்சமா கருவியைநிக் கிரகஞ்செய்வார்
விதியுண்டாம் பிரமாவின் லிபியைத்தள்ளி
　　வேதாந்த முடியிலிருந் திடுநல்லோரே. (94)

நல்லோர்கள் விரதமிரார் திதிகள்பண்ணார்
　　நலமில்லாக் கற்செம்பை நமஸ்கரியார்
வல்லோர்கள் கோபமுறார் பொய்யுஞ்சொல்லார்
　　வஞ்சனையுங் களவும்நித் திரையும்பண்ணார்
பொல்லோர்க ளிடஞ்சேரார் பொய்யேவேண்டார்
　　பொருந்திநின்ற மரப்பாவை மண்ணைவேண்டார்
செல்லோர்கள் கழுத்தின்மேல் லிங்கங்கட்டார்
　　சிவபூசை யைப்பார்க்கத் திரும்பார்பாரே. (95)

திரும்பிநின்ற மனமுடையோர் மவுனியத்திற்
　　றிசைநாதத் தொனியதனிற் சேர்நல்லோரை
விரும்பிதெரி சனமுமனு தினமுஞ்செய்ய
　　வினையில்லை மெய்ஞ்ஞானம் வந்தேதூக்கும்
கரும்பினது சாரமதும் ஆவின்பாலும்
　　கனியுள்நீ ரபிஷேகம் கருதிப்பண்ணத்
துரும்பென்ற பிறவிபோங் கேட்டதெல்லாஞ்
　　சுத்தருக்குக் கொடுத்ததினாற் சுத்தனுமே. (96)

சுத்தரது பாதத்தி லடித்துமெள்ளச்
　　சுருதியென்ற வுபதேசஞ் சொல்லுமென்று
உத்துநின்ற வனுக்கிரகங் கேட்டுக்கொண்டு
　　ஒருநாளுஞ் செபங்கள்செய்யா வுலுத்தமாடு
கத்தனே அவனுக்கு என்னசெய்வேன்
　　கருத்திரங்கி யின்னதென்று சொல்லவேணும்
பத்தனே யென்மகனே பண்புள்ளோனே
　　பகருகிறேன் விபரமுள வாசிபாரே. (97)

வாசியென்ற சேற்பஃதா லிறுக்கிக்கட்டி
    வளமான வைந்தெழுத்தின் குறடாவாலே
தோசியென்ற தேகமதை யடிக்கவேணுஞ்
    சுரணைவரும் வெட்கம்வரும் வாசிபார்ப்பான்
வேசியென்ற வெள்ளாட்டிப் பயல்களுக்கு
    வெகுவிதமாய்க் கண்டிதங்கள் செய்யவேணும்
மாசியென்ற மனத்தார்க்கு ஞானஞ்சொன்னால்
    வசவாலு மடியாலுந் தேத்தவேண்டும். (98)

தேத்துகிறேன் நிராமயமே குருவேயையா
    செப்புகிறே னின்னுமொன்று தெளியச்சொல்லும்
வாத்துகிற பேருலகி லனேகம்பேர்கள்
    வண்மையுடன் பெரியோர்க ளென்பார்மெய்யோ
சாத்துகிறே னென்மகனே தயவுள்ளோனே
    சடைகட்டி காவிகட்டி விபூதிபூசி
கூத்துவன்போ லூர்தனிலே திரிவான்மட்டி
    குருடனென்ற மாடதனை நம்பிடாதே. (99)

நம்பினே னுன்பாதங் கதிவேறில்லை
    நாட்டிலே யும்மைப்போற் குருவாரையா
தும்பியென்ற முனையோனே தூசைதன்யம்
    துலங்குகின்ற மதியோனே சொரூபவானே
கொம்பின்முனை மீதினிலே யூறுந்தேனே
    கோஷ்டியே வாரியுண்ணுங் கொள்கையோனே
தம்பிரான் மவுனத்திற் சார்ந்துவாழுந்
    தயாபரனே நிற்குணனே தயவுள்ளோனே. (100)

தயவுள்ள குருநாதா வின்னுமொன்று
    தன்மையுடன் சொல்லுகிறே னருளவேணும்
வயமுள்ள கயிலாய மென்பதெங்கே
    வளர்கின்ற வைகுண்ட மென்பதெங்கே
ஜெயமுள்ள வென்மகனே சொல்லக்கேளு
    தேயுவென்ற கண்முனைகை லாயமாச்சு
சுயமுள்ள மனமென்ற நாடுதானே
    சொற்பெரிய வைகுந்த மாகும்பாரே. (101)

வாகுமிந்த மனிதரிலே ஞானியாகி
மைந்தர்களைப் பெற்றதினாற் பிறவியுண்டோ
ஆகுமென்ற குருநாதா சொல்லவேணும்
அடிமைக்குச் சமுசயமு மறியவேணும்
ஏகுமந்த வென்மகனே யியம்பக்கேளு
ஏகாந்த பிரமமிதே தகப்பனாச்சு
யூகமந்தப் பிரபஞ்சம் பிள்ளையாச்சு
உத்தமனே தெய்வமது பிறவார்தானே. (102)

பிறவார்கள் தெய்வம்போற் பெரியோரையா
பெற்றுலகிற் கோடிபிள்ளை பெற்றாலுந்தான்
இறவாதே பிரமத்தின் மனமேயண்டம்
இதமான தகப்பனது விந்துபிள்ளை
மறவாதே பிரமமது சகமாகாது
மதியுள்ள தகப்பனது பிள்ளையாகா
திறமான மவுனியத்தை யறிந்தநல்லார்
திருமூர்த்தி பிறந்தாலு மிறவார்தானே. (103)

தானென்ற இன்னூலைப் படித்தபேர்க்குச்
சகலகலை ஞானமெல்லாந் தானேதங்கும்
வானென்ற அம்பரத்தி லிருக்கலாகும்
மதியமுத மானகற்ப முண்ணலாகும்
பானென்ற வென்னூலைப் பழித்தோன்கெட்டுப்
பாவியென்ற நாய்சென்மம் பிறந்துபோவான்
வேனென்ற வெறிகொண்டு பேயனாவான்
விந்துவழிப் பிள்ளையெல்லா மூமையாமே. (104)

ஊமையென்ற வக்ஷரமாஞ் சுடலையாடி
உண்மையுள்ள சிஷனெனச் சுப்ரமணியன்
ஊமையென்ற விவரமெல்லாஞ் சொன்னேனப்பா
உண்மையாய் மனதில்வைத்து ஊணிப்பாரு
மேன்மையென்று சேதியெல்லாஞ் சொல்லிவிட்டேன்
மேதினியில் விவரமெல்லாம் விளம்பிவைத்தேன்
சீமையென்ற மவுனியத்தின் பெருமையெல்லாஞ்
செப்பினேன் நீயறியத் திறந்துகொள்ளே. (105)

கொள்ளென்ற மும்மூலஞ் சொல்லிவிட்டேன்
குறியுள்ள வெட்டெழுத்தின் கூத்தைச்சொன்னேன்
விள்ளென்ற மவுனியத்தைச் சொல்லிவைத்தேன்
விதமான தசதீக்ஷை மார்க்கஞ்சொன்னேன்
கள்ளென்ற வமுதத்தை யுண்ணச்சொன்னேன்
கருவான கீழாறின் விவரஞ்சொன்னேன்
தெள்ளென்ற மேலாறின் வகையைச்சொன்னேன்
திறமுள்ள வஞ்செழுத்தின் றிறஞ்சொன்னேனே. (106)

சொன்னதொரு வாமத்திற் பூசைசொன்னேன்
சொற்பெரிய வாசிபுட நேர்மைசொன்னேன்
முன்னோர்கள் சக்கரத்தின் பூசைசொன்னேன்
முந்தினதோர் கற்பத்தின் விவரஞ்சொன்னேன்
வன்னமென்ற வைம்பூதக் கலையைச்சொன்னேன்
வாகாக அதில்நிற்கு மெழுத்துஞ்சொன்னேன்
பொன்னென்ற கயிலாய விபரஞ்சொன்னேன்
பொறுமையுள்ள வைகுண்டம் பேசினேனே. (107)

பேசியதோ ரென்னூலைப் பேணிப்பாரார்
பெரியோர்கள் வாக்கியத்திற் சீட்டோவென்பார்
தாசிமகன் வாயினில்நீ மண்ணைப்போட்டுத்
தையலுக்கு முதவாத சோட்டாற்சண்ணு
தேசிகனார் திருவடியை அறிந்தபேர்கள்
ஜெயமான ஞானியர்க்கு என்னூல்விள்ளும்
பாசிமன மடையருக்கு விள்ளாதப்பா
பக்குவமா யின்னூலைப் பதனம்பண்ணே. (108)

சுப்பிரமணியர் ஞான சைதன்யம் ௱அ.

முற்றிற்று.



☞ சுப்பிரமணியர் ஞானசாஸ்திரங்கள் நம்மிடம் அநேகம் ஓலை ஏட்டுப் பிரதியிலிருப்பினும் தற்போது இதிற் சிலதை அச்சிட்டிருக்கிறோம். மற்றவைகள் இரண்டாம் பாகத்தில் வெளியிடக்கூடும்.

திருமங்கலத்திற் சிறப்புற்றோங்கும் வயித்தியர் குமரகுருபரப் பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

பரமபதி துணை.

முப்பத்தோராவது:

போகமஹாரிஷி திருவாய்மலர்ந்தருளிய

# ஞான சூஸ்திரம் க.



பாத்தாலே ஓரெழுத்தைச் சொல்லக்கேளு
பாட்டிலே முடியாது பரிவாய்ச்சொன்னேன்
கீத்தாலே கீறிரண்டு சுழிதானிட்டுக்
கீத்தடியிற் சித்தரியைக் கெணித்தாயானால்
ஆத்தாளும் அப்பனுமுன் வசமாயாவார்
அகிலமெல்லா முனக்கெதிரோ அறிவாய்ப்பாரு
நீத்தாலே தினசரிதான் கீறிக்கொண்டு
நிஷ்டையிலே யிருந்துமனம் நேசிப்பாயே. (1)

போகர் ஞான சூஸ்திரம் க.

முற்றிற்று.





திருப்பழனிமலையிற் சிறப்புற்றோங்கிய ஸ்ரீ போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் மகாகைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீதேண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமி யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை

முப்பத்திரண்டாவது:

போகமஹாரிஷி திருவாய்மலர்ந்தருளிய

# சமாதி தீட்சை ய.



பொருந்திடும் வட்டம் பூவிதழ் யகாரம்
திரிந்திடும் வாசி செலுத்திய அவ்விடஞ்
சொரிந்திடும் நாலுஞ் சொக்கிடும் வெளியிடும்
இருந்திடு மூல மிருத்திநீ யூதே. (1)

ஊதிட வாயு வுகந்த கருநிறம்
போதிட வுந்தியிற் பொருந்திய தாகச்
சாதிடக் கருப்பறுஞ் சார்ந்திடச் சிகப்பாம்
வாதிடச் சமாதி வளர்ந்திடுந் தானே. (2)

தானென மண்டலந் தாக்கிநீ ஆதிடக்
கோனென வழலைக் குமட்டிக் குருவாம்
மேனென மெய்ப்பொரு ளெடுத்திடு மப்பலம்
வானென நிமிலை வடியிடுஞ் சமனே. (3)

சமனெனு முயிர்ச் சார்ந்த யிடையிடு
தமனெனுட் டிக்கறுப்புத் தாக்கிடு அவ்விடை
கயனெனு பாத்திரம் கடுவங்க மாகும்
அமனெனு சமாதி அடைப்பது தானே. (4)

அடைப்பது பெட்டி மூடியு மடவாய்
திடப்பது மூடித் திறந்திடு அக்குழி
கடைப்பது அறுசாண் கலந்தி டிபாதி
திடப்பது பற்பந்தி சயகீழ் மேலிடே. (5)

இட்டே முச்சாண் யியல்வாய் வுசத்தி
கட்டே சத்தியுங் கண்டருஞ் செய்து
உட்டே வன்பூசி யுள்ளத்துக் குள்ளே
திட்டே எண்மண்டலந் தீத்திடுஞ் சமாதியே. (6)

தீத்திடுங் காலந் திறப்படத் தயிலமாம்
போத்திடும் நந்தி பொருந்தி யுரைத்தது
கூத்த னுதைபடக் கூறின காரணம்
ஏத்திடுங் காய மிருக்குஞ் சமாதியே. (7)

இருக்குமே வாயு இயத்திடி லாண்டு
குருக்குள தேகங் கோடி ரவியாம்
முருக்குமே காய மூன்றூழி காலம்
வெருக்குமே ஆசை·வேண்டாகும் பாரே. (8)

பாரே கண்டத்தில் பாரிதி லாருள்
நேரே வாய்வு நின்ற வெழுத்தை
ஊரே சீவன் உயிரது பாரு
காரே உயிரைக் கட்டுநீ மூக்கென்றே. 9)

அன்றே நோக்க அடைப்படுந் தசவாய்வு
உன்றே நந்தி ஒளியிடுஞ் சோதி
அன்றே நீகண்டு அகன்றிடும் வல்வினை
இன்றேதான் காய மெத்தனை யுகமோ. ))

போகர் சமாதி தீட்சை ம்.

முற்றிற்று.



ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த மம்மதுசாயபுபுரம் வயித்தியம் சங்கரலிங்கம் பட்டங்கட்டியார் குமாரர் ஏ. எஸ். அழகுமுத்துவயித்தியரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதிபின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

முப்பத்து மூன்றாவது:

போகமகாரிஷி திருவாய்மலர்ந்தருளிய

# ஞான சூஸ்திரம் அ.



ஒன்றான வேதாந்த சூத்திரந்தான்
ஓதுகிறேன் ஆதியுமை பாதம்போற்றி
நின்றான வைப்புமுதல் வாதஞானம்
நீங்காத பிராணாயம் குளிகைநீத்து
நன்றான கருவித்தை யாகச்சொல்லி
நாட்டுகிறேன் துலாத்தோர்க்குங் கன்னியோர்க்குங்
கன்றான ஆறுதல மட்சரந்தான்
கைமுறையாய்ச் சொல்லிவிட்டேன் காணும்வாறே. (1)

காணப்பா முந்தியதோர் வழலைமார்க்கங்
கருஞ்சாலு வேப்பிலையுங் கலந்துவூட்டு
பூணப்பா அயக்காந்தம் ஆறுதிங்கள்
புகழாகக் கொண்டபின்பு பிலத்துக்கொண்டு
ஊணப்பா கற்பமெல்லாம் பின்னேகொள்ளு
உத்தமனே தீட்சையது முன்னேகொள்ளு
ஆணப்பா கொண்டாக்கால் வலப்பாலாகும்
அப்பனே பெண்தனக்கு யிடப்ப லாமே. (2)

ஆமப்பா பிராணாயக் கருவைக்கேளு
அப்பனே வங்குசிங்கு இரண்டுங்கூட்டி
தேமப்பா மயேஸ்பரத்தின் நிலையிற்றுக்கித்
திரிகோண வரைதனிலே யெழுத்துமூணி
ஊமப்பா யேத்திவிட யேழுலட்சம்
உத்தமனே நகாரமது மகாரமாகும்
வாமப்பா வாதமெல்லா முனக்குள்ளாச்சு
வாகான குருபதத்தை வணங்கிக்காரே. (3)

காத்திருந்து குளிகைசெய்து விழுங்கிவிட்டேன்
கருத்தறியா மூடர்களைச் சேர்த்திடாதே
பாத்திருந்தேன் பாங்கியுட னாட்டிற்றனே
பன்னீரா யிரமாண்டு யிருந்தேனப்பா
வீத்திருந்தேன் விந்துவைத்தான் ஊட்டிக்கொண்டேன்
விந்துவுடன் போகரென்று பேரும்பெற்றேன்
மாத்தருந்துங் குளிகையைப்போல் தேகமாச்சு
வந்துவிட்டேன் பொன்னுலகில் வாழத்தானே. (4)

தானென்ற சவுக்காரத் திறவுகோலைச்
சாத்துகிறேன் கருங்குண்ணி ஆதியுப்பும்
தேனென்ற நவச்சார மங்கேவைக்காய்
சேர்த்தல்லோ ஆட்டியொரு சாமமாட்டு
பானென்ற கெவுரியுட குகையில்வைத்துப்
பதித்துவிடு மூன்றெருவிற் புடமேதிரு
கானென்று வெளுத்துவிடுஞ் சுண்ணமாகும்
காசினியில் மானிடர்க்குக் காட்டொணுதே. (5)

காட்டான அஞ்சனத்தைச் சொல்லக்கேளு
கருங்குருவி பச்சோந்தி தேத்தான்வேரும்
பூட்டான செவ்வலரி கீழ்வரநெல்லி
புகழான காக்கைக்கண் பூனைக்கண்ணு
தேட்டான கூகைக்கண் ஆந்தைக்கண்ணு
சேர்த்தல்லோ வுலர்த்தியதைக் கருக்கிக்கொண்டு
ஆட்டான ஆட்டெல்லாம் பாதாளத்தில்
அழுத்தியதோர் தனமெல்லாம் ஆளலாமே. (6

ஆமப்பா சவுக்காரச் சுண்ணந்தானே
அய்யிரண்டு மாத்தாகும் அமுரிவிட்டுத்
தாமப்பா முறையோடே செய்தாயானல்
சரக்கெல்லா மதினலே சிவப்புமாகும்
நாமப்பா சொன்னேமென் றெண்ணவேண்டாம்
நாதாக்கள் சொன்னதுவு மிதுதானென்பர்
ஓமப்பா அதனேடே துருசுச்சுண்ணம்
உத்தமனே கூட்டிவிடப் பதினெட்டாச்சே. (7)

ஆச்சப்பா யென்றனக்கு வுபதேசித்து
அப்பனே அமுரியது வாங்கிக்கொண்டு
பாச்சப்பா கல்வத்துக் கிதுவேயாச்சு
பாடியதோ ரிக்கருவை மறைத்தாரப்பா
ஓச்சப்பா யிந்தவுப்புக் குகையினுள்ளே
உத்தமனே அருசமது சுண்ணமாச்சு
மூச்சப்பா குருவெல்லாம் வெளியாய்ப்பாடி
மூடித்துவிட்டேன் யேட்டினுள்ளேமூட்டுவீரே. (8)

போகர் ஞான சூஸ்திரம் அ.

முற்றிற்று.





ஸ்ரீ வில்லிபுத்தூரைச்சேர்ந்த மம்முசாபுரம் வயித்தியம் சங்கர லிங்கம் பட்டங்கட்டியார் குமாரர் ஏ. எஸ். அழகுமுத்து வயித்தியர் அவர்களிடமிருந்த ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.

உ

ஹரி ஓம்.

முப்பத்துநான்காவது:

போகமகாரிஷி திருவாய்மலர்ந்தருளிய

# திருமந்திர ஞானம் ய.



காணவே மூலமது அண்டம்போலக்
காரணமாய்த் திரிகோண மாகநிற்கும்
பூணவே மூன்றின்மேல் வளையமாகும்
புறம்பாக இதழதுதான் நாலுமாகும்
நாணவே நாற்கமலத் தட்சரத்தை
நவிலுவேன் வயநமசி றீறீயாகும்
ஊணவே முக்கோணத் துள்ளோங்காரம்
உயர்ச்சியா மதற்குள்ளே அகாரமாமே. (1)

அகாரத்தின் மேலாகக் கணேசர்நிற்பார்
ஆதியொரு கோணத்தின் உகாரம்நிற்கும்
உகாரத்தில் வல்லபையாள் சத்திநிற்பாள்
ஒடுங்கியதோர் முனையொன்றிற் கதலுப்பூவாய்
எகாரமாய் முகங்கீழ்க்குண் டலியாஞ்சத்தி
யெனும்பாம்பு போலுருட்டிச் சீறிக்கொண்டு
சிகாரமாய்ச் சுழிமுனையோ டுருவிநிற்பாள்
திகழ்துரியா தீதமென்ற அவஸ்தைதானே. (2)

அவத்தைக்கு மிருப்பிடமும் மூலமாகும்
அந்தகத லிப்பூவெட் டிதழாய்நிற்கும்
நவத்தைக்கும் நந்தியனுள் வாயில்நிற்பாள்
நற்சிவமாஞ் சிகாரத்துக் கோடியானும்
வவத்தைக்கும் வாய்திறவான் மலராய்மூடும்
மைந்தனே யெட்டிதழி லெட்டுச்சத்தி
பவத்தைக்குச் சத்தியெட்டின் பேரேதென்றால்
பாங்கான அணிமாவும் மகிமாத்தானே. (3)

தானான கரிமாவும் லகிமாவோடு
 தம்பிரகா மியம்பிராத்தி யீசத்துவம்
பேனான வசித்துவமா மென்றசத்தி
 பேரெட்டுத் தேவதையுந் தளத்தில்நின்று
ஏனான இதழாலே மூடிக்கொள்வார்
 ஏத்தமாய் நந்தியைத்தான் காணேயாமல்
வானான வஸ்துவைநீ பானம்பண்ணி
 வங்கென்று வாங்கியே கும்பிட்டுதே. (4)

ஊதினு லெனதுசச்தி லகிரியாலே
 உலாவுவா ரிதரெல்லாந் திறந்துவிட்டுப்
போதினு லாயிசொன்ன யேவல்கேளு
 பூந்துபார் நந்திகண்டால் யோகமாகும்
வாதினுல் பத்தான வருஷத்துக்கும்
 வாசலையே திறவாமல் மூடிக்கொள்வான்
ஏதினு லிதுக்குள்ளே வாசிமாட்டு
 யிடத்தோடி வங்கென்று உள்ளேவாங்கே. (5)

வாங்கியே நந்தியிற்சிங் கென்றுகும்பி
 வலத்தோடி சிங்கென்று உள்ளேவாங்கித்
தாங்கியே வங்கென்று யிழுத்துக்கும்பி
 தளமான தெளிவாறும் வெளியாய்க்காணும்
ஓங்கியே மாணிக்க வொளிபோற்றோன்றும்
 உத்தமனே மூலத்தி னுண்மைகாணும்
தேங்கியே வல்லபையாஞ் சத்திதானும்
 சிறந்திருந்தாள் பச்சைநிற மாகத்தானே. (6)

பச்சைநிற வல்லபையைப் பணிந்துபோற்று
 பாங்கான வாறுக்கும் பருவஞ்சொன்னேன்
மொச்சையாய் மூலமது சித்தியானல்
 மூவுலகுஞ் சஞ்சரிக்துத் திரியலாகும்
கச்சைநிறக் காயமுமோ கனிந்துமின்னும்
 கசடகன்று ஆறுதலந் தன்னிற்றோன்றும்
துச்சைநிற வாதஞ்சொற் படியேகேட்குந்
 துரியத்தின் சூக்ஷமெல்லாந் தோன்றும்பாரே. (7)

பாரென்று புரியட்ட நாலிற்சேர்க்கும்
பளிச்சென்று மூலத்திற் சோதிகாணும்
காரென்ற தீபவொளி கண்ணேகூசும்
கணபதியுங் கண்முன்னிர்த் தனமேசெய்வார்
ஊரென்ற யோகத்துக் குறுதிசொல்வார்
உற்பனமாம் வாதத்தி னுண்மைசொல்வார்
நேரென்ற சதா சிவத்தின் நிலையுஞ்சொல்வார்
நீச்சென்று விட்டாக்கால் யோகம்போச்சே. (8)

போச்சென்று விடுகாதே மூலந்தன்னைப்
போகையிலும் இருக்கையிலும் மனத்தையூனு
பேச்சென்ற பிறர்சத்தங் கேளாப்பக்கம்
பிரத்திருந்து லட்சியத்தைப் பூட்டிவாங்கு
மாச்சென்று வாசியைநீ தவறுவிட்டாதே
மனந்தன்னை மூலத்தில் மருவிச்சேர்க்கும்
வேச்சென்று கடினம்போல் முன்னேகாணும்
விடுகாதே மாச்சலதாய் விரைந்துஉன்னே. (9)

உன்னியே பழகுமட்டுங் கடுசாய்க்காணும்
உட்புகுந்து பார்த்துவந்தா லுறுதிகூடும்
வன்னியே துலங்கமட்டும் மனஞ்சலிக்கும்
மாசற்ற வொளிவுகண்டால் மகிழ்ச்சியாகும்
பின்னியே பிங்கலையு மிடையிற்கூடும்
பேரான சுழினை தன்னில் நெட்டிட்டேறும்
நன்னியே நமன்வெருண்டு அப்பாற்போவான்
நாளெல்லாங் கடிகையுமாய் நாட்டமுற்றே. (10)

யோகர் திருமந்திர ஞானம் ம
முற்றிற்று



திருமங்கலத்திற் சிறப்புற்றோங்கும் வயித்தியர் குமாரகுருபரம் பிள்ளை யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவேதுணை.

முப்பத்தைந்தாவது:

போகமாரிஷி திருவாய்மலர்ந்தருளிய

# சிவயோக ஞானம் ௱௨.



காணுமற் போகாது யெங்கிடாதே
காலுமேதோ தலையுமேதோ வென்றெண்ணாதே
தோணுமற் றேணவைக்குங் கணேசன்மூலம்
துண்டத்தின் கீழ் நுனியி லொளியைக்கண்டால்
பூணுமற் பூணுகிற சுவாதிஷ்டானம்
புகழான அசபையிலே வொளியைப்பாரு
வீணான வீணல்ல சுழிணைக்கண்டம்
வேதாந்தத் துரியமிது மவுனிதானே. (1)

தானென்ற மவுனமணி பூரகந்தான்
சானகியும் மால்நிற்கும் ஒளியைப்பாரு
கானென்ற அனாகதமுங் கடைக்கண்பாரு
கதிரான ருத்திரன்றன் னொளியைப்பாரு
வானென்ற விசுத்தியிலே நுனியைப்பாரு
மகத்தான மயேஸ்பரன்றன் னொளியைப்பாரு
மானென்ற ஆக்கினையில் சச்சிதானந்தி
மணிமேவுஞ் சதாசிவன்றன் னொளியைநோக்கே. (2)

நோக்குகிற தோர்வகைகே ளொருபோதுண்ணு
நோக்காமற் பிங்கலையி லோடும்போது
நாக்குருசி சுவைபாகம் ஆறுங்கொள்ளல்
நலமான உமிநீரின் நீருங்கொள்ளல்
மூக்கினிலே பிங்கலையி லோடும்போது
மூட்டுவா யிப்படியே முக்கால்சொன்னேன்
பாக்குவெற் றிலையருந்திப் படியேகொள்ளல்
படுக்கும்போ திடக்கரத்தில் தலையைத்தாங்கே. (3)

தாங்குவா யனுபோகம் பிங்கலையிற்கூடு
சையோகஞ் சிவயோகந் தானேயாகும்
தூங்குவாய் மவுனமாய்த் தூங்குதூங்கு
சுயம்பிர காசமதில் நினைவாய்ப்பாரு
ஓங்குவாய் பிரணவத்தி லொடுக்கமாகும்
உயிர்பிழைக்க மேல்வாச லூடுதாக்கு
வாங்குவது யிடையூடு வாங்குவாங்கு
வளமான ரேசகந்தான் மேலேதாக்கே. (4)

தாக்கியப்பா மேல்வாசற் குள்ளேசென்று
சாக்கிரத்திற் கண்மூடி நிதமும்பாரு
நோக்கையா நொய்யாறும் நிர்த்தூளாகும்
நோக்காமற் பார்த்தபேர் கண்மூடாமல்
ஆக்கையா பொறியைந்து மடித்துத்தள்ளு
ஆனந்த மதியமுதஞ் சிந்துஞ்சிந்தும்
வாக்கையா பேசாதே சமாதிமூட்டு
மைந்தனே பூசையெல்லாம் வளங்குந்தானே. (5)

வளங்கொண்ட பரநேசம் நடுலாடத்தில்
வைத்துப்பார் விழியிரண்டும் மருவுங்காலம்
உளங்கொண்ட புரியென்பூ ரணமுமேலாம்
உருமையினு லொருவழியா லோடியேறு
குளங்கண்டார் நீருண்டு தாகந்தீர்த்துக்
கொண்டதுபோ லண்டியரு கிருந்துபாரு
களங்கொண்ட ஆரூட மவுனகெங்கை
கைமுறையாய்ச் சமாதியிது உரைக்குந்தானே. (6)

தானென்ற தியானமஞ்சு முன்னேசொன்னேன்
தராதலமாம் நிராதார மஞ்சினுள்ளே
கானென்ற தவ்விடங்கள் ஒளிகள்காணக்
கருவான தியானமது கண்டுசொன்னேன்
மானென்ற சத்தியைந்தும் சிவமொன்றான
மந்திரபீ சாட்சரங்கள் வைத்துப்பாரு
தேனென்ற சடாதார யோகத்துக்குத்
தியானமது கண்டுரைத்து வாசியூதே. (7)

வாசியிலே இடகலைபூ ரகந்தான்ரெண்டு
வளமான சுழிமுனையிற் கும்பகந்தான்நாலு
தேசியென்ற பிங்கலைரே சகந்தாமொன்று
திடமாகப் பௌரணையைத் தொட்டுநீயும்
ரேசியிந்த முறைஅம்மா வாசிதொட்டு
நிசமாக வளர்பிறையைத் தாக்கிமாறு
மாசியிலே பித்தநீர்ப் பாயாவண்ணம்
மதிபார்த்துக் கண்ணாலே நோக்குவாயே. (8)

நோக்குவது நிராதார மாறும்பாரு
நுனியான தமர்வாசற் குள்ளேதாக்கு
தாக்குவது ரேசகமாங் கண்டம்பாயும்
சத்தியிடை பாயாமற்பிங் கலைக்கேரேசி
போக்குவது மேல்வாசற் பூட்டுவிட்டாற்
பொறியேது மனத்தோடு பூதாதையா
ஆக்குவது வாசிதா ரணையதாச்சு
அப்பனே சுழிமுனையி லுறைத்துநில்லே. (9)

நில்லடா ஆக்கினைதா ரணையீதாச்சு
நிஷ்களமாம் விந்துவிட்டு நாதம்லங்கச்
செல்லடா திசைநாதங் கிளம்பும்போது
திட்டமாய்ப் பூரணமாய் மதியினுள்ளே
அல்லடா அமுதமங்கே கக்கல்கக்கல்
அடைவான அமுததா ரணையீதாச்சு
கல்லடா வுன்தேகங் காலன்மாண்டான்
காலென்ற பிங்கலையை ரவிதானுண்டே. (10)

உண்டரவி யாலேமதி யமுதமாச்சு
ஊதியே அனல்கொழுத்தி நோய்நீர்வேர்வை
கண்டதென அப்புத்தா ரணையீதாச்சு
கற்றேக மானதுதா ரணையாம்பூமி
விண்டதொரு மேல்வாசல் திறந்தபோது
விசும்பினுட தாரணையாம் வெளிச்சங்காணில்
அண்டமென்ன பிண்டமென்ன ரெண்டுமொன்றாய்
ஆனதுவே யிருவினையு மத்ததாமே. (11)

ஆமிந்த வாசிரவி யூடேசென்று
அத்ததுவே பிராணாய மையாசொன்னேன்
ஓமீந்த வாசிரவி மேலேயேறி
உடைத்திட்டால் பிரத்தியா காரமாச்சு
தாமிந்த வாசிரவி தன்னைக்கண்டோர்
சமாதியெங்கும் வியாபகமாய் நிற்குமப்பா
நாமிந்தப் பிர்மமதே பிரமந்தன்னை
நாடிநிற்கக் கெற்பம்பின் னடையான்முற்றே. (12)

பாகர் சிவயோக ஞானம் ௰௨.

முற்றிற்று.





மதுரையைச்சேர்ந்தஉத்தங்குடி உபாத்தியாயர் பொன்னுச்சாமி பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய எட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

கடவுள் துணை.

முப்பத்தாறுவது:

போகமஹாரிஷி திருவாய்மலர்ந்தருளிய

# ஞான பூஜாவிதி ௰௫.



பாரப்பா வாலைதனைத் தியானஞ்செய்யப்
பாங்கான நவகோண மிட்டுச்சூழச்
சேரப்பா யிருவளையம் வாசல்நாலு
சிகாரமுதல் றீங்கார மிட்டுநன்றாய்க்
காரப்பா கீழ்வாசல் கணபதியுங்கந்தன்
கருணையுள்ள செயவீர வாகுதேவர்
ஆரப்பா அரைகள்முதல் கிழக்குத்தொட்டு
அகாரமுடன் உகாரசவ் வகாரம்போடே. (1)

சவ்வோடே ஓங்கிலீங் காரமிட்டுத்
தடுத்துநின்ற மயேஸ்பரியை நடுவேவைத்து
செவ்வேதான் மும்மூலச் சூலம்போட்டுச்
சிகாரமுடன் வகாரமதிற் சிறக்கப்போட்டு
லவ்யவ்வும் உகாரமடி கீழேயிட்டு
லாவீனு வென்றுமுடி மேலேபோட்டு
வவ்வோடே யிருபுறமக் காரமும்போட்டு
வாலைதனை நடுவீட்டில் மதித்திடாயே. (2)

மதித்திருந்த வாலையுட வலப்பாகத்தில்
மயேசுரனும் விந்துவதில் வளையம்போட்டு
விதித்திருந்த மூலஓங் காரந்தன்னை
வீராக விடப்புறத்தே மேவிப்போட்டு
சதித்திருந்த வடுகனொடு துர்க்கைகாளி
சாமுண்டி மாலினியும் வராகிதானும்
விதித்திருந்த உன்மனையும் புவனைதானும்
வீறுக வாசலிலே வைத்துப்போற்றே. (3)

போற்றென்று ரெந்தைக்கு நந்தியீசர்
புகழாக யிந்தமுறை யெனக்குச்சொன்னார்
ஆற்றென்றுங் கொங்கணர்க்கு யானுஞ்சொன்னேன்
அப்படியே கண்டவர்க்கு மவருஞ்சொன்னார்
ஏற்றென்று பூரணத்தின் விசாலம்போல
யியல்பாகச் சித்தருமிப் படியேசெய்வார்
காற்றென்று வாலைதனை நித்தநித்தம்
கருணைமற வாமல்நீ பூசைசெய்யே. (4)

பூசையது செய்வதற்கு வாதஞ்சித்தி
பூண்டிருந்தால் காயசித்தி யோகசித்தி
ஆசையென்ற பேரின்ப ஞானமெய்தும்
அண்டபகி ரண்டமெல்லா மடியிற்போற்று
மாசையென்ற பலவிதங்க ளெல்லாம்வீழும்
மாறுவித மறியாமல் மாண்டார்சுவாமி
காசையென்றுந் தேடுகின்ற சண்டாளர்க்குக்
காணாது கெதியில்லை கடினந்தானே. (5)

காணாது நின்றுரைத்த வாலைதன்னைக்
கண்மூக்கு மத்தியிலே கருதிப்பாரு
தோணாது மற்றொன்று குருக்கள்பேதம்
சொற்பேதம் பொருட்பேதம் துறையோபேதம்
பூணாது வேதமொடு சாத்திரபேதம்
பொற்பதுமை போலிருக்கும் பொறிகள்வாடி
கோணாது நின்றவரே குருவைக்காண்பார்
குருக்காணா ரானைகண்ட குருடராமே. (6)

ஆமப்பா யிதுவல்லோ தீட்சையென்று
அறிவுடைய பெரியோர்க ளறிவிப்பார்காண்
ஓமப்பா மூலமந் திரத்தைக்கேளு
ஒருமொழியாய் மூலகுரு வுபதேசித்தார்
வேமப்பா ஐயென்றுங் கிலியுமென்றும்
வீறுடைய சவ்வென்றும் மூலமூன்றுஞ்
சாமப்பா சஞ்சிதம் பிரார்த்வகாம்யந்
தலைமாறி ஓலையிலே வரைந்திடாயே. (7)

வரைந்திந்த மூன்றெழுத்துந் தலைநூக்காக
வாள்கடுகு வெந்தயமும் வோமங்கூட
இரைந்துள்ளிக் காயமிவை ஐந்தும்நேராய்
இருசாம மரைத்ததனைத் தகட்டிற்பூசி
நிரைந்தபகை யாரென்று நாமஞ்சொல்லி
நிமிஷத்திற் றணல்காட்ட நீறிப்போகும்
பரைந்தபரை சிவனாலும் வெல்லப்போகா
பருத்திதனிற் பொரிபோலே பத்துந்தானே. (8)

தானென்ற பொருளைவிஞ்சை யென்றுசொல்வார்
தவமாகு மவமாகும் சராசரங்கள்
தேனென்ற மதுவாகும் ஆறுதலங்காணுஞ்
சித்தியுடன் குளிகைநன்றாய்ச் சிக்கிக்கொள்ளும்
கோனென்ற புவனையைநீ பூசைபண்ணக்
குறிப்பாகச் சொல்லுகிறேன் குவிந்துகேளும்
பாலென்ற மதுவோர்பால் பலகாரங்கள்
பாங்கான சித்தியென்று படைத்திடாயே. (9)

படைத்தல்லோ பதியவொரு சாட்சிகூட்டிப்
பராபரமாங் கடத்தைமுன்னே சுத்திசெய்து
அடைத்தல்லோ பாத்திரங்க ளேந்துவைத்து
அப்பனே தூபமொடு தீபமேத்தி
முடைத்தல்லோ புட்பவர்ச் சனையுஞ்செய்து
முறையோடே சித்தருட சாபந்தீர்த்து
விடைத்தல்லோ போகாமல் மனத்திடத்தால்
வீறாகப் பூசித்துப் பொசித்திடாயே. (10)

பொசித்தவுடன் சொக்கியிடும் பூரணத்திலன்பு
பொல்லாத பாவியென்றால் மாயைமூடும்
பசித்தல்லோ செத்தார்க ளுலகத்தோர்கள்
பசியாது வாலைதனைப் பணிவோர்க்கென்றும்
நிசத்தல்லோ யீராறு சமையத்தோர்கள்
நிதியத்தார் கெதியத்தார் மூடமானார்
கசிந்தாக்கால் கனிந்தாக்கா லெல்லாஞ்சித்தி
கனியாட்டா லொன்றுமில்லை கண்டபோதே. (11)

கண்டுகண்டு மனந்தேறி நிலையில்நிற்கக்
　　காரணமும் பூரணமுங் கலந்துபோகும்
மொண்டுமொண்டு இளைப்பாறி அனைத்தும்விட்டு
　　மூலமுதல் நடுவரைக்கும் முடிவிலேற்றித்
தண்டுமுண்டு செய்யாமுன் றெழுத்தைப்போற்றிச்
　　சச்சிதா னந்தமென்ற அறிவில்நின்று
தொண்டுசெய்யப் பரையுனது வசமேயாவாள்
　　துரியம்விட்டு அதீதமதிற் றொடர்ந்துகூடே. (12)

கூடியங்கே யவரவரைக் கண்டுபேசு
　　கூசாம லனவரதங் குழறியாடு
தேடியெங்கு மிந்தமுறை கிட்டாதப்பா
　　தேவிமுதற் சிவனங்கே நடனஞ்செய்வார்
நாடிநின்று வாடாதே யென்தாய்பூசை
　　நல்லவர்க்கு மெய்துமடா கன்மிக்கில்லை
பாடியிந்தப் பதின்மூன்று பாட்டுக்குள்ளே
　　பரபூசை சிவபூசை பகர்ந்தேன்முற்றே. (13)

போகர் ஞான பூஜாவிதி ௰௩.

முற்றிற்று.

—○○○—



மதுரையைச்சேர்ந்த திருமங்கலம் வயித்தியர் குமாரகுருபரம் பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை

முப்பத்தேழாவது:

போகமஹாரிஷி திருவாய்மலர்ந்தருளிய

# அஷ்டாங்க யோகம் உச.



பணிந்துநின்ற அஷ்டாங்க முறையைக்கேளு
பண்பாகப் பெரியோர்முன் பின்னாய்ச்சொன்னார்
அணிந்துநின்ற பிராணாயம் முதலாயுள்ள
அளப்பரிய பிரத்தியா காரந்தானும்
தணிந்துநின்ற பூரகரே சகத்தினூடே
தாழாத கும்பகமும் மூன்றுமொன்றாய்
கணிந்திடைபிங் கலைசுழியின் முனையினோடு
கலந்துநின்ற வித்திலொரு கருவைக்கேளே. (1)

கருவென்ன சையோகங் காமவித்தை
காணார்க ளுலகத்திற் கன்மயோகி
உருவென்ன கால்வேளை யுணரும்போது
ஓங்காரம் நின்றிடத்தே வித்தைப்பாச்சு
வருவென்ன வாவென்று வாங்கிக்கொண்டு
வாய்பேசா மூலத்தே மனதைவைத்து
தருவென்ன நீயென்ன யிரண்டுமொன்று
தடையறவே கேட்டதெல்லாந் தருகுந்தானே. (2)

தானென்ற சத்திதனைப் பூசைசெய்தேன்
தாரணியிற் போகரென்று பேருங்கொண்டேன்
ஊனென்ற யோகமென்சை யோகமப்பா
ஒருமனதா யொருநினைவா யுரைத்துக்கொண்டு
கோனென்ற சராசரங்கள் மாறியோடுங்
குறிப்பறிந்து நெறியறிந்து கூடுகூடு
வேனென்ற சந்த்ரனிற்பூ ரணந்தானானால்
வெருகாமி வெருபோகி பிராணனாமே. (3)

பிராணனு மென்றென் றுஞ் சாகாதப்பா
பேரான சயனத்தில் யோகங்கேளு
பிராணனுஞ் சராசரத்திற் சரிந்தாயானாற்
பின்னுமில்லை முன்னுமில்லை சுழியிலேலத்தம்
பிராணனென்ற கலவியிலே சையோகித்தால்
பிரியமிட்டு நீங்காது பெருமைமெத்த
பிராணனும் அனந்தலொடு எழுதல்தானும்
பிறந்துநின்ற சாய்ந்தலொடு சரிதல்நாலே. (4)

நாலென்ற கலவியிலே யோகம்நாலு
நல்லவர்க ளறிவார்கள் வீணர்காணார்
காலென்ற யிரண்டாலே காலைக்காட்டில்
கழியாது காயமப்பா கல்லுகல்லு
மாலென்றுங் கொள்ளாட்டால் காவடிபோலாகும்
மயங்கினால் நாக்கினிடை வந்துமீளும்
பாலென்ற சந்திரனும் பாலையுண்டு
பதையாமற் றிகையாமற் பாய்ந்துயேறே. (5)

பாய்ந்தேறி யிருக்கவென்றால் குளிகைகேளு
பரைநாதஞ் சிவ்விந்து இரண்டுங்கூட்டி
வாய்ந்தடியில் விழிமடவார் விந்திலோர்நாள்
வளமாக மத்தித்து வைத்துப்பின்னும்
சாய்ந்தலொடு சரிதலொடு எழுந்தலோடு
தவறாமல் மனிதனுக்குப் பூசிப்பூசி
காய்ந்தபின்பு காடையொரு புடத்தைப்போடு
கனகமா மணிக்கெவனக் குளிகையாமே. (6)

ஆமிந்த மனிதனுக்குச் சாரணையேகேளு
ஆயிரத்தெண் மூலியொடு சரக்கோடெட்டும்
ஓமிந்த காரத்தில்வைத்துப் புடமேசெய்தால்
ஓகோகோ சடத்தோடே வுயரத்தூக்கும்
தாமிந்த வரையாறுங் கடந்துபாயும்
தாயான உன்மனையைத் தாண்டியோடும்
போமிந்த அண்டபகி ரண்டத்தப்பால்
போய்மீளும் பூரணத்திற் பொருந்துந்தானே. (7)

தானென்ற ஞானத்தின் கருவைக்கேளு
　　தப்பாது நானுரைத்த தத்துவஞானம்
ஊனென்ற தேகத்துக் கிந்திரியம்பத்து
　　உற்பனமாங் காரணமொடு பதினாலுந்தான்
கானென்ற செடியொன்று தள்ளிப்போட்டுக்
　　காரணமாஞ் சித்தத்தே முனைமூலத்தே
வேனென்ற சயனநித் திரையேசெய்தால்
　　வினையில்லை சிவஞானம் விளங்குந்தானே. (8)

விளங்குகின்ற முன்னுரைத்த மணியைமைந்தா
　　[illegible]றாக அப்பிரகம் மாதர்விந்தில்
களங்கிதென்று அரைத்திந்த மணிக்குப்பூசிக்
　　கண்விடாச் சட்டியிலே கல்லுப்பிட்டு
முளங்குகின்ற உப்பின்மேல் மணியைவைத்து
　　முன்போலே யதின்மேலே உப்பையிட்டுத்
தளங்கிதென்று அடுப்பேற்றிச் சீலைமண்செய் து
　　தாய்பதத்தை அர்ச்சித்து யெரித்திடாயே (9)

எரித்திடுவா யிருசாமம் மூன்றுதீயும்
　　இறக்கியதை ஆறவிட்டு யெடுத்துப்பாரு
எரித்தெடுத்த செந்தூர முருக்கம்பூப்போல்
　　இருக்குமடா பணவிடைதான் தேனிற்கொள்ளு
எரித்திடுசெந் தூரமண்ட லந்தானுண்டால்
　　ஈரெட்டு வயதாமெவ் வணமாய்நின்று
எரித்தெடுத்த செந்தூர மொருமாவீய
　　இருநூறு தாம்புரந்தான் சொர்னமாமே. (10)

ஆமப்பா யிப்பொருளால் கோடிகாலம்
　　ஆடிக்கொண் டாடிப்பெண் ணுரைமேவி
ஓமப்பா யுகங்களைத் தனையோகானோன்
　　ஒருமனதாய்ச் சுழித்தியோடு துரியமாண்டில்
நாமப்பா தவசிருந்தோம் யோகஞ்செய்தோம்
　　நாதாக்க ளிக்குருவை நாடிக்காணார்
வேமப்பா அடியோடு முடிகள்தானும்
　　வேதாந்தம் கடந்தவிடம் விரைந்துகூடே. (11)

கூடியந்த நாதகற்பங் கொள்ளுமைந்தா
கோளில்லை நாளில்லை குறையுமில்லை
ஆடியந்த அம்பலத்தை நித்தநித்தம்
ஆயினுட ஆட்டெல்லா மறியலாகும்
தேடியந்த யிருவருட நிலையுங்கண்டால்
சிவமென்ன பரமென்ன தேகம்தேகம்
வாடிநின்று தேடாதே தன்னைப்பாரு
வடிவென்ன விந்துவுட வடிவுதானே. (12)

வடிவென்ன வாலையுட நாடிமூன்று
மணியுதர மத்தியிலே வளைத்துமூடி
வடிவென்ன யினமன்றி நிஷ்களங்கமாக
மகத்தான சோதியுடன் கலந்துநிற்கும்
கடிவென்ன யீராறு சமையம்விட்டுக்
காத்துநின்ற பூசையொடு தியானம்விட்டு
முடிவென்ன ஒன்றுமில்லை எல்லாம்மாயை
முன்னின்ற நீயல்லால் பொருள்காணேனே. (13)

பொருள்காணச் சக்கரத்தில் ஞானயோகம்
பூட்டினேன் அஷ்டாங்கம் புரிந்துசொன்னேன்
அருள்காண வழியொன்று விதுவேகாணும்
ஆயிக்கு மெட்டாது அறிவிற்காணும்
இருள்காணும் சமையத்திற் சேராச்சேர்க்கை
என்றுநின்ற வானன்றி யெல்லாமொன்றாய்
வெருளாமல் ஆரணத்தி லைக்கியஞ்செய்து
மேற்கொள்வாய் பானத்தின் பெருமைகேளே. (14)

பானமென்றும் வஸ்துவென்றும் அமுதமென்றும்
பாங்கான மதுவென்றுந் நீரமென்றும்
ஈனமுறுங் கள்ளென்றும் செயநீரென்றும்
இயல்பாகச் சாராயம் வெறிநீரென்றுங்
கானமுறுந் தேனென்றும் கன்மமென்றுங்
கரையற்ற லகிரிமன வேதியென்றும்
மோனமுறும் வாயுவென்றும் புகைநீரென்றும்
மூச்சற்ற மதியமுதத் தீய்நீர்தானே.

தீய்நீரும் திராவகமும் செயநீரென்றுந்
திறமாகத் தீர்த்தமென்றுந் தண்ணீரென்றுந்
தாய்நீராய் முத்திதனைக் கொடுப்போரென்றுஞ்
சாயுச்சிய மோக்ஷத்தைத் தருவதென்றுந்
தோய்நீராம் பூதங்கட் குயிர்தானென்றுந்
துரியத்தில் நடம்புரிந்த சோதியென்றும்
ஆய்நீரா யண்டபகி ரண்டத்தப்பால்
ஆதிவித்துத் தொடர்ந்துநின்ற மூலங்காணே. (16)

மூலமென்ற பானத்தின் மகிமைதன்னை
மொழிந்திடவும் நாவுமுண்டோ பாவுமுண்டோ
ஆலமுண்ட சிவன்தேவி தனையழைத்து
ஆறுபத்து நாலுசித்து மடியாராடக்
கோலமென்ற விதமேது மென்றுகேட்கக்
கோமாளை மாருடனே கூர்ந்துசொல்வாள்
ஞாலமென்ற பிரபஞ்ச பெரியோரெல்லாம்
நாதாந்தப் பிரணவத்தைப் பூசித்தாரே. (17)

பூசித்தார் சத்திதன் பாதமென்றும்
போற்றினு ராகையாற் சித்தியாச்சு
ஆசித்த பொருளெல்லாம் பானத்தாலே
யாடிடலாம் பாடிடலா மண்டரண்டம்
வாசித்த வாமமென்ற பெண்தானப்பா
வாதமாம் யோகமாம் ஞானமாகும்
நேசித்த காயசித்தாம் குளிகைசெய்து
நோரக அத்துவிதங் கடந்தபேச்சே. (18)

பேச்சென்ற பேச்செல்லாம் வஸ்துவாலே
பேசாதே மவுனமெல்லாம் வஸ்துவாலே
நீச்சென்ற பூரணமும் வஸ்துவாலே
நீங்காத ஐம்பூதம் வஸ்துவாலே
பாச்சென்ற பஞ்சகர்த்தாள் வஸ்துவாலே
பரமரிஷி தேவரெல்லாம் வஸ்துவாலே
மூச்சென்ற சித்தர்களும் முனிவருந்தான்
மூலமூல மென்றவஸ்துள் முடிவுதானே. (19)

முடியாத கருமமெல்லாம் முடிக்கும்பான
முக்கால முக்குணத்தின் முதலாம்பானம்
அடியார்கள் நினைத்தபடி நல்கும்பானம்
ஆதிவஸ்து மறுதிவஸ்து ரெண்டும்பானம்
விடியாத கங்குல்பக லாகும்பானம்
வேதாந்தப் பெரியோர்கள் விளங்கும்பானம்
குடியான குடிலமுதல் தத்துவமாம்பானம்
குருவாகி நிறைந்தபடி கூறினேமே. (20)

கூறியதோர் பானத்தால் பதங்களாச்சு
கோடான கோடிபேர் கொண்டபானம்
ஆறியதோர் காமுகரைக் கெதிகெடுத்தே
ஆளான நரகத்தில் மாட்டும்பானம்
தேறியதோர் தேட்டெல்லாம் பானம்பானம்
தெரியாம லுலகத்தோர் திகைத்தபானம்
மீறியதோர் கணபதியு முருகன்றானும்
வெற்றியுள ரவிமதியும் விள்ளக்கேளே. (21)

விள்ளுவேன் மன்மதனும் அஷ்டபாலர்
விசுவாமித் திரர்தேவேந் திரன்விண்ணோர்கள்
விள்ளுவேன் விஷ்ணுவும் வசிஷ்டர்தாமும்
வியாக்கிரம பாதர்முதல் பதினெண்பேரும்
விள்ளுவே னகத்தியருஞ் சைவர்தாமும்
வேதாந்தப் பெரியோரும் வேதியோரும்
விள்ளுவே னீரேழு லோகத்தோரும்
மென்கமல அர்ச்சனையால் மேலானாரே. (2

மேலான அர்ச்சனையாம் பானத்தாலே
மேதினியி லெட்டெட்டுந் தொழிலும்நன்றாய்க்
காலாலே கடந்துசென்றாற் போகலாகும்
கால்விட்டுத் தலையாலே நடந்தாராகிற்
சேலேது வனுவேதப் படிதானையா
திறமாகக் காலாகும் வாமம்வாமம்
ஆலால விஷமுண்ட ஈசனப்போ
அறம்பாவ மிரண்டுக்கு மாளென்றாரே.

ஆளில்லை யென்றுசொன்னார் பெரியோர்தம்மை
அழைப்பித்து யாவருந்தா னருள்சேராமற்
பாழ்புவன லகிரியொடு நாற்றமாயைப்
பாசமுடன் குரோதமத லோபமோகம்
விளாத ஆங்காரங் களவுகாமம்
வெஞ்சமருங் கொலைமுதலாய் வினையுண்டாக்கி
மாளாமல் மாளவென்று சாடம்நல்கி
மாநிலத்தி லீசருக்கா மென்றிட்டாரே. (24)

போகர் அஷ்டாங்க யோகம் உச.

முற்றிற்று.





திருப்பழனிமலையிற் சிறப்புற்றோங்கிய ஸ்ரீ போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் மகா கைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீதேண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமி யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன் துணை.

முப்பத்தெட்டாவது:

போகமகாரிஷி திருவாய்மலர்ந்தருளிய

# முப்புசூஸ்திரஞானம்௱க



வெண்பா.

முப்பாழுக் கப்பால் முதலான நிற்குணம்பா
ழப்பால் வழலை யறிவீரேல்—எப்போதுந்
தானவனாய் நிற்கும் சகலகுரு வானதொன்றும்
யானைமுகன் முத்தி யறி. (*)

முத்தியா மிடைபின் னோடு மூதறி சுழினை நாடிச்
சத்தியா மடியே பூரம் தானது காச்சும் பூவாம்
பத்தியாம் வழலை யுப்பு பானுவாஞ் சுழினைச் சுன்னம்
சித்தியா மமுரி கங்கை சேருறக் காச்சல் நாலே. (1)

நாலிரண் டாகும் பூவு ரண்டதாங் கல்லுச் சுண்ணம்
பானுறு வழலை யுப்பு பாரொன்று அமுரி தானும்
சீலமாஞ் சோட சந்தான் செய்முறை வீரம் பூரம்
மானுறு வெள்ளை சேர வளரெழு பிறவி யாமே. (2)

ஆமிந்த வழலை மூல மறிகிலார் தேசத் தோர்கள்
தாமிந்த வழலை செய்யார் தருவண்ணான் றன்னைக்காணார்
ஓமிந்தச் சவுட்டு வித்தை யுற்பன மறியார் வேறே
சாமிந்த உவர்ப்பூ வென்பார் சவுக்காரம் செய்வார் பாரே. (3)

பாரப்பா வுலக வாதி படுகிற பாடு பாரு
ஆரப்பா ரவியு மிந்து ஆடிது சுழினை யொன்றில்
வேரப்பா வழலைத் தீக்கண் வேதையாம் முப்புக் கூர்மை
வாரப்பா தேசந் தோறும் வளர்வது வுவராங் காடே.

காடெலாம் சவுடே யல்ல கருவான குருவைக் கேளு
நாடெலாம் நிலவுப் பானால் ராச்சிய மெல்லாம் பொன்னாம்
வீடெலாம் பொன்னே யாகும் வேதையுங் கோடா கோடி
போடலாம் வழலை மூலம் பொன்னடி சொல்லக் கேளே. (5)

கேளுநீ ஊச ரந்தான் கெடியுவர்ப் பானு பானு
வாழுவா யிந்நா பச்சை மதியுவ ருப்பு நாதம்
பாழில்லா யிடங்க ளுண்டு பருவதந் தானு முண்டு
வாழுமாம் பூமி நாதம் வளர்கின்ற தேசங் காணே. (6)

காணவே சொல்லக் கேளு கயிலாச மேரின் தெற்குத்
தோணவே தெட்ச ணாயம் சூழ்கின்ற தெற்கு வேலை
பூணவே கல்லார் மட்டிம் பூவளர் நிலங்கள் சொல்வேன்
நாணவே கிருஷ்ண தீரம் நதிமலைச் சார்பு மிங்கே. (7)

இந்திரன் மலையின் சார்பு யிடபமா மேரின் சார்பு
மந்திர கிரியின் சார்பு வளர்சாசி நதியின் மூலம்
விந்தமாம் பருவ தத்தின் விளைவதாங் கேதா ரத்துஞ்
சுந்தரச் சத்தி ரீகர் தோன்றிய அத்தி நாடே. (8)

அத்தினா புரத்தும் டில்லிக் கப்புற மிருக்குங் காசி
சித்திர பருவ தத்தும் சேரவே வங்கா ளத்தும்
முத்தியாம் கோகர் ணத்தும் முதுகிரி கூர்ச்ச ரத்தும்,
விந்தியா ரண்ய தேச மிலாடகன் னடமு மாமே. (9)

கன்னடங் கடப்பை நாடு கலிங்கமா வரங்க மக்கம்
தன்மலி ரங்க தேசம் சயிந்தமா பருவ தத்தும்
நின்மன மயங்கா வேரி நீள்நதி சோழ தேசம்
வன்மமா நாடங் கொல்லி மலையொடு குடுமி தானே. (10)

குடுமிமா மலைச்சுற் றெங்குங் கோகர்னங் கங்கை மூலம்
படுநதி பாண்டி நாட்டிற் பாருகீழ்க் கடல்மேற் பக்கம்
திடமுறும் ராம நாதஞ் சேர்ந்திடுந் துறையின் மூட்டு
வடுவலா தெலுங்கச் செட்டி வளர்குடி சிலம்பி நாடே. (11)

சிலம்பியோர் விஸ்வ கர்மன் சேரவே பரம்பன் தேசம்
வலந்தருங் காளி கோஷ்டம் மண்டபஞ் சூழல் பக்கம்

தலம்புகழ் பாண்டி நாட்டிற் சார்ந்திடுங் கோவ லற்கோ
பலம்பெறு கோசி கப்பெண் பரதெசி பிடாரி கண்ணே. (12

கண்ணகை காளி கோஷ்டம் காதலன் கம்பி யாளன் [டோர்
திண்ணகை தெலுங்கச் செட்டி தீர்க்கமாம் வழக்குங் கண்
விண்ணகை வளையற் செட்டி விடுப்பதோர் கங்க ணத்தாற்
பெண்ணகைக் கிணங்கச் சூடும் பெருங்கரு வளையல்தானே (13)

வளையலைக் காச்சுஞ் செட்டி வழித்தெறிந் ததுவும் பூவாம்
வளையலைக் காச்சும் வாதி வருநறை வழித்த பூவாம்
வளையலின் பூவே நாதம் மாட்டிடச் சார மாகும்
வளையலிற் சேர்ந்த கம்பி வளர்வெடி யுப்புச் சாமே. (14)

சாமப்பா சூடன் † கண்டர் தனிக்கட்டாய்க் கட்டிப் போகும்
சாமப்பா பாரை யுப்பு தருகிடும் சீன ராஜன்
சாமப்பா கற்பூ ரந்தான் சந்திர னுப்புக் கண்டால்
சாமப்பா பொரிகா ரந்தான் தனிநில வுப்பி னாலே. (15)

நிலவுப்பில் லெங்கு சேர்ந்தால் நேமிகைக் கங்க ணந்தான்
செலமதிற் கரையா துப்புச் சில்லுப்புக் கல்லுப் பாச்சு
பலநில வுப்பெல் லாந்தான் பழந்துகில் வெளுக்கப் பார்க்கும்
குலநில வுப்ப றிந்து கூறினள் சத்தி தானே. (16)

கூறிய சொல்லைத் தொட்டுக் கோடான கோடி சித்தர்
தேறினர் வாத சித்தி தேசத்தோர் காண மாட்டார்
மீறிய கன்ன கைக்கு விருதுகை வளையாய்ப் பூண்டு
பேறுள்ள சிவயோ கர்க்குப் பேணிக்கை காட்டி னளே. (17)

காட்டினள் லகிரி கொண்டு கைமுறை வழலை யாதி
நாட்டினள் நந்தி மூலர் காலாங்கி நாத ருக்குச்
சாட்டினள் யெந்த னுக்குச் சார்ந்திடு முப்பூ வண்ணம்
மூட்டினள் சோட சந்தான் முடிந்தபின் போக ரென்றே. (18)

போகமாம் விந்து நாதம் புகழ்பொன்னர் மன்னன் றானும்
ஏகமாங் காரை நீரை யிசைபஞ்சீ காண மாகில்
வாகதாம் பெண்ணு ளுந்தான் வாய்த்தபொன் நிறம்போல்மேனி
ஆகமாந் தொட்டு யேற அடியுப்பு முடிபூ வாமே.

† கண்டர் = துருசு.

பூவளம் பூமி நாதம் பொன்னடி யான பூமி
நாவளம் வழலை பூமி நாடியே பிறக்கும் போது
பாவளம் சில்லுப் பூவாய்ப் பறந்திடும் பாரு பாரு
காவளம் வழலை யுப்புக் கதிரவன் கண்ட நீரே. (20)

நீரது கோடா கோடி நிலைத்திட்ட வித்தை கோடி
நீரது நீறு முன்பே நிலவுப்புக் கோடிவித்தை
கூரது சாத்தி ரங்கள் கோடான கோடி வித்தை
வேரது சுண்ணஞ் சேர்ந்தால் வேதைகள் கோடி காணே. (21)

காணவே வழலைமார்க்கங் கைமுறை யாகச் சொல்வேன்
பூணவே முடிமூன் றாகப் புகலுமுப் பூவின் செய்கை
தோணவே மீன மேடந் தோன்றுநா ளுவராங் காட்டில்
நாணவே பொலிவாம் பூவை நயம்பெற வாரிக் கொள்ளே. (22)

வாருவாய் கல்மண் ணன்றி மகத்தான சிவமாஞ் சுண்ணம்
தேருவாய் இவர்தன் தேவி திரிசாதி அமுரிச் சாறில்
நீரினி லெடுத்துப் போட்டு நேசமாய் ரவியில் வைக்கப்
பாரினிற் பொங்கி நீறும் நீரெலாம் பண்பாய் வாங்கே. (23)

வாங்குவாய் கறுப்பில் லாமல் வளம்பெறச் சுத்திகேளு
ஓங்குரு வில்லாக் கன்னி ஊசிநீர் படிதானொன்று
பாங்குடன் உவர்ப்பூக் காலம் பரிவுடன் சாரப் பூவும்
சாங்கமாய்க் கரைத்து நீரிற் சார்ந்தபின் தெளிவி னாலே. (24)

நாலுநாள் தெளிவை வாங்கி நல்லதோர் பீங்கா னுள்ளே
சீலமாய் ரவியில் வைப்பாய் சென்னிற மாகு முப்பு
காலனுஞ் சாக்குக் கெல்லாம் கடுவுப்பு பத்துக் கொன்று
மூலமாஞ் சூடன் நீரும் மூட்டுவாய் முப்பூ வாமே. (25)

ஆமிந்த ஆதி முப்பு அரகரா சிவமாஞ் சுண்ணம்
தாமிந்த சிவத்துக் கப்பா சந்திரன் சத்தி கேளு
வேமிந்த ஆதித் தற்கு விளங்கிய பெண்டே யாகும்
நாமிந்தச் சத்தி முப்பு நாட்டுவேன் நிலவுப் பாமே. (26)

உப்பிது படிகம் போலே உவர்க்காட்டிற் சில்லுச் சில்லாய்த்
தப்பிலாக் கல்லுப் பென்று சாற்றுவார் பெரியோ ரெல்லாம்

அப்பினிற் கரைத்து நன்றாய் அஞ்சுநாள் தெளிந்த பின்னே
செப்பினேன் தெளிவை வாங்கிச் சிறப்புடன் ரவியில் வையே.()

வைத்திடச் சில்லுப் பாரும் மகத்தான இந்த்ரன் சத்தி
பொய்த்திடப் புகைமே கந்தான் புகையுறைந் திருந்த நீராம்
கைய்த்திட மஞ்ச ளாகுங் கடுஞ்சுண் ணங் கூடும் போது
மெய்த்திட ரெத்தம் போலாம் மெய்யவர் சத்தி தானே (28)

தானென்ற சத்தி பச்சை சதாசிவன் தேவி யாகும்
வானென்ற ஆகா சத்துள் மந்திரத் துள்ளே சிக்கிக்
கோனென்ற அரசன் தேவி குளித்தனள் மஞ்சள் வாடை
கானென்ற தேகம் புக்கிக் கன்னிகை முப்பூப் பூத்தாள். (29)

பூத்திட்ட பெண்ணு ளுக்குப் புருஷனு மூவர்ப்பூ வையா
சேத்திட்ட யிந்த்ர னுலே தியங்கினு ரிரவி சோமன்
மாத்திட்ட கன்னி தன்னுல் மாட்டிடு நாத நீராங்
கோத்திட்ட வுவர்ப்பூச் சாரம் கூட்டிட நாத நீரே. (30)

நீராகு மொவ்வொன் றுலே நிமிஷத்திற் பாரு பாரு
பாராகு மிடக லக்கும் படிகமாம் பிங்கலைக்கும்
ஆராகுஞ் சுழிமு னைக்கும் ஆதியாம் மாதர் பூத்தான்
ஊராகு மூவர்ப்பூக் காரம் உயர்சிவக் கார மென்னே. (31)

என்னவே யிருவ ருக்கும் ஏகமாம் நந்தி பீடம்
மன்னனும் மகார ராஜன் மவுனமாம் வழலை நாயன்
பொன்னதோ ரிரவி சோமன் போற்சச்சி தானந் தத்துள்
உன்னவே முலைப்பால் பச்சை யுண்டருள் புரிவ ரென்றே. (32)

என்றதோர் நந்தி சோதி யிலகிய படிகக் கல்லாம்
நன்றதோ ரடுக்குக் கெல்லாம் நாதனுங் கற்சுண் ணந்தான்
வென்றதோர் வெள்ளைக் கல்லை விளங்கவே சுண்ணம் பண்ணி
அன்றதோ ரப்பால் நீற்றி அமுரியும் படிதா னெட்டே. (33)

எட்டது கற்சுண் ணந்தா னேகமாம் படிதா னொன்று
விட்டதிற் கரைத்துப் பின்பு மேவுசத் தியையான் சொல்வேன்
திட்டமாங் கல்நா தத்துட் சிறக்கின்ற வன்ன பேதி
சட்டமாய்ப் பழச்சாற் றுள்ளே தனிச்சுத்தி யாகு முப்பே.(34

உப்பது பலந்தா னென்று உருகின்ற கல்லுப் பொன்று
செப்பினே னுருஞ் சொல்லார் தீர்க்கமாய் முப்பூச் சேர்க்க
வைப்பது பொடித்துப் போட்டு வாய்தனி லோடு மூடி
உப்பது படாதே பூமிக் குள்ளுறப் புதைத்துப் போடே. (35)

போடவே தசநாட் சென்றாற் புகழ்பெறப் படரு முப்பூ
நாடவே துவாத சத்துள் நலுங்காம லுப்பை வாங்கு
நீடவே ரவியில் வைப்பாய் நிசமாச்சு நந்தி யுப்பு
ஆடவே நாத நீராம் அறுபதுங் கட்டும் பாரே. (36)

பாருநீ வகார மூன்றாற் பகரொன்றிற் கோடி வித்தை
சேருநீ மூப்பு வாச்சு திறமுடன் மும்மூன் றாகக்
கோருநீ சத்தி யெட்டுக் கூத்திடை வாம பாகம்
காருநீ பகலோன் நாலுங் கடியதோர் சிவம தாமே. (37)

சிவசத்தி ரெண்டு ரெண்டாய் சேர்த்திரு கூறாய்க் கண்டே
சிவசத்தி பன்னி ரண்டிற் சேர்ந்தது நந்தி யுப்பு
சிவசத்தி பன்னி ரண்டுஞ் சேரிடை கலையின் றாலே
சிவசத்தி பன்னி ரண்டிற் சேர்நந்தி யுப்பி னாலே. (38)

நாலான பூர ணத்தின் சோதியை நாடிற் பின்பு
காலான புரியட் டந்தான் கதிரவற் குள்ள தாச்சு
மேலான ஒளிபா ழுக்குள் மேவியே வெளியு மாச்சு
பாலான விந்து நாதம் பரையிடஞ் சேருங் காலே. (39)

கால்குரு வாகப் பச்சை காமநீ ரமுரி வாய்நீர்
கால்குரு நாத விந்து காதினில் நஞ்சு வீரங்
கால்குரு வாகும் பூரங் காத்திடுங் கருவைப் பாரு
கால்குரு வாகும் பச்சைத் தலைவனைக் காண லாமே. (40)

காணலாஞ் சுருக்கா லக்காற் கால்குரு நவச்சா ரத்தாற்
காணலாந் தாருசுச் சுண்ணங் கடுங்காரச் செயநீ ரேத்திக்
காணலாம் அஞ்சு சுண்ணக் குகைதனிற் கூட்டி யூதக்
காணலாங் குருவைக் கண்டு களிக்கலா மொளிக்க லாமோ. (41)

ஒளிபெற வாசி யோகம் ஊட்டினாற் சிவயோ கந்தான்
வெளிபெறப் பூர ணத்தை மேவினா லவற்கே சித்தி

வழிபட வாதம் பார்த்து மனங்கெட அலைய வேண்டாம்
சுழிமுனை பெற்றோர்க் கல்லால் துரியமுங் கிடையா தென்றே()

என்றதோர் துருசுச் சுண்ணம் எவருக்கும் வாயா தப்பா
அன்றகத் தீசர் சொன்ன பூரண சூத்தி ரத்தில்
நன்றதோர் சுண்ணத் துப்பு நாட்டினார் கருத்தோ டாது
சென்றிட வுவர்ப்பூச் சத்தி சாரமுந் தெரியா தென்னே. (43)

என்னவே பெரியோர்க் கையா யிசைபெற வுரைகள் தோணும்
பின்னுமோர் சித்தர் கட்குந் தெரியாமற் புதைத்தார் பாரு [ன்
பொன்மகன் கொங்க ணற்காய்ப் பூமுப்பூ வெளியிற் போட்டே
தன்மகன் ஐஞ்ஞூற் றைம்பத் தெழுவர்க்குஞ் சாற்றி னேனே()

சாற்றினேன் நாதம் வாங்கச் சடலம்பொன் நிறமாய் வேணும்
மாற்றினேன் விந்து வாங்க மன்னவன் தேகம் பொன்போல்
ஆற்றினேன் மற்ற தேகம் ஆகாது பொன்வா யாது
மாற்றினேன் வாலை நாதஞ் சிவவிந்துக் கெவரு மாமே. (45)

ஆமென்றேன் மன்ன னுக்கு அறுபது வயது மட்டும்
போமென்றேன் பொற்கா யத்தாற் பொன்னது விளையு மார்க்கம்
தாமென்ற நாத விந்து தவத்தினா லெய்துங் காணூர்
நாமென்ற நூலை நன்றாய் நல்லவர் பார்ப்போர் தாமே. (46)

தாமத குணத்தை விட்டுச் சாத்துவீ கத்தைத் தோய்ந்து
வேமது நாதம் வாங்க மேனியின் படியே பார்த்துப்
போமது கண்ட பொன்னும் பொளிச் சென்னும் வங்கங்குத்தி
யேமமுங் காணு தென்று யேங்குவார் பின்புதானே. (47)

தானிதை யறிந்து கொண்டு சதுராக நாதம் வாங்கு
வானுறு விந்து பச்சை வாங்கவும் பொற்கா யந்தான்
பானுறு பெண்சா மந்தான் பகர்ந்திடப் பொற்கா யந்தான்
மேனியிற் கலப்பே யாகில் வெண்கல மாகும் பொன்னே. (48)

பொன்னது பூமி யாகும் பூமிதான் பெண்ணாள் நாதம்
மன்னவ னாசி நீரே வைப்பென வறைய லாகுந்
தன்னிய வமுதந் தியாஞ் சாற்றிடில் வாய்நீர் வாய்வாம்
மின்னிய ஆகா யந்தான் விந்தெனப் புகலுங் காலே. (49

காலூறு தலையுங் கண்டு கருவுடன் குருவுஞ் செய்ய
மேலூறு பூமி நாதம் விளைவதா முவராங் காட்டிற்
பாலூறு சிவமாஞ் சத்தி பரையெனு மழற்காட் டுக்குள்
சேலூறு மடுக்குக் காணுஞ் சிவநந்தி யாகு வானே. (50)

வானூறு சூட னென்று வாருதி யுப்ப தொன்று
கானூறு கல்லில் நாதங் கலிந்த யமுத பேதி
தேனூறு வீரம் கெந்தி திடமிது உறுதி சத்தி
ஊனூறு மமுரி யந்த்ரம் உமுரியின் பூவா முற்றே. (51)

போகர் முப்பு சூஸ்திர ஞானம் ௫௧.

முற்றிற்று





ஸ்ரீ வில்லிபுத்தூரைச்சேர்ந்த சுந்தரபாண்டியம் சாலிமகாரிஷி கோத்திரம் வைகுண்டராம மூப்பனாரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

முப்பத்தோன்பதாவது:

போகமஹாரிஷி திருவாய்மலர்ந்தருளிய

# ஞானகற்பசூஸ்திரம் ருச.



பூரண மான வடிநில வுப்புக்
காரண மான கறியுப்புச் சுத்திசெய்
வீரமும் பூரமும் வேதித் தரைத்திட
நீரது செயநீர் நீராட்டு வாயே. (1)

ஆட்டிப்பின் வில்லை யாதித்தன் கண்டபின்
பூட்டியே கோழிப் புடந்தனிற் சுண்ணந்
தீட்டிய சாரஞ் சேர்க்கச் சிவமாம்
மாட்டிய நீரில் வளர்பூர மாமே. (2)

பூரத்தைக் கொல்லப் பூநீரை யிட்டே
சோரவே யேழுநாள் தோன்றி யரைத்திடு
சீருடன் சிப்பியிற் செலுத்திப் பொதிந்துமே
சேர்புட மிட்டெடு செயபூர சுண்ணமே. (3)

வேறு.

பூரத்தில் வீரங் கூட்டிப் புதியதோர் பச்சைக் கேற்றிச்
சாரநீர் குற்றி வெய்யிற் சாத்திடச் சுண்ண மாகுஞ்
சீருள்ள துநுசுச் சுண்ணஞ் செயநீர்க்கு வைத்த பின்பு
யாரடா அவற்கு மீடு அப்பனே வேதை யோடே. (4)

போடப்பா தாரத் துக்குப் புதியநீர் விட்டு ஆட்டிச்
சூடப்பா வெள்ளி நூறு தோன்றியே யுருகும் போது
ஆடப்பா தார மொன்று அதிலிடப் பத்து மாத்தாம்
போடப்பா புடத்தி லேறும் பொன்னென்ன பசும்பொன் னுமே.

ஆமப்பா சரக்கே யெல்லாம் அப்படி யாட்டிக் கொண்டு
ஏமப்பா யினத்தைப் பார்த்து இடுவதில் வேதை காணும்

நாமப்பா கண்ணிற் கண்டோம்நலம்பெறப்பாடிப் போட்டோம்
ஆமப்பா செகத்தி லுள்ளோ ரறிந்தவ ரமிர்தம் பாரே. (6)

பாரப்பா புளிதா னூறு பகரிந்து சூட னென்று
சேரப்பா சீன மொன்று சேர்வடி யுப்பா றாக
நீரப்பா சாரம் ரண்டு நிலவுப்பு மூன்றுங் கூட்டிச்
சாரவே யரைக்கத் தண்ணீர் வெற்றிலைச் சாற்று லாட்டே. (7)

ஆட்டுவா யிரண்டு சாம மரைத்தபின் னமுரி தன்னால்
ஆட்டுவாய் மூன்று சாம மாட்டிப்பின் பழச்சாற் றாலே
ஆட்டுவாய் மூன்று சாம மறிவில்லை யாவி காண
மூட்டுவாய் உலர்ந்த பின்பு முழப்புட மிடவே சுண்ணம். (8)

சுண்ணந்தான் செயநீ ராகும் பணியினி லிருக்க வேணுந்
தண்ணியாஞ் செலத்தி லேதான் சவ்வீரம் பொடித்துப் போட்டு
வண்ணமாங் கடுஞ்சா ரத்தை யிந்தநீர் விட்டு ஆட்டி
வண்ணமாம் புடத்திற் சுண்ணம் வருஞ்செலம் பொழியும்பாரே

பொழிந்ததோர் தண்ணியைத்தான் புதியதோர் பச்சைக் கேற்ற
வெளிபெறச் சுண்ண மாகும் வேதையிற் கவர்கள் கோடி
அழிந்திடுஞ் சரக்க தெல்லாம் அப்பனே போக்கார் சொல்வார்
தெளிந்திடும் வாதம் பாரு சிதம்பரம் பூசிப் பாரே. (10)

பாருமுன் சார நீரிற் பரிவுடன் நாகஞ் சாய்ப்பாய்
ஊருமுன் செம்பு சாய்ப்பாய் உறவுற்ற யிரும்பு சாய்ப்பாய்
தாருமுன் னூறல் போகுந் தனித்தனி களங்குக் காகும்
வாருநீ பதினெண் மீறகாண் வகைவகை யினத்துக் கென்னே.

என்னவே சார நீரி லியல்புடன் துருசு தோய்த்துப்
பன்னவே ரவியிற் போடு பச்சைபோய் வெள்ளை யாகுங்
கன்னவே துருசு தானுங் கடுவெள்ளை யாகு மட்டுந்
தன்னவே துருசுச் சுண்ணஞ் சமத்தர்க்கு மெயதும் வாறே(12)

வாறுகே ளிந்த வெள்ளை வாங்கியே பலமே வைத்துத்
தேறுநல் வீரந் தானுஞ் சேர்த்தரைப் பலமே கூட்டிக்
கூறுகே ளகாரச் சுண்ணங் கூட்டரைப் பலமு மொக்க
வாறுகேள் சாரச் சுண்ண மதுவரைப் பலந்தான் போடே, (13)

போடுநீ யொன்றாய்க் கூட்டிப் புகழ்பட வேயலைரத்து
ஆடிய சரக்குக் கெல்லாம் அப்பனே சற்றே பூசி
நீடுநற் சார நீரில் நிலையுறத் துவைத்து வாட்டிப்
போடிடு சரக்குஞ் சாகும் பொன்னதாம் வேதை தானே. (14)

வேதையே காண வேண்டி விளங்கிய சூதந் தங்கம்
பாதையே கூட்ட நன்று பரிபோனால் வாதம் போச்சு
ஏதையே சொன்னா ரென்று இடும்பரே சூதந் தங்கம்
மாதையே மறந்தா யானால் வாதமும் மயங்கும் பாரே. (15)

மயக்காகுங் குடவன் றன்னை வாங்கியே சார நீரில்
தியக்காகக் காச்சித் தோய்நீ செயலுடன் பதினொன் றேதான்
தயக்காகத் துருசுச் சுண்ணந் தானது வீரச் சுண்ணம்
பயக்கறுஞ் சூதம் பூரம் பருங்கோழிப் பித்துங் கூட்டே. (16)

கூட்டிய வஞ்சு தானுங் குலாவிய யிடையைக் கேளு
ஆட்டியே வகைக்கோர் காசா யரைப்பது தானே கூட்டி
நீட்டிய குடவன் றானும் நீழ்பலம் பத்திற் பூசி
வாட்டியே புடத்திற் போட மாற்றேறிப் பொன்னு மாமே. (17)

பொன்னான குடவ னுக்குப் பூட்டுநா லொன்று பொன்னை
மன்னான காரங் குற்றி வளம்பெற உருக்கிப் பாரு
வண்ணான மாற்று மெட்டு மற்காவிக் குப்புக் கோடா
தன்னான ஆயி சொல்லச் சாதித்துக் கண்ட வாறே. (18)

வாறுகே ளுப்பு நீறும் வளம்பெறு சார நீறுந்
தாறுகேள் சரியாய்க் கூட்டித் தாக்கிடத் தயிரே யாகும்
வீறுகேள் சார மொன்று விளங்கிய காரம் ரெண்டு
ஆறுகேள் வீர மொன்று அதிலொன்று கண்டர் போடே. (19)

போடுநீ யாறுந் தூக்கிப் புகழுறு பலமே யாகுந்
தேடுநா யுருவி யுப்புச் சிறந்திடு சவுட்டு வில்லை
சூடுநீ சூட னோடு தொல்கடல் நுரையுங் கூட்டி
யாடுநற் சுண்ண மஞ்சு மரையரைப் பலமுங் கூட்டே. (20)

கூட்டிய முன்னீர் தன்னிற் குலாவிய தயிரை வார்த்து
ஆட்டியே யரைக்கக் கட்டு மப்பனே குளம்பு போல்வை

காட்டிலே கடலி னுள்ளே கல்லுப்பை யுடைத்துக் கொண்டு
தீட்டிய குளம்பு தோய்த்துத் தீக்குள்ளே வாட்டு வாட்டே.(21)

வாட்டிட வாட்ட வாட்ட வளம்பெற வுப்புச் சாகும்
மூட்டிட யுருவி யுப்பு முளங்கிய சூட ஞேடுந்
காட்டிடை கடலின் மேலே கவிழ்ந்திடு நுரையாய் மூன்றுந்
தீட்டிடை யமுரி விட்டுச் சிக்கெனத் துவைத்து வாட்டே.(22)

துவச்சிடுங் குளம்பு வத்திச் சுண்டியே சுருக்குத் தாக்க
யவச்சிடுந் தீயின் மேலே யமரியாய்த் தட்டு வாட்டும்
கவச்சுடு மாற்றி யாற்றிப் போட்டுநீ வாட்ட வாட்டப்
பவச்சிடு முப்புத் தானும் பரிவுட னடங்கும் பாரே. (23)

பாரிந்த வுப்பின் மேலே பாங்குடன் சவுட்டுச் சுண்ணம்
வாரிந்த வமுரி தானும் வாகுட னரைத்துக் கட்டிக்
காரிந்த மேலே யொன்று கடுஞ்சுண்ணச் சீலை சுற்றிப்
போரிந்த வுப்புப் பின்னே புகட்டிநீ புடத்தைப் போடே. (24)

போட்டபின் கவசம் நீக்கிப் புகழ்பெற்ற வுப்பை வாங்கி
நீட்டிப்பின் னுருக்கிப் பாரு நிலைத்தது மணி போலாடும்
ஆட்டிப்பின் னுருகா விட்டா லப்படி வாட்டிப் போடு
கூட்டிப்பா ருப்பின் வேதை கோடிக்குக் கோடி தானே. (25)

கோடியென் றுரைத்தே ஞனுங் கொளுவிடிற் கோடா கோடி
யாடிய குளிகை யாகு மறுபத்து நாலுந் தானுந்
தேடியே கெந்தி யோடுஞ் சேரவுஞ் சத்தை யாகுந்
தாடிய தங்கந் தொட்டுச் சகலமுங் குருவ தாமே. (26)

ஆமிந்த வுப்பை யிட்டு அரைத்திடு பழச்சாற் றாலே
காமிந்தக் காரத் தின்மேற் காட்டிடு நாலுக் கொன்று
சோமிந்து ரவியிற் போடு சொக்கியே வெளுத்துக் கட்டுந்
தாமிந்தக் காரந் தன்னைச் சாற்றினார் சீனர்க் கென்னே. (27)

என்னவே சீனந் தன்னை யெடுத்துநீ யினங்கள் மேலே
பன்னவே சென்டுக் கொன்று பழச்சாற்றாற் பூசிப் பூசித்
துன்னவே வாட்ட வாட்டச் சொக்கியே யெலும்பு போலாம்
வன்னமே யிருக்கும் பாரு மகத்தான கட்டு மாமே. (28)

கட்டிய வுப்பை நீயும் கலந்தரை பழச்சா றிட்டு
வொட்டிய சார மேலே யூணிடு ரெண்டுக் கொன்று
தட்டிய தணலின் மேலே சாங்கமாய் வாட்ட வாட்டக்
கெட்டியா யிறுகுஞ் சாரங் கெடிபடத் தங்க மாமே. (29)

ஆமிந்த வேதை மார்க்க மறைத்தாரே மூல மூர்த்தி
வாமிந்த வஞ்ஞாற் றுள்ளே வகைவகை யெல்லாம் பார்த்துச்
சோமிந்தைத் தரித்த யாயி சொல்லிட நூலி லூணிக்
காமிந்தக் கட்டு மார்க்கங் கடாவினேன் கைகண் டேனே. (30)

கண்டதோ ருப்பை விட்டாற் கட்டில்லை வாத மில்லை
கண்டதோ ருப்பை விட்டாற் கவனமுஞ் சித்தி யில்லை
கண்டதோ ருப்பை விட்டாற் கடுமாற்றுச் சற்று மில்லை
கண்டதோ ருப்பை யீசன் கயற்கண்ணிக் கருளி னாரே. (31)

அருளின வுப்பை நீயு மப்பனே தமரைப் போட்டு
மருளின வலக்க ரத்தில் மணியைநீ செபமே செய்யத்
தெருளின சத்த கோடி தேவதை சித்தி யாகும்
வருளின வாத முன்னே வாய்பொத்தி நிற்கும் பாரே. (32)

பாருநீ யுப்பே யொன்று பருகியே உருகும் போது
தாருநீ கார மொன்று தாக்குநீ உள்ளே வாங்கு
காருநீ ரெண்டுக் குள்ளே கடுஞ்சார மொன்றே போடு
சேருநீ மூன்றுக் கொக்கச் செயகெந்தி போட்டி டாயே. (33)

போட்டிடக் கெந்தி தானும் புகையாது உள்ளே வாங்கு
மாட்டிய குகைக்கு மேலே யப்பனே மண்ணைப் பூசி
நீட்டியே புடத்தைப் போடு நிலைகெந்தி குருவு மாகும்
ஆட்டிடச் சூதஞ் சாகும் ஐயனே அறிந்து பாரே. (34)

பாரிந்தக் குருவைத் தொட்டுப் பரிச்சிக்கிற் சொர்ணம் நீறும்
பாரிந்தக் குருவைத் தொட்டுப் பரிச்சிக்கில் லோகஞ் சாகும்
பாரிந்தக் குருவைக் கண்டாற் பதையாமற் சூதம் வீயும்
பாரிந்தக் குருவைக் கண்டாற் பலசரக் கெல்லாஞ் சாமே. (35

சாகவே சரக்கின் மார்க்கஞ் சாற்றினே னிதனைக் கேளு
மாகவே வுப்பு நின்று வளம்பெற வருகும் போது

போகவே வீரம் போடு போந்ததோர் தங்கம் போடு
ஓகவே வெள்ளி போடு ஒன்பதுங் கட்டும் பாரே. (36)

கட்டுமே பாஷா ணங்கள் கட்டிடு முப்பு நேராய்
மட்டுமே யறிந்து யீய வளங்கிய தசமாத் தாகும்
ஒட்டுமே வுப்பில் வேதை ஓடாது காவிக் கப்பா
பட்டுமே உருக்கில் லோகம் பளிச்சென்று பொன்னு மாமே. ()

அடையாத புளியி னுப்பி னளவெலாஞ் சொல்லக் கேளு
கிடையாத புளியி னுப்பைக் கேட்கினும் வல்லோர் சொல்லார்
குடையாத சீன முப்புக் கூடின தொருகை யாகும்
படையாத துருசுச் சீனம் பகரிது கையொன் றுமே. (38)

ஒன்றான யினங்களோடு வூட்டுநீர்ப் புளியு மொன்று
தன்றான நாக விந்து தானதாம் புளியு முப்புங்
கன்றான கெந்தி யோடு கல்லுப்புப் புளியு முப்பு
அன்றா னென்னைப் பெற்ற ஆயிக்குச் சொன்ன வாறே. (3)

வாறுகே ளுப்பே யீசன் வழங்கிய புளியே சத்தி
கூறுகே ளிரண்டி னாலே கொளுவிற்று வாத மெல்லாம்
மாறுகேள் கார சாரம் வழங்கிய மார்க்கங் கண்டால்
தாறுக ளாறுந் தாண்டித் தனிவெளிப் பாழு மாமே. (40)

ஆமென யின்னுங் கேளு அறைகிறே னறிந்த மட்டும்
தாமென வண்டத் துள்ளே தனித்தவெண் கருவே யுப்பு
வாமென மஞ்சள் தானும் வழங்கிய புளியே யாகும்
ஓமென மேவின் தோடு முசந்திடும் நாக மாமே. (41)

ஆமெனுஞ் சூத முப்பூ அப்பனே புளியும் கெந்தி
போமெனுங் கிளிஞ்சி யுப்புப் புகுஞ்சதைப் புளியு மாகும்
தாமது சங்கே யுப்புத் தனிச்சதைப் புளியுமாகும்
போமது நண்டே யுப்புக் குஞ்சதைப் புளியுமாமே. (42)

புளியுப்பு ரெண்டி னாலே பொருத்தது வர்த மாச்சு
புளியுப்பு ரெண்டி னாலே புரந்தது அண்ட மெல்லாம்
புளியுப்பு ரெண்டுங் கண்டாற் பெரியவ ரவரே கண்டாய்
புளியுப்பு ரெண்டுங் கூடிற் பேரண்டஞ் சுண்ண மாமே. (43)

சுண்ணத்தின் மார்க்கஞ் சொல்லத் துலையாது நன்றாய்த் தானும்
சுண்ணத்தை விட்டாற் கேளு சூதமுஞ் சாரஞ் சாகா
சுண்ணத்தை அறியா தார்க்குச் சொல்லிய வாத மில்லை
சுண்ணத்திற் பெருமை சொல்லச் சுந்தரர் மயங்கி னாரே. (44)

மயக்கமே தென்னக் கேட்க வகையாக ஆத்தாள் சொன்னாள்
தயக்கமே கார சாரந் தனித்திடு மார்க்கங் கேளு
மயக்கியே யுப்பே காரம் வழங்கிய புளியே சாரம்
பயக்கியே ரெண்டுங் கூடிற் பதையாமற் சாகும் பாரே. (45)

பாருநீ சரக்குத் தானும் பரிசிக்கிற் செத்துஞ் சாகா
சாருநீ யினத்தைக் கண்டு சரக்கெலாந் தாக்கிக் கொல்லும்
கோருநீ தங்கஞ் சூதங் கூட்டியே களங்கஞ் செய்யில்
வாருநீ வாய்நீ ரல்லால் மற்றொன்று மாகா தென்னே. (46)

என்னவே கார சார மியலறு பத்து நாலும்
என்னவே உபர சங்க ளிறுநூறு கார சாரம்
என்னவே நாத விந்தா லெடுத்தது கார சாரம்
என்னவே ஆத்தாள் தானு மியல்பினா லருளும் வாறே. (47)

வாறுகேள் புளியி னுப்பால் வளர்சரக் கறுபான் னாலு
வாறுகேள் புளியி னுப்பால் வளர்ந்தது உபர சங்கள்
வாறுகேள் புளியி னுப்பால் வளர்ந்தது நாத விந்து
வாறுகேள் புளியி னுப்பின் மார்க்கமும் தொலையா தென்னே.()

என்னவே சீனஞ் சார மெழுபூரங் கார மாகும்
பன்னவே சாரத் தோடே பரிசிக்கிற் சூடன் சாகும்
தன்னியங் கிளிஞ்சி காரந் தனிச்சாரந் துருசு மாகும்
மன்னிய காரம் வீர மாட்டலாஞ் சார மாமே. (49)

ஆமது யிந்த மார்க்க மறிந்துநீ யொன்றோ டொன்றே
தாமது சேர்ப்பா யாகிற் றனித்தனி சாகும் பாரு
மாமது கட்டுத் தேடி மயங்கிய மடைய ரேகேள்
போமது யிதுக்குள் வேதை பூட்டிநீ யறிந்து பாரே. (50)

வேறு.

அறியார்க ளெட்டுச் சரக்கையு மப்பா
அறியார்கள் யித்திர மாதியின் கூத்தை

அறியார்க ளறுபத்து றூஅு சாக்கும்
அறியார்முப் பூவை அறிந்தவன் வாதியே. (51)

வாதங்கள் பொய்யென்று மடவாதி சொல்லுவார்
வாதங்கள் காணு மடையர் புகலுவார்
வாதங்கள் சும்மா வருமோவு லுத்தர்க்கு
வாதங்கள் காண மதியமுதங் கொள்ளே. (52)

மதியமுங் கொண்டால் வாதஞ்சித் திக்கும்
அதிசய முண்டா மவன்புவி யாள்வான்
நிதிதன வானும் நேசனு மிவனும்
விதியை யறியும் படிபார்க்குள் மகிமையே. (53)

மகிமைய தாகும் வளர்முப்பூ வப்பா
மகிமைய தாகும் வளர்பூ குருவாகில்
மகிமையு ரைக்க மாத்தாணி சொல்ல
மகிமையு முற்றும் மகாபூ ரணமே. (54)

போகர் ஞான கற்ப சூஸ்திரம் ருச.

முற்றிற்று.



சதுரகிரி மகாலிங்கேஸ்பரர் கோவில் சாமியார் மகாலிங்கசாமி யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன்றுணை.

நாற்பதாவது:

போகமகாரிஷி திருவாய்மலர்ந்தருளிய

# ஞான சாராம்சம் ௱.



காப்பு.

சீருலவும் பொதிகைரிஷி பாதம்போற்றிச்
சிவகாமித் தாயார்பொற் பாதம்போற்றி
ஏருலவுந் தந்தைசிவன் பாதம்போற்றி
இன்பமுற்ற சித்தருட பாதம்போற்றி
பேருலவுஞ் சரசோதி நடனத்தாலே
பெருமையுள்ள சதநூலைப் பாடுதற்குக்
காருலவுந் திருமேனித் துதிக்கையானைக்
கணபதிசெந் தாமரைத்தாள் காப்பதாமே. (*)

ஆமென்ற போதத்தில் நிற்குணம்பாழ்
அதற்குள்ளே வெளியொளிபா ழதிலேபாழாம்
ஓமென்ற வொளிபாழில் வெளிபாழாகி
யுற்றதற்குப் பரமாகிப் பரத்துக்குள்ளே
தாமென்ற சிவமாகிச் சிவத்துக்குள்ளே
சத்தியாய்ச் சத்திக்குள் விந்துவாகி
நாமென்ற விந்துவுக்குள் நாதமாகி
நாதத்திற் சதாசிவனார் நாட்டங்கேளே. (1)

கேளப்பா சதாசிவத்தில் மயேசனாகிக்
கெடியான மயேசனிலே ருத்திரனாகி
வாளப்பா புரியஷ்டத் துடனேநாலும்
வளமாக விரிந்திந்தப் படிதானையா
ஆளப்பா ருத்திரனில் விஷ்ணுதோன்றி
அவருடைய வுந்தியிலே பிர்மாதோன்றி
நீளப்பா பிர்மாவில் வானந்தோன்றி
நிலையான வானத்தில் வாயுதானே. (2)

தானென்ற வாயுவிலே வன்னிதோன்றித்
தணலான வன்னியிலே நீருண்டாகித்
தேனென்ற நீருக்குட் பூமியுண்டாய்
செனிப்பிறப்பு மாயையினாற் கோடாகோடி
ஊனென்ற வுடம்பினது மெய்பொய்யென்ன
வுரைத்துநின்ற மெய்ஞ்ஞானப் பேர்தான்கோடி
நானென்ற ஆணுவத்தால் செனனமாச்சு
நான்போனால் மாயையெல்லா மகலுங்காணே. (3)

காணுகின்ற வாசிசித்தி குளிகைசித்தி
காயசித்தி முதலான சித்தியெல்லாம்
பூணுகின்ற சித்தருக்கு வந்ததென்ன
புண்ணொன்றாற் சொல்லுகிறேன் கேளுகேளு
ஊணுகின்ற பங்குனி சித்திரைக்குள்
ஞமுரியுவர்க் காட்டிலே புடவுக்குள்ளே
தோணுகின்ற பூவான சத்தியாலே
துடியான சிவமாகி யதனாலுப்பே. (4)

உப்பாலே வுற்பவித்த மூலியுப்பு
ஓகோகோ பிறந்ததப்பா வுண்மைகேளு
செப்பாதே கல்லானை யாறுக்குள்ளே
திறமாக மிதந்தகல்லுக் கம்பியுப்பு
அப்பாலே மூப்பூவுங் கூடிநின்ற
ஆதியென்ற வழலையினாற் சித்தனைத்தும்
கொப்பாலே யானைக் காதியான
கூர்ந்தவெடி யுப்புமெத்தக் கொடியநீரே. (5)

கொடியசுண்ணம் பிறந்ததெல்லாம் வெடியுப்பாலே
குணசலமாஞ் செயநீரோ சாரத்தாலே
நெடியதொரு மெழுகெல்லாம் முப்பதாலே
நேரான செந்தூரங் கெந்தியாலே
அடியான வர்னமெல்லாஞ் சூதத்தாலே
அதுக்குயிரே தென்றாக்கா லாதிதங்கம்
விடியுமுன்னே பூத்தபுஷ்பத் தாலேயெல்லாம்
மெய்யாச்சு பொய்யல்ல வேதைகேளே. (6)

வேதைக்கு வெடியுப்பு நீரைக்கேளு
விதமான கல்லாணைப் பலமோபத்து
பாதைக்குப் புளியெட்டுக் கூடச்சேர்த்துப்
பண்பான சீனம்பூ நாகம்நீலி
போதைக்குக் கற்பூரங் காரசாரம்
புகழாக வகைக்குவொரு கழஞ்சிகூட்டி
நீதைக்கு அரைத்துருட்டிக் கொளுத்துதீயில்
நீறியது சுண்ணம்பாய் நிலைக்கும்பாரே. (7)

நிலைத்தசுண்ணம் பதினாறுக் கொன்றுசாரம்
நீட்டியே வைத்திடுவாய் பனியில்நீராம்
இலைத்தநீ ரல்லவிது காரம்மெத்த
யிதனாலே கோடான கோடிவித்தை
மலைத்துவங்கந் தானுடையுஞ் சாரங்கட்டும்
வளமான துருசுக்குக் காரமுண்டாம்
கலைத்தவொரு வேதையெல்லாங் கைக்குள்ளாகும்
கருவாக இன்னமொன்று கண்டிடாயே. (8)

கண்டிடாய் பூநீருங் கம்பியுப்புங்
கலசமனாய்ப் பழச்சாற்றில் நன்றாயாட்டி
விண்டிடாய் அயக்கரண்டி தனிலுருக்க
வெள்ளுருக்குக் கட்டியைப்போற் கட்டிப்போகும்
கொண்டிடாய் சாரமொன்று பூவிரண்டு
குமட்டியே பழச்சாற்றி லரைத்துமுன்போல்
அண்டிடாய் காய்ச்சிடவே கட்டிப்போகும்
அதுவேறே யிதுவேறே செயநீராக்கே. (9)

ஆக்கினதீ ரிரண்டுமொன்றாய்க் கலந்துகொண்டு
அதற்குள்ளே துருசுடனே காரந்தோய்த்து
நோக்கினதோர் வெயிலில்வைக்கக் கட்டிப்போகும்
நுவலுகின்ற காரத்தாற் றுருசுச்சுண்ணம்
போக்கினதோர் துருசுவெள்ளை மூலிகைக்குள்
போட்டிடவே நீராகும் நீருக்குள்ளே
தாக்கினதோர் சாஸ்திரங்கள் சொன்னவாறு
சரக்கெல்லாங் கட்டிப்போ மெழுகுமாமே. (10)

மெழுகாலே கோடிவித்தை கோடாகோடி
　　வினையத்தாற் பார்த்தவருக் கெல்லாமாகும்
சுளுகாகச் சொல்லவில்லை யென்றுநீயுஞ்
　　சோம்பலாய் விட்டுவிட்டா லெல்லாம்பாழாம்
அழுகாம லிருக்கவென்று னெணிப்பாரு
　　அவரவர்கள் சாஸ்திரத்தைக் கருவாய்ப்பாரு
உழுகாமல் மூன்றையுந்தா னொன்றாய்ச்சேர்த்து
　　உத்தமனே யிருவேளை யுண்டிடாயே. (11)

உண்டுஉண்டு பிழைத்தவர்கள் கோடாகோடி
　　ஊர்விட்டுப் போனவர்கள் கோடாகோடி
விண்டுவிண்டு திரியாம லடக்கமாக
　　வேதையென்ற பாதையெல்லாம் பாருபாரு
கண்டுகண்டு சிவயோக மார்க்கத்தூடிற்
　　கலந்துகொள்வாய் தானவனாய்க் கருத்திலுன்னிப்
பண்டுபண்டு விட்டகுறை தன்னைப்பாரு
　　பார்க்கையிலே தோணுமப்பா பண்பாய்நில்லே. (12)

நில்லப்பா யிராப்பகலுஞ் சுழினைக்குள்ளே
　　நின்றாலே வாசிசுழிக் கேறுதையா
அல்லப்பா நினைவாக அனந்தனாடும்
　　அப்படியே நில்லுநில்லு அனேககாலம்
கல்லப்பா தேகந்தான் பிறவிபோச்சு
　　கயிலாசங் குடியிருப்பாய் வாய்க்கும்பாரு
செல்லப்பா சுழினைவழி குருபாதத்திற்
　　சென்றவர்க்கு வினையுண்டோ தெளிந்துகொள்ளே. (13)

தெளிவான பொதிகைவளர் சித்தனென்றார்
　　திக்கிலுள்ள சித்தரெல்லாந் தெண்டஞ் செய்வார்
களிவான சீவகளை யனைத்துங்கட்டும்
　　கட்டுகிற மார்க்கமெங்கட் குகந்தவித்தை
நெளிவான குண்டலிக்குள் நிலைப்போம்நாங்கள்
　　நிமிஷத்தி லண்டமெல்லாம் பாய்வோம்நாங்கள்
ஒளிவான மூலத்தி லெளும்பவென்றே
　　உள்ளத்தே யிறைகொடுப்போம் உண்மைதானே. (14)

உண்மையுள்ள சட்டைமுனி மூலநாயன்
உற்றதொரு காலாங்கி யோகநாதர்
வண்மையுள்ள கருவூரார் கொங்கணையர்
மச்சமுனி சுந்தரா னந்தமூர்த்தி
தண்மையுள்ள சித்தரெல்லாம் பொதிகைதன்னிற்
சற்குருவைக் கண்டுதொழ வந்தபோது
வெண்மையுள்ள கோரக்க ரென்னைப்பார்த்து
வேதாந்தப் பேரென்ன வென்றார்காணே. (15)

என்றவர்தான் கேட்கையிலே கும்பமூர்த்தி
யெடுத்துரைத்தார் சிவஞான போதரென்று
நன்றென்றே கோரக்கர் புலத்தியற்கு
நலமான பிள்ளையிவ னாகுமென்றார்
அன்றல்லோ சித்தனென்று பேரும்பெற்றேன்
அதற்குமுன்னே யுலகத்திற் சஞ்சரித்தேன்
சென்றுசென்று மீளுகிற கலையைத்தானும்
சிதறாம லேற்றுசிவ ஞானந்தானே. (16)

ஞானரிஷி போதரென்று பேரும்பெற்றேன்
நாதாக்கள் செப்பிமெச்ச நான்தானையா
மோனமுள்ள சாத்திரங்க ளனேகஞ்சொன்னேன்
முத்திபெற்றா ரதினாலே அனேகம்பேர்கள்
தேனமுத முண்டவனே சித்தன்சித்தன்
சிவயோகி சிவஞானி சிவபத்தன்றான்
மானமென்ன யீனமென்ன யிரண்டுமில்லை
மாசற்ற மனத்தோர்க்கு மகிமைதானே. (17)

மகிமைபெற்ற வாதிகளே சொல்லக்கேளீர்
மற்றொன்றும் பாராமற் றுருசைநீற்று
தகமைபெற்ற துருசாலே லிங்கங்கட்டி
தங்கத்திற் சேர்த்துருக்கிச் செம்புக்கீய்ந்து
அகிமைபெற்ற செம்பெடுத்து வெள்ளிக்கேற்ற
ஆறேழு காணுமப்பா நிலைத்தவேதை
விகிமைபெற்ற பேருக்குக் காண்பதில்லை
வேதாந்த நந்திகண்டால் வாதமாமே. (18)

வாதத்திற் சிங்கிவித்தை சொல்லக்கேளு
வயித்தியமுந் நூறில்குரு முனிவர்தானும்
நீதத்தாற் சொல்லிவைத்தா ருலகோர்க்காக
நெறிநின்ற கொங்கணர்தான் சரக்குவைப்பிற்
கோதற்ற பூமியென்றும் நிமிளையென்றுங்
குணமான குணபாக நாதமென்றும்
போதத்தில் முப்பேரு மிட்டொன்றாய்ப்
புதைத்துவைத்தார் போதையினாற் புலம்புறேனே. (19)

புலம்புறேன் பொதிகைரிஷி வாக்கினாலே
போதரிஷி யென்றழைத்த சந்தோஷத்தாற்
சிலம்புகொஞ்சம் பூம்பதந்தாள் சிவகாமித்தாய்
தெய்வமென்று போற்றிசெய்த திறத்தினாலே
நிலம்புகழுஞ் சித்தருக்கும் பெரியோருக்கும்
நிசமாகச் சொல்லுகிறேன் நினைவாய்க்கேட்க
நலம்பொருந்தும் பலதயிலஞ் சிங்கியல்ல
நாட்டமா யுருகிக்கீழ்ப் பாய்ந்ததாதே. (20)

தாதப்பா பலமொன்று பழத்தாலாட்டு
சாற்றின்பின் பழமென்ன சம்பழந்தான்
ஓதப்பா பீங்கானிற் கலக்கிவைப்பாய்
ஒரேழு தினம்ரவியி லுறவாய்நீறில்
ஏதப்பா மேலேபா லாடைபோலாம்
இதமாகச் சாறுவற்றி லூற்றிவைப்பாய்
போதப்பா மேற்படர்ந்து நீறிக்கட்டும்
புகழாக நீறினதை யுலர்த்திவாங்கே. (21)

வாங்கியிதிற் சேர்க்கின்ற மருந்துகேளு
வளமான சீனமென்ற வெள்ளையொன்று
ஓங்கியதோர் வீரமென்ற கெவுரியொன்று
உற்றரவி நாதமென்ற பூரமொன்று
தூங்காதே காரமென்ற சாரமொன்று
துடியாகச் சொன்னதிந்த நாலுநாலும்
பாங்குடனே நிறையென்ன சரக்கோர்காசு
பால்போலே நீறினது பலந்தானென்றே. (22)

ஒன்றான நீறதுவும் பூமிபூமி
உறைவெள்ளை யானதுவுந் தண்ணீர்தண்ணீர்
கன்றான பூரமதே அங்கிஅங்கி
நலமான கெவுரியது வாய்வுவாய்வு
குன்றான நவச்சார மாகாசந்தான்
கூடியொன்றாய்க் கலந்துபஞ்ச பூதமாச்சு
முன்றாதி யிதுநாலுஞ் சேர்த்தபோதே
மூவுலகுஞ் சொர்ணமய மாகிப்போச்சே. [23)

போச்சப்பா தரித்திரியப் பீடையெல்லாம்
புகழ்சூத ராசனுமோ கைக்குள்ளாச்சு
நீச்சப்பா போலிருந்த வாதவேலை
நிலைத்துநிந்தக் குருவாலே நிசமாய்ச்சொன்னேன்
பாச்சப்பா சட்டிக்குட் சீலைசெய்து
பரிவாக வொருசாம மெரித்தெடுப்பாய்
பேச்சப்பா பேசிவிட்டாற் பொன்னுண்டாமோ
பேய்ப்பிள்ளாய்யிக்குருவைப் பேணிவையே. (24)

வைத்தெடுத்த குருதன்னைப் பத்திரஞ்செய்
வளமான குருவதனில் வீரம்பூரம்
புத்தியுடன் புழுகிட்டு மத்தித்தேதான்
புகழான துருசுக்குப்பூசியாட்டச்
சத்தியமாய்த் துருசங்கே நீறிப்போச்சு
தாரணியி லிதைவிட்டால் தங்கமாமோ
எத்தனை தான் துருசுவித்தை சொன்னாலுந்தான்
இகத்திலுள்ளோர் புத்தியெல்லா மிருட்டுவீடே. (25)

இருட்டான வீட்டுக்கு ஞானதீபம்
ஏற்றினாற் றெரியுமையா யிரண்டுகண்ணும்
அருட்டானே யுருவான மனதுமொன்றாய்
ஆக்கினையும் நடுச்சாம மறிந்துபாரு
திருட்டான யிருளெல்லா மகன்றுபோச்சு
சிவஞானத் தீபமங்கே தோணலாச்சு
மருட்டான புத்தியெல்லாம் பறந்துபோச்சு
வாதமென்ற துருசுவித்தை யாடலாமே. (26

ஆமப்பா யிப்படியே கெந்திகூட்டி
ஐங்குகையில் வைத்தோட்டி லூதினுக்கால்
வேமப்பா நாறும்பூ நீற்றினாலே
விடுபட்ட மதயானை வீறிட்டேசாம்
ஓமப்பா யானையென்ற ரசத்தினாலே
யுயர்ந்தவரை கண்டார்கள் சித்தரெல்லாம்
நாமப்பா சொன்னதுபோற் சித்தரெல்லாம்
நாட்டினார் சூதவித்தை கோடிதானே. (27)

கோடியென்றால் தொகையாச்சு தொகைமட்டில்லை
கொடிதான கெந்திகட்டுஞ் சூதத்தாட்டு
வாடியே மயங்காதே துருசுவெள்ளை
வைத்தவர்க்குக் குறையுண்டோ வாதஞானம்
தேடியே திரியாதே முன்போலந்தச்
செய்குருவைச் சாரத்துக் கம்பியூது
ஆடியே வந்துநின்று சாரராஜன்
அடிவணங்கிச் சொன்னபடி கேட்பான்றானே. (28)

தானென்ற சாரநீ ரதிகமெத்தச்
சதகோடி வெகுகோடி தாண்டியேறும்
ஊனென்ற தேகமது வச்சிரதேகம்
யுகமென்றாற் கணக்கில்லை சிங்கியாலே
மானென்ற சவுக்கார வழலைக்கப்பி
வானிரவி கண்டாக்கா லெண்ணெய்கக்கும்
தேனென்ற சவுக்காரச் சுண்ணத்தாலே
செகமெல்லாஞ் சித்தாகச் சிறந்தவாறே. (29

வாறான கெந்திகட்டிப் பிடித்தசூதம்
மைந்தனே தங்கத்தோ டிணைத்துக்கொண்டு
சீறான நாகமிட்டுக் கெந்தியிட்டுச்
செந்தூரஞ் செய்தாக்காற் செகமெல்லாம்பொன்
கூறாதே திரிலோகம் நீறிப்போகும்
கோடிவித்தை செம்பிரும்பு வெள்ளிநீற்றால்
தேறாத பேருக்கு ஞானமேது
ஜெகமேது பரமேது ஜெனிப்புக்காணே. (30)

காணப்பா கலியுகத்தி லிந்தவித்தை
காட்டாம லடக்கினார் சித்தரெல்லாம்
சேணப்பா கொங்கணர்தா னுபாயமாகச்
செப்பினார் மகத்தான கருணைமூர்த்தி
தோணப்பா வென்றாலுந் தோணாதையா
தொண்டுசெய்தாற் கண்டுகொள்ளுஞ் சித்தனைத்தும்
பூணப்பா சித்தெல்லாம் கைக்குள்ளாகப்
பொற்சடையோ னாட்டியதைப் புகழ்ந்து பாரே. (31)

பாரப்பா துருசிலே வித்தைசொல்வேன்
பருவங்கச் சுண்ணத்தா லன்னீர்நீற்றிச்
சீரப்பா ரசஞ்சாரும் கோடிவித்தை
சிறப்பான வெடியுப்பாற் சாரங்கட்டி
நேரப்பா சாரத்தால் துருசுகட்டும்
நிலையான ஐங்குகையி லூதச்சுண்ணம்
காரப்பா யிதினாலே தொந்தங்கோடி
கருநாவி தன்னாலே துருசு நீறே. (32)

நீறான துருசாலே சூதங்கட்டும்
நிலையான மத்தங்காய்க் குள்ளேசாரும்
பேறான சூதத்திற் கோடிவித்தை
பின்னுமொரு கட்டுவகை சொல்லக்கேளு
ஆறான வுப்புத்தூள் விராகன்பத்து
அயக்கரண்டி யதனுள்ளே அதைப்பரப்பித்
தூறான துருசுத்தூள் விராகன்ரண்டு
துட்டுப்போல் வைத்ததனைக் குளித்துக்கொள்ளே (33)

குளித்ததிலே சுத்திசெய்த சூதம்நாலு
கூடவிட்டு மறுபடியுந் துருசுதூவி
அளித்ததிலே உப்புத்தூள் மேற்குவித்து
அருகிலே சுத்திநன்றாய்ச் சிறுநீர் விட்டுத்
தெளித்துநன்றாய்ச் சிறுதீயாய்ச் சாமமூட்டித்
தீயெரியு மடுப்பின்மேற் கரண்டிவைத்துங்
களித்து நன்றாய்க் காய்ச்சிவிடச் சூதங்கட்டுங்
கனமாக வுருட்டியதைப் போடக்கேளே, (34)

கேளப்பா உததமமாந் தாளிச்சாற்றிற்
கிடந்தொருநா ளானபின்பு மத்தங்காய்க்குள்
நீளப்பா அவிபுடமாய்ப் போடுபோடு
நிலைக்கமட்டும் நூறுபுடம் நினைவாயப்பா
தாளப்பா லகிரிகொண்டே யிருக்கிக்கட்டுந்
தயவாக வாயிலிட லகிரியேறும்
மூளப்பா நிருவிகற்பச் சமாதிமூட்டும்
முன்னேது பின்னேது முத்தியாமே.

முத்திபெற வேணுமென்பா ருலகத்தோர்கள்
முத்திபுகுஞ் சேர்ந்தவிடங் காணார்காணார்
சத்தியென்ப இடகலைதான் மதித்தீயாகும்
தருவான பிங்கலைதா ணாதித்தன்தீ
சுத்தியாய் நடுநின்ற அக்கினித்தீ
சுடர்மூன்று மொன்றான லதுதான்முத்தி
பத்தியுட னிருந்தோர்க்கு யிதுதான்முத்தி
பாராத பேய்களுக்கு வேறுதானே.

வேறென்றே நினையாம லிடையில்வாங்கி
விதமான சுழிமுனையிற் கும்பஞ்செய்து
கூறென்றே பின்கலையில் ரேசகஞ்செய்
குருமுனிதான் சொன்னபடி யுள்ளேதாக்கு
வாறென்ற ஞாயிறுதான் திங்களுண்டு
மதியமுத மக்கினியா லழியலாச்சு
மீறென்ற நோய்களெல்லாம் நீறாய்ப்போச்சு
வேதாந்த தேகமது சித்தியாச்சே.

சித்திக்க வேணுமென்றால் வகையைக்கேளு
திடச்சித்த மாகநின்று தெளியச்சொல்வோம்
பத்திக்கச் சந்திரனிற் பூரகஞ்செய்
பரிவான சூரியனில் ரேசகஞ்செய்
சத்திக்க அக்கினியிற் கும்பியென்ன
சாற்றினேன் லக்ஷணத்தைச் சார்ந்துகேளு
உத்திக்கச் சந்திரகலை சோடசந்தான்
உற்றதொரு சூரியகலை பன்னிரண்டே.

பன்னிரண்டும் பதினாறும் இருபத்தெட்டும்
பருவமுட னிதுவெல்லா மங்கியாட்டம்
உன்னுமிதழ் பதினாறில் வாங்குவாங்கு
உண்மையுடன் பன்னிரண்டி னுள்ளேரேசி
வன்னிநின்ற வீடதிலே பானுவாழ்க்கை
மகத்தான ரண்டிடமு மறிந்தேன்யோகி
கன்னிநின்ற பரத்தினடி பதினாறப்பா
காலடிதான் பன்னிரண்டு கனிந்துபாரே. (39)

பாரப்பா பதினாறிற் பையவாங்கிப்
பதறுமற் பன்னிரண்டில் நிறுத்திபூது
நேரப்பா புரியஷ்ட மங்கிப்போச்சு
நேரான கொம்பிரண்டின் பாய்ச்சல்போச்சு
ஆரப்பா வெளியாக வாசிசொல்வார்
அருந்தவசு செய்வதற்குப் பலிக்குந்தானே
சீரப்பா சாதகமே செய்யும்போது
சிந்தைதனை ரண்டிதழின் நடுவேவையே. (40)

வைக்கவே சதாசிவனார் கிருபையாலே
மணித்தீப வொளிகண்டு பொருந்தினக்கால்
மெய்க்கவே நால்வாசி யெழும்பாதப்பா
மெய்தானே சிவமாச்சு சிவம்வேறில்லை
கைக்குள்ளே வெண்ணெய்வைத்து சீமையெங்குங்
கருதியே நெய்க்கலைந்த கதைதானென்ன
பொய்க்குள்ளே நிசமுண்டோ அலைந்தால்மோசம்
பொருந்துமோ பொருந்தாது பொய்யைநீக்கே. (41)

நீங்குவது துற்சனரை நீக்கவேணும்
நெறியுள்ள சிஷர்களைச் சேர்க்கவேணும்
ஓங்குவது மனத்துள்ளே வோங்கவேணும்
உயிர்நிலைக்க மதியமுத முண்ணவேணும்
தேங்குவது மெய்ஞ்ஞான போதத்துள்ளே
ஜெனனமில்லை மரணமில்லை தெளிந்துபாரு
பாங்குவது மதியமுத முண்ணுமென்று
பாடுகிறார் நாதாக்கள் பண்பாய்த்தானே. (42)

பண்பாகச் சொல்லுகிறேன் லட்சணத்தைப்
பார்த்தறிவீர் சிறந்திருந்த தண்ணீர்போல
நண்பாக மதியமுத மிறங்குமென்று
நம்பிக்கொண் டிருப்பார்கள் வருமோசொல்லு
கும்பமுனி சாஸ்திரத்திற் சொன்னமார்க்கங்
குறிப்பான நாக்கைமேல் நோக்கிக்கொள்வாய்
விம்பமதி வழியாகப் பன்னிரண்டை
விபரமுடன் கொள்வதுவே திங்கட்பாலே. (43)

பாலுண்ண வழியிருக்கும் வழியைச்சொல்வேன்
பதினாறிற் றந்திரமாய்க் கொண்டுகொண்டு
காலுண்ணும் பன்னிரண்டி லிருத்தியூது
கழியாது சந்திரனுந் தேய்ந்தானப்பா
நாலுண்ணும் மறலியவன் மாய்ந்தானென்றே
நஞ்சுண்ட சிவன்காலா லுதைபட்டு
மாலுண்ணும் மார்க்கண்டன் நித்யமானான்
வருஷமது கணக்கில்லை காயவாழ்வே. (44)

வாழவே யின்னுமொரு மார்க்கஞ்சொல்வோம்
மகத்தான கடுங்காரச் சுண்ணம்நேராய்
தாழவே அம்மியிலே நன்றாயாட்டித்
தண்ணீரில் கரைத்துவைக்கத் தெளிந்துபோகும்
சூழவே தெளிவிருத்துக் காய்ச்சவுப்பாம்
சுகமான வுப்பதனைச் செயநீராக்கி
வீழவே பீங்கானிற் செயநீர்விட்டு
விந்தையுடன் துருசுதனை யுடைத்துப்போடே. (45)

போடப்பா மேல்பீங்கான் கொண்டுமூடிப்
புனிதமாய்ச் சீலைசெய்து புதைத்துப்போடு
நீடப்பா துவாதசமாந் தினங்கடந்து
நேராக வெடுத்துப்பார் பசுமைநின்றால்
கூடப்பா முன்னீரை யிருத்துப்போட்டு
குணமான செயநீரைப் பின்னும்வார்த்துச்
சாடப்பா முன்போலே புதைத்தெடுத்தால்
சங்குபோல் வெளுத்தெல்லாங் கட்டிப்போச்சே. (46)

கட்டினதோர் துருசுவெள்ளை தனையுலர்த்திக்
கனமான புழுகோடு பூரஞ்சேர்த்து
திட்டமுட னூதிடவே சுண்ணமாகுந்
திடமாகக் கடுங்கார மேற்றக்கேளு
இட்டமுடன் தசயோக தீட்சைக்குள்ளே
யியல்பாகத் திருமூலர் பாடிவைத்தார்
தொட்டபடி யப்படியே காரமேற்றித்
தொழிலிந்த நூற்படியே செய்குவாயே. (47)

வாயப்பா பேசாதே துருசுச்சுண்ணம்
மகத்தான ரிஷியாலும் முனிவராலும்
தூயப்பா சித்திபெற்ற சித்தராலும்
சொற்பெரிய வேதைகண்ட வாதியாலும்
நேயப்பா லுண்டமதி யோகியாலும்
நிகழ்த்திடவே போகாது துருசுச்சுண்ணம்
பாயப்பா பூரணத்தில் வாங்கியிந்தப்
பன்னிரண்டிற் சேர்ந்தோர்க்குப் பலிக்குந்தானே. (48)

பலித்ததென்று வெளிவிட்டால் தலைதெறிக்கும்
பச்சையில்லாச் சுண்ணமிது பாருபாரு
சலித்திருந்து சோம்பிவிட்டா லாகாதப்பா
சாத்திரத்தை நம்பிக்கொண் டாய்ந்துபார்த்துக்
கெலித்ததோ ரொளிப்பையெல்லாம் நன்றாய்ப்பார்த்துக்-
கிருபையுடன் செய்தாக்காற் சுண்ணமாகும்
நலித்திடுவாய் வெளிவிட்டாற் சாபத்தாலே
நாடதனில் விண்ணிடியால் நசிப்பாய்நீயே. (49)

நசியாம லிருக்கவென்று லிந்தநீற்றை
நவிலாதே நவிலாதே புத்திசொன்னேன்
பசியாம லிருக்கவென்றால் துருசுச்சுண்ணம்
பண்புடனே வைத்திடுவாய் பசுமையில்லை
உசிதமுடன் முன்சொன்ன துருசையெல்லாம்
ஓகோகோ பசித்திடுதென் றெரிந்திடாதே
சசிபோலே வெளுத்ததெல்லாஞ் சுண்ணஞ்சுண்ணம்
தனிப்பச்சை யிருந்தாக்காற் குருவாம்பாரே.

குருவான துருசாலே சூதங்கட்டும்
குறிப்பறிந்து புத்திகொண்டு வாதம்பார்க்கும்
கருவாளி யாளுக்கா லெதுக்குமாகுங்
கருவறியா மாட்டுக்குச் சூதமென்றே
திருவாழுந் துருசுகண்ட வாதிபங்கில்
சிவன்சொன்ன படிதானே சொன்னேனப்பா
மருவிசும் மாயோக தீட்சைக்குள்ளே
வைத்தெடுத்த துருசுவெள்ளை வாய்க்கவென்றே. (51)

வாய்த்தாக்கால் வாதமடை திறந்துபோச்சு
வறுமையென்ற கலியெல்லா மகன்றுபோச்சு
சாய்த்தாக்கால் மனமதுவும் நீக்கலாச்சு
தணித்துருசு கட்டுமணி சூதத்தாலே
ஏய்த்தாக்கா லொன்றுமில்லை மூலமூர்த்தி
எளிதாகச் சொல்லவில்லை கருவாய்ச்சொன்னா
சேய்த்தாக்காற் பார்த்திருந்து சுண்ணஞ்செய்து
செப்பினேன் சிவனாணை திண்ணந்தானே. (52)

திண்ணமுள்ள சிங்கிவித்தை துருசுவித்தை
செய்யுமுன்னே மாட்டிவைத்த கருவைக்கேளு
எண்ணமுள்ள சிங்கிதனை யெரிக்கவென்றால்
இதமான கடுங்காரத் துடனேயப்பா
சுண்ணமுள்ள கடுங்காரம் வெள்ளைச்சுண்ணம்
களுவான கடுங்கார மென்னசாரம்
வண்ணமுள்ள காரமெத்த வேறினுக்கால்
வாதத்துக் காகுமிது வழலைநேரே. (53)

நேரென்று சொன்னதெல்லாஞ் சரிதான்பாரு
நினைவுகெட்ட மூடருக்குத் தோணாதப்பா
பாரென்று சொன்னபடி பார்க்கும்புத்தி
பண்போர்க்குக் கைக்கனிபோல் தோற்றுந்தோற்றும்
சேரென்று சித்தருட திறத்தைச்சொன்னோம்
தெரியாட்டாற் செகத்தோர்போல் திரிதல்நன்று
போரென்று புரியாதே தன்மையாகப்
பூவுலகிற் சஞ்சரிப்பாய் புத்திதானே. (54)

புத்தியாய்ச் சஞ்சரிக்க வித்தைகேளு
புனிதமுட னுறங்கையிலும் நடக்கும்போதும்
உத்தியுடன் சாயாம லிருக்கும்போதும்
உன்னியே வருஞ்சரங்கள் விடாமலேற்று
சத்தியென்ற பூரணந்தான் வாங்கிவாங்கிச்
சாகாம லிருத்திவைக்கு மிரவிபூடு
முத்திபெற அஷ்டாங்க மப்யாசிப்பாய்
முழுதுமே அஷ்டாங்க முரைத்திடாயே. (55)

உரைத்தபின்பு பிராணாய மூணிச்செய்வாய்
உரைத்ததிலே யஞ்சுவித முண்டாமப்பா
நிரைத்ததிருப் பூரகமாங் கும்பம்நாலு
நேரான ரேசகந்தா னொன்றுமூன்றும்
குறைத்திடாய் பீசத்திற் கூட்டிச்செய்வாய்
குணமாகப் பழகினபின் நிற்பீசத்தில்
கரைத்துமனச் சாதனைசெய் யகண்டவீதி
காணலாம் பூணலாங் கதியுண்டாமே. (56)

கதிபெறவே ஆதார மேறக்கேளு
கணேசருக்கு வீடொன்று மூலவட்டம்
துதியிதழோ நாலுண்டாம் அதற்குள்ளாகச்
சூலியென்ற வல்லபைக ணேசன்கூட
மதியொன்றி நந்தியென வாழ்ந்திருந்தார்
வான்கோழி முட்டையைப்போல் வாசிரண்டும்
பதியொன்றி நடனமிடுங் குறியைக்கண்டு
பாரின்கீழ் கணபதியைப் பணிந்திடாயே. (57)

பணியவே பூமியென்ற சுவாதிஷ்டானம்
பார்க்கையிலே நாற்கோண மிதழ்தானாறு
துணியவே சுயவாக்கில் நடனமிட்ட
சோதிசர்சோதியொடு பிரமன்கூடி
அணியவே நந்தியென வாழ்ந்தாரங்கே
அருகாகப் பிரணவமேல் நகாரத்தோடும்
தணியவே யிகாரமொன்றாய் நந்தியாகத்
தானிருந்தார் தியானித்து மேலேபாரே. (58)

பார்பதிமேல் பிறைபோலே மணிபூரத்திற்
பத்துவித மூதின் நடுவேயுகமகாரம்
மார்பதியும் லட்சுமியும் நந்திபோலே
வாழ்ந்திருந்தார் தியானித்து அனுகதந்தான்
நூர்பதிவாய் முக்கோண மிதமூரா று
நோக்குகின்ற சிகாரமொடு றீங்காரந்தான்
பார்பதியும் ருத்திரியும் ருத்திரன்கூடப்
பதிகொண்டார் நந்தியெனத் தியானஞ்செய்யே. (59)

செய்யவே விசுத்தியறு கோணந்தன்னில்
திகழூமிதழ் பதினாறு நடுவேவகாரம்
தையலென்ற ஸ்ரீங்கார மிரண்டுங்கூடிச்
சார்வாக நந்தியென வாழ்ந்தார்பாரு
உய்யவே தியானித்து மேல்வட்டத்தில்
உற்றவித மோரிரண்டிற் பத்துஞ்சேர
மையலுறக் கூடிநின்றார் நந்தியென்ன
வந்தனைசெய் யைம்பூத மனையிதாமே. (60)

மனையான லலாடவிழிக் குறியதாகி
வைத்திருப்பாய் மனந்தன்னைக் கண்பதித்துச்
சுனையான மதியமுத லகிரிகொண்டு
சுயம்பிரகா சத்தீபந் துலங்குமப்பா
முனையான மூக்குநடு விருக்கத்தீபம்
முன்போலத் தோணுமங்கே மோசமையா
நினையாம லிருந்தாக்கா லொன்றுமில்லை
நினைத்துப்பா ரனைத்துமங்கே நேருங்காணே. (61)

நேராத பாவிக்கு மோசம்மோசம்
நெறியேது குறியேது நேமமேது
பாராத லுத்தருக்குத் தீபமேது
பகலேது யிரவேது பாழாமெல்லாம்
தீராத வஞ்சகர்க்குச் சொர்க்கமேது
சித்தர்பதம் பணியார்க்கு வாதமேது
வாராத காலத்தில் வருமோஞானம்
வருங்கால மிளநீர்போல் வருங்கண்டாயே. (62)

கண்டதிலே சூட்சமதைச் செப்பக்கேளு
கைலாசஞ் செவிநடுவே வட்டமப்பா
விண்டிடும யேசன்மனை யிடதுநேத்ரம்
விருதுபெற்ற ருத்ரன்மனை வலதுநேத்ரம்
கொண்டதொரு மால்வீடு நாக்காமப்பா
கோகனக விதிவீடு மூக்காமையா
துண்டநுனி நடுவாக வெட்கடைக்கீழ்
தும்பிக்கை மூர்த்தியுட சூட்சந்தானே. (63)

தானான தூலத்தா தாரமாறும்
சாற்றினேன் சூட்சத்தா தாரமாறும்
மானான துவாதசத்தி னந்தஞ்சொல்ல
வாக்கேது நாக்கேது வழிதானேது
ஊனான வுடலேது பூதமேது
உண்மையாய் வாழ்ந்திருக்குந் தெய்வமேது
கோனான பிர்மமென்றுங் கூறலாகுங்
கூறுமென்று கேட்டாக்கால் கூறலேதே. (64)

ஏதென்று போகாமற் சாதிலிங்கம்
இதமாக வொருகட்டி யாகவாங்கி
மாதென்று சுழித்திபண்ண வகையைக்கேளு
வளமான தைவேளைக் குப்பமேனி
போதென்ற மிளகுதக் காளிவஸ்து
புனிதமாம் பனங்கள்ளு நெருப்புக் கையான்
சூதென்ற பழச்சாறு கலசத்தின்பால்
சுகமான கற்றாழை நீரிதோடே. (65)

நீரோடே பத்துவகை வகைக்குழக்கு
நேராகச் சுருக்கிட்டாற் சுத்தியாகும்
தாரோடே யிதைக்கட்ட வகையைக்கேளு
சாரத்தின் நீருழக்குச் சுருக்கிப்போடு
போரோடே துருசுவெள்ளை செம்பருத்தம்
பூவுக்கு ளிட்டுவைத்துப் பிழிந்துகொண்டு
வாரோடே நேர்பாகச் சுருக்குத்தாக்கு
வளமான குண்டுமணி யூகிநீரே. (66)

ஊசிநீர் தன்னோடே யாட்டிக்கொண்டு
உறவான நவச்சாரங் கெந்தியுப்பு
தேசிநீர் உப்புவெடி யுப்புக்காரம்
சித்திரையும் பூநீறும் சமனாய்ச்சேர்த்துக்
கூசிநீர் விட்டாட்டி மெழுகுபோலே
குண்டுமணி மெழுகோடு ரண்டுஞ்சேர்த்து
மாசிநீ ரில்லாமல் வெயிலுலர்த்தி
வைத்திடுவாய் வில்லைதனைக் கலசத்துள்ளே. (67)

உள்ளாக வைத்ததின்மே லோடுபோட்டு
உண்மையாய் ஓட்டுக்குச் சீலைசெய்து
விள்ளாத தமரிட்டுக் கதிரும்போட்டு
...கமான குழிவெட்டிச் சாணிக்குள்ளே
வள்ளலே டீங்காரனைப் பதித்துவைத்து
வாகாக அதிற்கலசந் தான்பதித்துக்
கொள்ளவே யெருவிட்டுத் தீயைபோட்டுக்
கொளுத்தினு லுமிநீரைக் கொட்டுகொட்டே. (68)

கொட்டியே புடத்தருகிற் சுத்திபண்ணிக்
கோ...மலத்தாற் பிள்ளையார் பிடித்துவைத்துத்
திட்டமு... னறுகுசிர மீதில்வைத்துத்
தேங்காயும் பாக்கிலையும் வர்க்கத்தோடு
இட்டமுடன் பச்சரிசி பழங்களெல்லாம்
இன்பமுட னேபடைத்துத் தூபங்காட்டிக்
கட்டளையாய்த் தீபமிட்டுச் சிந்தைகூர்ந்து
கருணைபெற வுபசாரஞ் செய்துபோற்றே. (69)

போற்றியே யீசான மூலைக்குள்ளே
பொன்கொடுக்கும் நிர்வாணி புகழ்ந்துமெச்ச
நாற்றிசையும் பந்தமிட்டு வஸ்துவோடு
நலமான சுத்திவடை யிகப்படைத்துத்
தேற்றியதோர் தூபதீ பங்கள்காட்டித்
திறமாக வுபசாரஞ் செய்துகொண்டு
ஏற்றியே வாசியந்தக் கதவின்பூட்டை
யிடித்தகற்றிக் குகைவாசல் காத்திடாயே. (70)

காத்திருந்த தவசாலே தயிலந்தானும்
கனமான பீங்கானி லிறங்கிநிற்கும்
பாத்திருந்து தயிலத்தை யெடுத்துக்கொண்டு
பரிவாக லிங்கத்தி லுழக்குத்தாக்கு
கோத்திருந்த கண்ணெல்லா மிறுகிக்கட்டும்
கொடிதான வன்னிதிர முருவதாச்சு
மூத்திருந்த தயிலத்திற் சுருக்குத்தாக்கு
முன்னுகத் துருசுவெள்ளை கழஞ்சிகூட்டே. (71)

கூட்டுடனே ஒருபலமுங் கட்டிநின்றார்
குப்பென்று பழுத்திருந்த தங்கந்தன்னை
மூட்டிடையா யுருக்கியதை யெடுத்துக்கொண்டு
மோகமுடன் சுத்திசெயத் தாம்புரத்தில்
நாட்டிடுவாய் செம்பிரண்டு களங்குமொன்று
நலமாகக் கொடுக்கையிலே வாங்கிக்கொள்ளும்
காட்டுகின்ற வேதையுட வெள்ளிபத்திற்
களங்கென்ற செம்பிரண்டு மூன்றுபோடே. (72)

போடையிலே வொன்றிட்டால் மாற்றுத்தானும்
போகாமல் நாலஞ்சு காணுங்காணும்
கூடையிலே மூன்றிட்டால் மாற்றேழெட்டு
குறையாது குறையாது சொர்னமாகும்
தேடையிலே யிவ்வேதை செகத்திற்கிட்டா
தெரிசித்தால் கயிலாசம் காணியாகும்
வாடையிலே யிதனாலே செலவுசெய்து
வாதசித்து போதசித்து வகையாய்ப்பாரே. (73)

பார்க்கையிலே வினைநாணுக்க மநேகங்கோடி
பலிக்குமப்பா மூடனுக்குப் பலியாதொன்றும்
சேர்க்கையிலே புத்திகண்டு சீஷர்சேரு
செப்புமுன்னே வாலையுட தீட்சைதன்னை
ஆர்க்கையிலே திரமுற்றால் புவனையேது
அப்புறத்திற் றிரிபுரையின் தீட்சையோது
மார்க்கமாம் யாமளையின் தீட்சையோது
வளமாகச் சாமளையின் தீட்சைசெப்பே. (74)

செப்பியபின் அம்பிகையின் தீட்சையோது
தெளிவானல் வல்லபையின் தீட்சையோது
ஒப்பியபின் கேசரியின் தீட்சையோது
உம்முடைய தீட்சையதன் பிறகுவோது
கொப்பிடவே ஆனந்தாள் தீட்சையோது
குவிந்தமன மொன்றுனல் மௌனிதீட்சை
இப்படியே தசதீட்சை தன்னைச்சொல்லு
இதன்பிறகு சிவதீட்சை யிசைக்கிறேனே. (75)

இசைக்கிறேன் ருத்திரனில் ரண்டுதீட்சை
இயல்பான மயேஸ்பரனில் ரண்டுதீட்சை
அசைக்கிறேன் சதாசிவனில் ஐந்துதீட்சை
அப்பனே பராபரத்தில் தீட்சையொன்று
திசைக்குள்ளே யிதன்பிறகு மௌனதீட்சை
செயமான பூரணத்தில் நிற்கச்சொல்லு
விசைக்குள்ளே தீட்சையெல்லாஞ் செப்பவென்றல்
விளம்புகிறேன் கும்பமுனி மச்சன்றனே. (76)

மச்சமுனி கொங்கணவர் பிரமர்மூலர்
வரையான கயிலாச சபையிலேறி
இச்சையுடன் கர்த்தாவைத் தெண்டனிட்டு
எளிதாகப் பாடாமல் மறைத்துப்போட
உச்சிதமாய்க் கிருபைசெய்யு மென்றுகேட்க
உத்தரவு தந்தபின்பு பாடினார்கள்
அச்சங்க ளில்லாமல் மூன்றுநாலும்
அன்புடனே ஆய்ந்தோய்ந்து சீஷர்க்கோதே. (77)

ஓதவென்று சட்டமுனி வெளியாய்ப்பாட
யுகங்கோடா கோடிகண்ட மூலநாயன்
கோதவென்று தீட்சைநூல் கிழித்துப்போட்டார்
கோபமவர்க் கில்லாட்டா விருக்குந்தீட்சை
வேதமென்று சட்டமுனி தீட்சைபார்த்தால்
மேதினியெல் லாம்நிறையுஞ் சித்தர்கூட்டம்
வாதுகொண்டு கிழித்ததனல் மூலர்தானும்
மறைப்பாகப் பாடிவைத்தா ரறிந்துகொள்ளே. (78)

அறியவே அஷ்டகர்ம வித்தைநன்றாய்
அடிமுடியுந் தெரிந்திடவே கொங்கணையர்
பிறியவே அட்சரத்தின் மாறல்சொன்னார்
பேர்பெரிய வாலையைச்சற் றேமறைத்தார்
குறியுடனே கொம்புசுழி யெட்டிரண்டுங்
குறுகலன்றி நின்றதுவே கர்மவாலை
வெறியான மூலரந்த மகாரங்கூட்டும்
விஞ்சையெல்லாங் கர்மவித்தை கைக்குள்ளாமே. (79)

கைக்குள்ளே கொங்கணர்சொற் கடைக்காண்டத்திற்
காணுமப்பா தீர்க்சமாய்க் கண்டுகொள்வாய்
பொய்க்குள்ளே போகாது வழலைகண்டால்
புகட்டுகிறே னென்வாலை வகையைக்கேளு
முக்கியமாய் தீட்சையிலே வாலையொன்று
மூட்டடா கருமத்தின் வாலையொன்று
தாக்கியதோர் கிரியைக்கு வாலையொன்று
தயவான யோகத்தின் வாலையொன்றே. (80)

ஒன்றான மௌனத்தின் வாலையொன்றே
உயர்ந்துநின்ற லட்சயத்தின் வாலையொன்று
நன்றான பராபரத்தின் வாலையொன்று
நலமான பூரணத்தின் வாலையொன்று
குன்றாம லிவ்வளவு மறிந்துகொண்டால்
கும்பிட்டு வந்துநின்று சித்திகூடும்
நின்றுடுஞ் சித்தியெல்லாம் உன்முன்பாக
நினைவிலறி விட்டகுறை நேர்மைதானே. (81)

நேர்மையுள்ள யெட்டிவிதை கொண்டுவந்து
நிலையான பொற்றலையின் சாற்றாலாட்டிக்
கூர்மையுள்ள வில்லைசெய்து கலசத்திட்டு
குப்பெனவே தீமூட்டித் தயிலம்வாங்கி
ஆர்மையுள்ள துருசுவெள்ளைத் தயிலத்திட்டு
அயக்காண்டிக் குள்ளாக லிங்கம்போட்டு
சீர்மையாய்ச் சுருக்கிடவே கட்டிப்போகுஞ்
சிந்தையிலா லோகசித்துத் தொழிலைப்பாரே. (82)

தொழிற்காண வங்கத்திற் கம்பியுப்புச்
சுண்ணத்தைத் தூவியே யுருக்கும்போது
கழிற்காண வெள்வங்கம் நொறுங்கித் தூளாம்
கலசமனுய்ச் சூதத்தை வாய்நீராலே
எழிற்காண கல்வத்தி லாட்டிவில்லை
யிதமாகக் காயவைத்து ஓட்டிவிட்டு
நழிற்காண மேலோடு கொண்டுமூடி
நலமாகச் சீலைசெய்து புடத்தைப்போடே. (83)

புடம்போட வங்கமது சுண்ணமாகும்
புகழான சுண்ணத்தை யுமிநீர்மேலே
இடம்போட வரைத்துநன்றய்த் துருசுக்கப்பி
இரவியிலே மூன்றுநாள் போட்டுப்பின்னே
தடம்போடக் காடையென்ற புடத்துக்குள்ளே
தவளம்போல் குருவானல் நீலியப்பா
மடம்போடச் சூதத்தைக் கட்டிக்கொண்டு
மத்தங்காய் தன்னலே யிறுக்குவாயே. (84)

இறுக்கினதோர் சூதத்தால் வாதம்பாரு
எங்கள்முனி யாட்டெல்லாஞ் சூதக்காட்டு
குறுக்கியவர் பாடினது வாதம்லட்சம்
கூறுகின்ற வயித்தியமோ யிரண்டுலட்சம்
தெறுக்கியவர் பலகற்பம் பாடல்லட்சம்
தெளிந்ததிலே பாடினது சிலதுகாண்டம்
மறுக்கிகின்று தவியாதே பொதிகைமூர்த்தி
மகத்தான நூல்பாரு மற்றுங்கேளே. (85)

மற்றதென்ன கயிலாசச் சட்டைநாதர்
வாதவழி திறந்துவைத்தார் நடந்துபாரு
முற்றென்ன மைந்தர்சுந்த ரானந்தற்கு
முறைசொன்ன ரவர்சொன்னர் கிளிஞ்சிச்சுண்ணம்
கற்றென்ன கொங்கணர்போ லார்தான் கற்றர்
கடைக்காண்ட முதலான நூலைப்பாரு
உற்றென்ன மச்சமுனி நன்றய்ச்சொன்னர்
உரையறிந்தால் வெகுசுளுக்கு உரையைப்பாரே. (86)

உரைப்பாகக் கருவூரார் பாடற்குள்ளே
யொன்றேனும் பிசகாது கருவைப்பாரு
வரைப்பாக இமயகிரி போகநாதர்
வைத்தாரே வெளியாக வாதநூலை
அரைப்பாகக் கோரக்கர் குருவண்டைத்தான்
அறியாம லிருந்துகொள்ளக் கருவைச்சொன்னார்
திரைப்பாக வேண்டுமென்றே சட்டைநாதர்
செப்பிவைத்த நிகண்டதனைத் திறமாய்ப்பாரே. (87)

திறமாகச் சித்தரிடஞ் சேரவென்றால்
செப்புகிறேன் முந்திமுந்தி பொய்யைநீக்கு
உறமாகச் சத்தியமே பேசுபேசு
ஒருபவமும் செய்யாதே கோபம்போக்கு
நிறமான உடலறிந்து கற்பமுண்ணு
நினைவாக லட்சயத்தைத் தொட்டுமூட்டு
குறமான வாசியெல்லாம் விட்டிடாதே
குருபூசை சிவபூசை சத்திதானே. (88)

சத்தியுட பூசையிலே நிற்கவேணும்
சத்துச்சித் தானந்த மறியவேணும்
சித்தியுட திறத்தையெல்லாங் காணவேணும்
ஜெகமெல்லாம் பொய்யென்று தள்ளவேணும்
பத்தியுடன் குருமொழியால் நிற்கவேணும்
பலகாலுஞ் சுழினையிலே பற்றவேணும்
முத்தியுட கூறைவிசா ரிக்கவேணும்
மூச்சுவழி தொடர்ந்தாக்காற் சேரலாமே. (89)

சேர்ந்தாக்கால் மலைகளிலே சித்தருண்டு
தென்பொதிகை வர்க்கமென்றால் சந்தோஷிப்பார்
கூர்ந்தாக்கால் சித்தர்களை நமஸ்காரஞ்செய்
குணமாக நடந்துகொண்டால் குளிகையீவார்
சார்ந்தாக்கால் நம்முடைய வர்க்கத்துள்ளே
சார்ந்துகொள்வா யகத்தீசர் தயவுண்டாகும்
ஆர்ந்தாக்கா லுலகத்தைத் தூஷியாதே
அதுவெல்லாம் வியாசரிஷி யமைப்புத்தானே. (90)

அமைத்திடவே சிவனுருத் தாரஞ்செய்ய
அப்படியே வியாசரிஷி நூலுண்டாக்கிச்
சமைத்திட்டா ருலகத்தை யாசையாலே
தள்ளுவது கடினமெத்த உலகவாழ்வைக்
குமைத்துவிட்டு மலையில்வரு மறிவுள்ளோர்கள்
குற்றங்கள் சொல்வார்க ளுலகேயேணி
இமைத்திடுமுன் னேற்றிவைக்கும் ஞானமேரு
ஏறலா முலகத்தை நிந்தியாதே. (91)

நிந்திக்க வேணுமென்றால் மனத்தினுள்ளே
நிந்திப்பாய் மாந்தர்களை நிந்தியாதே
சந்திக்க லாடநடு விழியையொட்டிச்
சந்திரனுஞ் சூரியனுந் தோற்றுமங்கே
வந்திக்க வேணுமென்று லொளியேதெய்வம்
வகாரசித்தி சிகாரத்தோ டுறவுசேர்ந்தால்
அந்திக்க மாட்டாது பிராணன்றானும்
அம்மம்மா வாசியைப்போ லில்லையென்றே. (92)

இல்லையில்லை வாசிவிட்டாற் காயந்தானும்
இரண்டுகண்ணும் பாராட்டால் ஞானம்பொய்யே
தொல்லைதொல்லை வாதம்பூ நீற்றைவிட்டால்
சுட்டலைந்த வாதிகளே பூவேயாதி
கல்லைகல்லை பூவிருந்துஞ் சூதந்தன்னைக்
கட்டறியோ மென்றுரைக்குங் கசடரேநீர்
வல்லைவல்லை யென்றிருப்பீர் புகைபோலேமன்
வழிப்பட்டா லுடல்வாதம் மண்ணைப்போமே. (93)

மண்ணடியிற் கணபதியாண் பெண்ணுமாகி
மகத்தான அண்டபதம் புவனமெல்லாம்
திண்ணமுடன் தாங்கிநின்றால் மூலாதாரச்
செயலறிந்தோன் சிவயோகி ராஜயோகி
விண்ணடியின் பூரணத்தின் கதிர்லோங்கி
மேலாகப் பத்தெட்டா யிருந்தவீட்டிற்
கண்ணிரண்டும் வைத்தவர்க்கு ஞானமெய்துங்
கைம்முறையா யடிக்கடிதான் சொல்வாரரோ. (94)

ஆரமென்ற ஆபரண சத்தியாலே
அசத்தியங்க ளுண்டாச்சு ஐயாஐயா
தாரமென்ற விட்சேப சத்தியாலே
சத்தியங்க ளுண்டாச்சு மைந்தாமைந்தா
வீரமென்ற மனமல்லோ ஞானத்தாதி
வெளியான மனமதுதான் போதமையா
கோரமென்ற மனமெங்கே ஆய்ந்துபாரு
குருசொல்லப் போதமது வருகுந்தானே. (95)

தானான உலகத்தோர் விரதமென்று
சாதிப்பார் மதிகதிரிற் புகுந்தகாலம்
கோனான சத்திசிவஞ் சேர்ந்தமார்க்கம்
குறியறியார் நெறியறியார் கூகூவென்பார்
ஊனான உடலுக்குள் முகவட்டத்துள்
ஒளிபோலே நிற்குதப்பா அகாரபீடம்
தேனான மணிபூர கத்துக்குள்ளே
செயமாகப் பீடமங்கே சிறந்தவாறே. (96)

வாறுகொண்ட பூரணத்தில் வகாரமோங்கும்
வளமான துவாதசத்திற் சிகாரம்நிற்கும்
கூறுகொண்ட விந்தநா லெழுத்துமொன்றாய்க்
கூட்டினா லமாவாசை துலங்கும்பாரு
பேறுகொண்டு சேர்ந்திடத்தே சிவனாட்டம்
பிறியாத பரையாட்டம் சபைதானங்கே
தூறுகொண்ட மாயையெல்லாம் விரிந்ததங்கே
சொர்க்கமங்கே நடுச்சாமங் கூடுகூடே. (97)

கூட்டுதற்கு வகைகேளு வஸ்துசத்தி
குணமுடனே வாயாட்டால் மூலநாயன்
பாட்டிலே சொல்லிவைத்த லேகியத்தைப்
படைத்துநன்றாய்ச் சுழிமுனையி னொளிக்குள்காட்டி
நாட்டமுடன் கொள்ளுமடா யுள்ளேகொண்டு
நாதாந்தப் பேரொளியை நாடுநாடு
தேட்டமிந்தப் பலனையல்லோ பிதிர்க்குத்தெத்தம்
செய்குவாய் தென்புலத்தார் கதிகொள்வாரே. (98)

கதிகொண்டேன் மதிகொண்டேன் பூரணத்தைக்
கழியாமற் கட்டுதற்கு வகையுஞ்சொன்னேன்
நதிகொண்ட செஞ்சடையீ ராட்டஞ்சொன்னேன்
நாதாக்க ளிடஞ்சேரப் புத்திசொன்னேன்
நிதிகொண்ட வாதவித்தை யுண்மைசொன்னேன்
நிர்க்குணந்தான் முதலட்ட புரியுஞ்சொன்னேன்
பதிகொண்ட லாடபீ டத்தின்மேலே
பாயாம லோர்வழியாம் மார்க்கந்தானே. (99)

தானென்று பேசுமப்பா யிந்தநூல்தான்
தாரணியிற் கிடையாது கிடைத்தபேர்கள்
வானென்ற சிங்கிவித்தை துருசுவித்தை
வகையான வாசிவித்தை வெளியாய்ப்பாடி
ஊனென்ற காயத்தைச் சித்திசெய்ய
உண்மைசொல்லி யிருப்பதினாற் கொடுக்கமாட்டார்
நானென்று தெண்டனிட்டா லிரங்கியீவார்
ஞானநூல் சதமிதுசா யுச்சியமுற்றே. (100)

போகர் ஞான சாராம்சம் ௱.

முற்றிற்று.





மதுரை மேலமாசிவீதி மணிமந்திர அவுஷதர் மயில்சுவாமியவர்களிடம் வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

பரமபதி துணை.

நாற்பத்தோராவது:

போகமஹாரிஷி திருவாய்மலர்ந்தருளிய

# மெய்ஞ்ஞானபோதம் உ.



நாட்டமுடன் வாசியைத்தான் பீசத்துள்ளே
நன்றாக வுள்ளிருத்தி யழுத்திக்கொண்டு
தேட்டமுடன் ஞானவெளித் தேட்டுக்கப்பா
சிவசிவா ஒருவருக்கும் வெளிவிடாதே
ஆட்டமுடன் நந்தியுட வேரைப்பற்றி
அணுகுமுன்னே அமுதத்திற் செல்லவைக்கும்
பாட்டமுடன் நாசிமுனைக் குறிப்பைவைத்துப்
பார்க்கையிலே அமுதநிலை பிரியும்பாரே. (1)

பாரப்பா சடலம்வே றென்றைப்பற்றிப்
பரவியே கெட்டலைந்து போகவேண்டாம்
ஆரப்பா ஆத்மாவே சூட்சப்பாவை
அப்பனே அதிலிருக்கும் விபரமெல்லாம்
சீரப்பா வொன்றுமில்லை வீடாருகும்
சிறந்துநின்ற நந்தியதே பரமேயாகும்
வீரப்பா வொன்றுமில்லை நந்திகண்டால்
மெய்ஞ்ஞான போதகமும் அமுதமுற்றே. (2)

போகர் மெய்ஞ்ஞானபோதம் உ.

முற்றிற்று



ஸ்ரீ வில்லிபுத்தூரைச்சேர்ந்த மம்முசாபுரம் அழகநம்பிக்கோனரவர்கள் குமாரர் வன்னியக்கோனரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.





குருவே துணை.

அகஸ்தியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானச்சுருக்கம் க.



உன்னும்போ துயிரெழுத்தை யுயரவாங்கி
　　உறங்குகின்ற போதெல்லா மதுவேயாகும்
பெண்ணின்பா லிந்திரியம் விடும்போதெல்லாம்
　　பேணியே வலம்நோக்கி நிலைத்தாயாகில்
தின்னுங்கா யிலைபழங்க ளருந்தும்போதும்
　　தினந்தோறு மிப்படியே செலுத்தவல்லார்
மண்ணூழி காலமட்டும் வாழ்வார்பாரு
　　மறலிகையி லகப்படவு மாட்டார்தானே. (1)

# ஷையார் ஞானச்சுருக்கம் உ.



விந்துநிலை தனையறிந்து விந்தைக்கண்டால்
　　விதமான நாதமது குருவாய்ப்போகும்
அந்தமுள்ள நாதமது குருவாய்ப்போனால்
　　ஆதியந்த மானகுரு நீயேயாவாய்
சந்தேக மில்லைபுலத் தியனேஐயா
　　சகலகலைக் கியானமெல்லா மிதுக்கொவ்வாது
முந்தாநாள் இருவருமே கூடிச்சேர்ந்த
　　மூலமதை யறியாட்டால் மூலம்பாரே. (1)

மூலமதை யறிந்தாக்கால் யோகமாச்சு
　　முறைமையுடன் கண்டாக்கால் வாதமாச்சு
ஜாலமில்லை கண்டவருன் வசமாய்நிற்பார்
　　சாஸ்திரத்தைச் சுட்டெரிந்தா லவனேசித்தன்
சீலமுள்ள புலத்தியனே பிரமயோகி
　　செப்புமொழி தவறாம லுப்பைக்கண்டால்
ஞாலமதில் மயேந்திரமாஞ் சோதிதன்னை
　　நாட்டினாற் சகலசித்தும் நல்கும்முற்றே. (2)

அகஸ்தியர் ஞானச்சுருக்கம் க, உ முற்றிற்று.





உ

குருவேதுணை

அகஸ்தியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞானச் சுருக்கம் ௩.



எட்டிரண்டும் பத்தகர உகரமாகி
    எண்ணியே ஆண்பெண்ணு மானவாறு
கட்டுடனே சாதியவள் ரூபமாகி
    கன்னியவள் வாலையடா வாமபாலைத்
தட்டுடனே அங்கென்று ரவியில்வாங்கித்
    தனித்தவொரு மதியில்விட்டுத் தகமைதீர்ந்து
பட்டுடனே இப்படிநீ கலவிசெய்து
    பராபரைக்குச் சுண்ணமது கொடுத்துவாங்கே (1)

வாங்கியே பீங்கானிற் பளிச்சென்றேதான்
    வளமான சரக்கஞ்சு தாரங்கெந்தி
தாங்கியே பூரலிங்க ரசமுஞ்சேர்த்துச்
    சாரமுள்ள கல்வத்தி விட்டுஆட்டித்
தேங்கியே வில்லைசெய்து ரவியிற்போடு
    திரமான கெசபுடத்திற் பற்பமாகும்
ஆங்கியே சிதம்பரத்தி னையன்றோடே
    ஆதிகுரு கொடுக்கவொரு மாற்றுப்பத்தே. (2)

பத்தான மாற்றெடுத்துத் தகடுதட்டிப்
    பற்பமது திரிகோணச் செலத்திற்பூசி
அத்தருளாற் புடம்போடப் பற்பமாகும்
    அதிகமுள்ள பற்பத்தைத் தின்றுபாரு
சித்தருளாற் றேகம்பத் தரைதாறைகும்
    சிவன்சொன்ன செந்தூரம் வழலைகூட்டிப்
பத்தியுடன் வாலையடா தேகந்தேகம்
    புதுமையிது வாகுமப்பா மூன்றுமுற்றே, (3)

அகஸ்தியர் ஞானச் சுருக்கம் ௩.

முற்றிற்று.



உ

கணபதி துணை.

# முதலாவது புஸ்தகம்.

---

தேவரிஷி முனி சித்தர்கள் திருவாய் மலர்ந்தருளிய

## யோக ஞான சாஸ்திரத்திரட்டின்

அட்டவணை.

சாஸ்திரங்களின் அட்டவணை

முற்றிற்று.



குருவே துணை.

தேவ, ரிஷி, முனி, சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# யோக ஞான சாஸ்திரத் திரட்டின்

இரண்டாம் பாகத்தில் சொல்லியிருக்கிற

## முக்கிய விஷயங்கள்.

ஐயா! இதற்கடுத்த இரண்டாம்பாகத்தி லியம்பாநின்ற போக மகாரிஷி, காலாங்கிநாதர், கமலமகாமுனிவர், இடைக்காட்டுச்சித்தர், புண்ணாக்குச் சித்தர், கொங்கணர், குதம்பைச் சித்தர், அம்பிகானந்தர், டமரானந்தர், வால்மீகர் முதலிய தபோதனர்களாற் சொல்லப் பெற்ற இருபத்தாறு சாஸ்திரங்களில் விளங்கவுரைக்கும் விஷயங்களை இதனடியிற் பார்க்கலாம். அவையாவன:—

42-வது. போகமகா ரிஷி உபதேச ஞானம் நூற்றைம்பதில், வாசியால் சுழிமுனை வாசல் திறக்கவும், வல்லபமூலவட்சரமும், அடி முதல் நுனிவரை அவயவப் பழக்கமும், துவாதசாந்தம் சுருதிமுடிவு மதியமுதம் குண்டலிசத்தி நந்தியொளியும், ரேசக பூரக கும்பகம் பிராணாய வரிசையும், காயகற்பம் யோகம் ஞானம் வாதம் பஞ்சபூத தேவதையும், அஷ்டமாசித்தியும், புருவநடு அண்டவுச்சி வெளி யொளியும், காயத்திரி மூலமந்திரசெபம், பூரணசொரூபமும், அஷ்ட சத்தி தீட்சாவிதியும், நிருவிகற்ப சமாதி, ரசகுளிகை, பரிக்குரு, செந்தூரம், செயநீர், மயிர்ப்பாலம், நெருப்பாறு தாண்டி பிர்மத்தி லயிக்கமாகும் விபரங்களையும்;

43-வது. காலாங்கி நாதர் உபதேச ஞானம் முப்பத்துநான்கில், யோக ஞானத் துதவியான வாசியும், கேசரத்திற் சிலம்பி நாதமும், அண்டபிண்ட மவுனபீடம், ஓங்காரக் கம்பம், நந்திவீடு, சுழிமுனை, பிராணனின் மூலம், சிவயோகமார்மமும், மதியமுத முண்ணும் விபரங்களையும்;

44-வது. காலாங்கிநாதர் ஞான சூஸ்திரம் இருபத்தொன்பதில், நாகம், வங்கம், துருசு, குரு, குளிகை, வேதை, கட்டு, சுண்ண முதலிய மருந்துகளையும், அதற்குரிய விபரங்களையும்;

45-வது. காலாங்கிநாதர் ஞான விந்தாகசியம் முப்பதில், சதுரகிரியிலுள்ள சார்பு கெவிகளில் தனித்தனிக் குகைகளும், அதில் வசிக்கும் அனந்தஞ் சித்தர்கள் பெயரும், ஆங்காங்குள்ள ஊற்று ஓடைத் தீர்த்தமும், மூலிகை யிருக்குமிடமும், அதன் மர்மங்களைப் பற்றிய விபரங்களையும்;

46-வது. காலாங்கிநாதர் இந்திரசால ஞானம் நாற்பத்தாறில், இந்திரஜாலம், வாதம், பிடரிவழி, அமுததாரை புரளாதோடலும், தமர்வாசல் திறந்து சுழிமுனைத் தோற்றம் முதலிய விபரங்களையும்;

47-வது. காலாங்கிநாதர் பூஜாவிதி எண்பதில், நவகோண சக்கர அட்சரமும், நவக்கிரக மானதபூசையும், சுதிமோட்ச சாதனங்களுக்குரிய கற்பங்களும், அநேக சித்துகளடங்கிய மந்திர எந்திர விபரங்களையும்;

48-வது. கமலமுனிவர் ஞான சைதன்யம் பதினெட்டில், பூஜாவிதி பஞ்சாட்சர மவுனபூரணம் ரேசக பூரக கும்பகம், சூரிய சந்திரனக்கினி மண்டலங்களும், சுடரோனம்புலி சுழினைபிராணயம், சிலம்பொலிநாதம் சிவயோக சாதன பூரணதீட்சையின் விபரங்களையும்;

49-வது. கமலமுனிவர் ஞான சூஸ்திரம் எழுபத்தாறில், சவுக்காரக்குரு சார்புறவேதை செயநீர்துருசு சேர்ந்திடுசுண்ணம் சிவசத்தி தீட்சை குண்டலிசத்தி யோகஞான ஆதியந்த விபரங்களையும்;

50-வது. இடைக்காட்டுச் சித்தர் ஞான சூஸ்திரம் எழுபதில் சிவயோகம் ஜீவன் முத்தி கற்பம் செயநீர் சுண்ணம் வேதை செந்தூரம் துருசுகுரு மெழுகு வழலை கெவுனமணி விபரங்களையும்;

51-வது. இடைக்காட்டுச் சித்தர்பாடல் நூற்றுமுப்பதில், பிர்மசொரூபத்தின் நிலைமையும், சகல ஜீவசெந்துக்களும், பிர்மமயமென்பதையும், மனமொடுங்கினால் சகலவிவகாரங்களுமொடுங்குமென்பதையும், இதற்குரிய காயசித்தி விபரங்களையும்;

52-வது: புண்ணாக்குச் சித்தர் செயநீர் நாற்பத்தைந்தில், முப்பூச் சுண்ணம் செயநீர் வழலை வாதம் குரு சரக்கின் கட்டு கற்பம் முத்திமோட்ச விபரங்களையும்;

53-வது: புண்ணாக்குச் சித்தர்பாடல் இருபதில், மனோன்மணியாள் மலர்ப்பாதங் காணும் வகையும், உலகம் மாயாரூபமென்ற விபரங்களையும்;

54-வது. கொங்கணர் சூட்ச ஞான தெரிசனம் ஆறில் நந்திதெரிசனமும் நாதாந்தப் பரஞ்சோதி சூட்சமுதலிய விபரங்களையும்;

55-வது. கொங்கணர் திருமந்திர ஞானம் பன்னிரண்டில்; பராபரதீப வொளிகாண மந்திரமும், இடகலை பிங்கலையால் ரேசகபூரக கும்பகமும், உப்பு சிவன் சத்தியென்ற சுண்ணம் முதலிய விபரங்களையும்;

56-வது. கொங்கணர் மெய்ஞ்ஞானம் பதிமூன்றில், அஞ்சுபூதங்களும் ஒன்றினுள்ளொன்று யொடுங்கி நின்று, அறிவே நாமென்றெண்ணி சமாதிகூடி மதியமுதம் புசித்து பிரமத்தில் அயிக்கமாகும் விபரங்களையும்;

57-வது: கொங்கணர் சுத்த ஞானம் பதினாறில், சகல காரியங்களுக்குஞ் சாந்தமனமே காரணமென்றும், உயிரெழுத்துகளுக் குற்ற மர்மங்களையும் நந்தியின் பிரகாச விபரங்களையும்;

58-வது. கொங்கணர் உற்பததி ஞானம் இருபத்தொன்றில், சுக்கில சுரோணித பிராணனோடு அபானவாய்வு பத்தும் மாந்தர்கள் பிறந்தவகையும் சரியை, கிரியை, யோகம், ஞான விபரங்களையும்;

59-வது. கொங்கணர் ஞான வெண்பா நாற்பத்தொன்பதில், சித்தாந்தமார்க்கமாய்த் தேசியைக் காலாகக்கொண்டு, சாதனமென்னும் ஏணியிலேறித் தன்னைத்தானே தெரிதற்குரிய ரேசக பூரக கும்பகம் முதலிய கேசரத்தின் விபரங்களையும்;

60-வது. கொங்கணர் ஞான சைதன்னியம் நூற்றுப்பதினொன்றில், சரியை, கிரியை, யோகம், ஞான, பூரணமும், பிராணவாய்வுடன் தசவாயுக்களின் தொழிலும், அவைகள் வசிக்குமிடமும், தொண்ணூற்றாறு தத்துவங்களும், சத்திதீட்சை சிவதீட்சை தசதீட்சை யென்ற விபரங்களையும்;

61-வது. குதம்பைச் சித்தர் ஞான சூஸ்திரம் பதினெட்டில், கலைக்கியான உயிரட்சரமும், குளிகை தயிலமுறை முதலிய விபரங்களையும்;

62-வது. குதம்பைச்சித்தர் பாடல் இருநூற்று நாற்பத்காறில், பிரபஞ்சம் கனவென்றும், பேரின்பமே ஞான நிலையென்றும், சர்வம் பிரமமயமென்றும் சொல்லிய விபரங்களையும்;

63-வது. அம்பிகானந்தர் ஞானோபதேசம் இருபத்தைந்தில், யோகஞான சாதனக்குறிப்பும், கற்பம், குளிகை, குருசெயநீர், சுண்ணம், செந்தூரம், உருக்கினம், கட்டு, வழலை, முப்பு, முதலிய விபரங்களையும்;

64-வது. டமரானந்தர் சிவநூல் சூஸ்திரம் பதினேழில், சாகாத்தலை வேகாக்கால் போகாப்புனல், இடகலை பிங்கலை சுழிமுனை, வஸ்து நிலைமைகளையும், குருமுடிக்கும் விபரங்களையும்;

65-வது. வால்மீகர் சிவயோக ஞானம் பத்தில், இடகலை பிங்கலை சுழிமுனையில் நின்று சிவயோகஞ் செய்து கோடாகோடி காலம் வரை அழியாத ஜீவன் முத்தி பதமடையும் விபரங்களையும்;

66-வது. வால்மீகர் நாடிசாஸ்திரம் பதினொன்றில், வாத பித்த சிலேற்பன நாடியும், தேகத்தில் அமைந்துள்ள வியாதிகளின் விபரங்களையும்;

67-வது. வால்மீகர் சுத்தஞானம் பதினாறில், சரியை கிரியை யோகம் ஞானம், வாசியின் குறிப்பும், தன்னை யறியும் விபரங்களையும் சொல்லப்பெற்றிருக்கிறது.

இந்த முதற்பாகத்திற் சிற்சில இடங்களில் மறைபொருளாய் வழுத்திய வாக்கு வல்லப வழிதுறை யாவுந் தெரிய வேண்டுமானால் இரண்டாம்பாகத்தில் ஒவ்வொரு நுட்பங்களுக்குரிய உண்மையான விபரங்களெல்லாம் நன்றாய் விளங்கும். ஆகையால் யாவரும் இரண்டாம் பாகப் புஸ்தகத்தையும் சேர்த்துப்பார்க்கும்படி கோருகிறேன்.

இப்படிக்கு,

இ. ராம. குருசாமிக்கோன்,

புஸ்தகஷாப், புதுமண்டபம் மதுரை.

